12th February 1958]

MR. SPEAKER : The question is—

"That leave be granted for the introduction of the Madras Cultivating Tenants Protection and Payment of Fair Rent (Amendment) Bill, 1958."

The motion was put and carried.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I introduce the Madras Cultivating Tenants Protection and Payment of Fair Rent (Amendment) Bill, 1958.

### IV.—DISCUSSION ON THE GOVERNOR'S ADDRESS—*cont.*

MR. SPEAKER : We shall now proceed with the discussion on the Governor's Address. Yesterday, Sri Elumalai could not finish his speech. I now give him permission to speak. The Hon. the Minister for Industries and the Hon. the Minister for Home are participating in the debate to-day. That means, an hour and a half will go. Many hon. Members have given their names to me to speak. So, either the House must sit in the afternoon or I shall be forced to cut down the time-limit for each hon. Member to five minutes. I leave it to the House to decide it. The difficulty is, hon. Members do not participate in the debate on the first day and I have to go begging for speakers. Now I have got twenty names with me. How is it physically possible for me to call all? If the House is desirous of permitting me to cut down the time-limit to five minutes, I may be told so. Or does it want to sit in the afternoon?

SRI P. G. KARUTHIRUMAN : We may sit in the afternoon.

MR. SPEAKER : Yes. That means, we will sit till 1-30 p.m. now and meet again at 3 and sit till 5 in the afternoon.

The existing time-limit of ten minutes will continue.

* SRI T. P. ELUMALAI : கனம் சபாநாயகர் அவர்களே, நேற்று பேசிய பேச்சின் தொடர்ச்சியை நான் இப்போது பேச முன்வருகிறேன். 9-52 a.m.

கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மாகாணத்தில் இதற்கு முன்னால் முதல் அமைச்சராக இருந்த கனம் ராஜாஜி அவர்களை இந்த தி.மு.க. கட்சியைச் சேர்ந்தவர்களெல்லாம், அவர்கள் மகா மேதை என்றும் அவர்கள் தான் தமிழ் நாட்டின் வழி காட்டியென்றும் இப்போது போற்று கிறார்கள். ஆனால் இதற்கு முன்னால் அவரை சூழ்ச்சிக்காரர் என்றும், எந்தக் காரியத்திலும் அவரை நம்பக்கூடாது என்றும் அப்படி நம்பினால் தமிழ் நாட்டின், தமிழரின் வளர்ச்சி குன்றிவிடும் என்றெல்லாம் பிரசாரம் செய்த இதே தி.மு.க. கட்சிக்காரர்கள் இப்போதுஅவரிடம் "நீங்கள் தாம் தமிழ் நாட்டின் வழிகாட்டி, நீங்கள்தாம் எங்களுக்கு வழி வகுத்துக் கொடுக்கவேண்டும்" என்றும் சொல்லுகிறார்கள். கனம் ராஜாஜி அவர்கள் எப்போதுமே இவர்களை நம்பவில்லை. எப்போதுமே உண்மையேச் சொல்லி வருகிற முறையில் அவர்களுக்கும் (தி.மு.க. தலைவருக்கு) சொல்லி இருக்கிறார்கள். அவர்கள் என்ன சொன்னார்கள். ஆட்சி மொழிபற்றி முடிவு செய்யக்கூடிய கட்சித் தலைவர்கள் கூட்டத்திற்கு கனம் அண்ணா துரை அவர்கள் ஏன் சென்றார்கள் என்று சொன்னார்கள். அதன் பொருள் என்ன. கட்சித் தலைவர்கள் பேசிய பேச்சில் கலந்துகொண்டு அதன் முடிவுகளை செயலளவில் கொண்டுவரக்கூடிய தன்மையில்லாமல்

[Sri T. P. Elumalai] [12th February 1958

இருக்கும் தற்சமயம் அதற்கு மாருக என் ஆலோசனைக் கூட்டத்திற்கு போனீர்கள் என்று அவர்களுக்கு நல்ல ஆலோசனை கூறியிருக்கிருர்கள். அப்படித்தான் அதற்கு முன்னுலும் பெரியார் சொல்லியிருக்கிருர். நீங்கள் சட்ட சபைக்குப் போகவேண்டாம், வெளியில் இருந்துகொண்டே சீர் திருத்தம்பற்றிப் பேசிக்கொண்டிருங்கள், என்று இதற்கு முன்னுல் தந்தை, தனயன்மார்களுக்குச் சொல்லியிருக்கிருர். இதையெல்லாம் விட்டு விட்டு, அவர்கள் சமயத்திற்குத் தகுந்தாற்போல் இவர்கள் வழி காட்டிகள் சொல்வதை எடுத்துக்கொண்டு வேண்டாதவைகளை விட்டு விடுவது அவர்கள் செயலாக இருக்கிறது. இது தமிழ் நாட்டு வளர்ச்சிக்கு, தமிழர் பண்புக்கு உதவியாக இருக்காது என்பதை மட்டும் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் கனம் அம்மையார் அவர்கள் சொன்னுர்கள்—அதாவது கனம் சத்தியவாணிமுத்து அம்மையார் சட்டசபையில் பேசியபோது சொன்னுர்கள்—கவர்னர் அவர்கள் சில உண்மையை ஒப்புக்கொண்டிருக்கிருர் என்று பேச்சிலே அவரவர்களுக்கு எப்படியெல்லாம் தொகுத்துக்கொள்ள முடியுமோ, அவரவர்கள் கருத்துக்கு இழுத்துவர முடியுமோ அப்படி இழுத்துவர சாமர்த்தியம் உண்டு என்று தெரிவித்துக் கொள்கிறேன். கவர்னர் பெருமான் அவர்கள் சொன்னுர்கள் "தேசிய ஒற்றுமையிலேதான் இந்த நாடு முன்னேற வேண்டும். தேசிய ஒற்றுமை வளருவதில்தான் நாட்டின் வளர்ச்சி இருக்கும். ஆகவே நான் அஸ்ஸாம் மாகாணத்திலே இருந்தபோது தேசீயத்திற்கு விரோதமாக அங்கும் கட்சிகள் இருந்தன. அவைகளை எதிர்த்து போரிட்டு முன்னேறியாகவேண்டியிருந்தது. அப்படி நான் அங்கே தேசீய விரோதமாக இருந்த அவர்களை எதிர்த்துப் போராடுகிற தன்மை என்னிடத்தில் இருந்திருக்கிறது. தேசீயத்திற்கு விரோதமாக இருப்பவர்களை எதிர்க்கவேண்டியதிலே மக்கள் முன் வந்து எனக்கு—காங்கிரஸ் ஆட்சிக்கு—காங்கிரஸ் கட்சி ஆட்சிக்கு—ஒத்துழைப்புக் கொடுங்கள்" என்கிற முறையிலே அமைந்திருக்கிறதேயொழிய, ஏதோ இங்குள்ள இவர்கள் கருத்து நிலைமையை ஒப்புக்கொண்டதாகச் சொல்ல முடியாது.

SRI C. N. ANNADURAI : கவர்னர் பெருமான் காங்கிரஸ் கட்சியின் வெற்றிக்குப் பாடுபடுவதற்காக வந்திருப்பதாக கனம் அங்கத்தினர் சொன்னுர்கள். கவர்னர் கட்சிக்கு அப்பாற்பட்டவர்கள் இப்படிப் பேசுவது சரியா ?

MR. SPEAKER : அவர்கள் அப்படிச் சொல்லவில்லை.

SRI C. N. ANNADURAI : கவர்னர் தம் உரையிலே அப்படிக் கூறுவதாக கனம் அங்கத்தினர் கூறுகிருர்கள். காங்கிரஸ் ஆட்சியைக் காப்பாற்ற பாடுபடத்தான் வந்திருப்பது போன்று சொல்வதாகச் சொல்கிருர்கள்.

MR. SPEAKER : நீங்கள் பேசும்போது அப்படியில்லையென்று பேசலாம். நான் ஒன்றும் சொல்லமுடியாது.

SRI C. N. ANNADURAI : என்னுடைய பாயிண்ட் ஆப் ஆர்டர் என்ன ஆவது ?

MR. SPEAKER : இது எப்படி பாயிண்ட் ஆப் ஆர்டர் ஆகும் ?

SRI C. N. ANNADURAI : கவர்னர் அவர்கள் காங்கிரஸ் கட்சியைக் காப்பாற்றும் பொறுப்பு எடுத்துக்கொண்டு பேசியிருப்பதாகச் சொல்வது சரியாகுமா என்று கேட்கிறேன்.

MR. SPEAKER : எப்படி, எப்படி ?

SRI C. N. ANNADURAI : கனம் அங்கத்தினர் அவர்கள் கவர்னர் பேசும்போது 'காங்கிரஸ் கட்சியை, காங்கிரஸ் ஆட்சியைக் காப்பாற்றத்தான் வந்திருக்கிறேன், எனக்கு அதில் அஸ்ஸாம் நாட்டிலே பழக்கம் உண்டு' என்று சொல்வதாகச் சொல்கிருர்.

12th February 1958]

MR. SPEAKER : அப்படியா சொன்னீர்கள் ?

SRI T. P. ELUMALAI : நான்தான் அதற்குப் பதில் சொல்ல வேண்டும்.

MR. SPEAKER : நீங்கள் சற்று என்ன சொன்னீர்கள் என்று சொல்லுங்கள்.

SRI T. P. ELUMALAI : பாயிண்ட் ஆப் ஆர்டர் கேட்டுவிட்டு அவர்கள் இடத்திலே உட்காராமல் நின்று கொண்டேயிருக்கிறார்கள். நான் எப்படிச் சொல்வது ?

MR. SPEAKER : சரி, இப்பொழுது சொல்லுங்கள்.

SRI T. P. ELUMALAI : காங்கிரஸ் ஆட்சி என்று சொன்னேன். காங்கிரஸ் கட்சி என்று சொல்லவில்லை.

SRI C. N. ANNADURAI : காங்கிரஸ் ஆட்சி என்று குறிப்பிட்டுச் சொன்னாலும் . . .

SRI K. VINAYAKAM rose.

MR. SPEAKER : There can be no point of order on another point of order.

The hon. Member, Sri Elumalai, says that he has used the words " காங்கிரஸ் ஆட்சி " and not the words " காங்கிரஸ் கட்சி ".

The hon. Member may continue his speech.

SRI S. B. ADITYAN : அசெம்பிளி விதிகளிலே 66-வது விதியில் அங்கத்தினர்கள் பேசும்போது "**must not neglect upon the conduct of the Governor**" என்று சொல்லப்பட்டிருக்கிறது. நண்பர் பேசும்போது கவர்னர் விஷ்ணுராம் மேதி அவர்கள் தேசிய ஒற்றுமைக்காக பாடுபட்டார் என்று சொன்னார்கள். அவர் அப்படிச் சொல்லுவது அவர் நடத்தையைக் குறிப்பிடுகிறது. என்போன்ற ஒருவர் அவர் தேசீய ஒற்றுமைக்காக பாடுபட வில்லை என்று சொல்லலாம். அது கவர்னர் அவர்களின் நடத்தையைப் பற்றி குறிப்பிடுவதாகும். ஆகையால் அதுவும் தவறு. ஆதனால் " பாயிண்டு ஆப் ஆர்டர் " ஏற்படுகிறது.

MR. SPEAKER : To-day we are discussing the Governor's Address. It is open to one hon. Member to say that so and so has done so many good things. It is open to another hon. Member equally to say so and so has not done anything. The Chair cannot interfere in the matter as long as the discussion is on what this gentleman has said. The hon. Member may continue.

SRI T. P. ELUMALAI : கனம் சபாநாயகர் அவர்களே, நான் சொன்னதெல்லாம் அவர் அஸ்ஸாம் மாகாணத்தில் மந்திரியாக இருந்த பொழுது அங்கே இருக்கிற சர்க்காரில் தேசீய ஒற்றுமையை வளர்க்கப் பாடு பட்டார் என்பதுதான். அங்கத்தினர் விஷயக் குழப்பத்தை உண்டுபண்ணி என் பேச்சிலே கருத்தை குறைக்க பிரார்த்திக்கின்றார் என்று நினைக்கிறேன்.

SRI S. B. ADITYAN : Is that not a reflection on the conduct of the Government? That is the ruling I want.

MR. SPEAKER : If the hon. Member has said that he was going to try for unity in Madras I should have certainly agreed. If, however, he has said that the Governor tried for unity in Assam that would be outside the scope of the Governor's Address. He would be advised to say he tried for unity in this State.

[12th February 1958

THE HON. SRI M. BHAKTAVATSALAM : If the hon. Member referred to what the Governor had done before he assumed the high office of the Governor, that does not reflect on the conduct as Governor and therefore that is not objectionable.

MR. SPEAKER : It is not objectionable but it is quite unnecessary to discuss what he did in Assam when you are discussing what he is going to do in Madras.

SRI V. SANKARAN : According to Rule 5 (1) of the rules the Speaker shall in consultation with the Business Advisory Committee allot the time necessary for the discussion of the matters referred to in the Governor's Address. If the Governor in his Address has said that "I have also tried for unity in Assam" that will be equally pertinent to refer to them because it is contained in the Address.

MR. SPEAKER : I differ from you. The hon. Member may continue.

**SRI T. P. ELUMALAI :** தேசியத்தை வளர்ப்பதிலே முதன்மை ஸ்தானம் வகிப்பவர்கள் தமிழ் நாட்டிலே இருக்கிறார்கள். உங்களுடைய ஒத்துழைப்பெல்லாம் எனக்குக் கொடுக்கவேண்டும் என்று கவர்னர் பெருமான் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். எதிர்க்கட்சிக்காரர்கள் அத்தனை பேர்களும் தேசியத்தை வளர்ப்பதற்கு ஒத்துழைப்பு கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். குறிப்பாக தேசியம் என்று சொன்னாலே அது காங்கிரஸ் என்று ஒரு சிலர் நினைக்கிறார்கள். அதுவும் குறிப்பாக திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்கள் "தேசீய முன்னேற்ற சங்கம்", "தேசீய ஆதிதிராவிட முன்னேற்ற சங்கம்" என்று சொன்னாலே, "தேசீயம்" என்று சொன்னாலே, காங்கிரஸைச் சேர்ந்தது, காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தது என்று நினைக்கிறார்கள். "தேசியத்திற்கு" அவர்கள்—தலைவர்கள்—வேறு அர்த்தம் வைத்துக்கொண்டிருந்தாலும், அவர்களுடைய சாதாரண ஊழியர்கள் "தேசியம்" என்றால் தங்களுக்கு விரோதமான கட்சி என்று எண்ணுகிறார்கள். இதனால் தேசீயம் இந்த நாட்டிலே பரவ வேண்டும். தேசீயத்தை வளர்ப்பதற்கு நல்ல வழி வகுத்து, ஒற்றுமையை வளர்ப்பதிலே எல்லோருடைய ஒத்துழைப்பும் இருக்க வேண்டுமென்று பணிவோடு கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஆட்சி மொழி பற்றி கவர்னர் பெருமான் சொல்லியிருக்கிறார்கள், ஏழை மக்களுக்கு, ஆதி திராவிட மக்களுக்கு, ஏழைத் தொழிலாளர்களுக்கு மத்திய ஆட்சி மொழியினால் ஒருவித நன்மையும் ஏற்படாது. ஆனால் மகாண ஆட்சிமொழியினால் தான் அவர்களுக்கு ஓரளவு நன்மை ஏற்பட முடியும். மத்திய ஆட்சி மொழியினால் அவர்களுக்கு எந்த விதமான நன்மை ஏற்படும் என்று எனக்குத் தெரியவில்லை. என்போன்ற சாதாரண ஊழியர்களுக்கும் இந்த நாட்டின் சுக துக்கத்தை அநுபவிக்கும் ஏழை மக்களுக்கும் மகாண ஆட்சி மொழியால் தான் ஓரளவு நன்மை ஏற்படுமே தவிர, மத்திய ஆட்சி மொழியால் எதுவும் நன்மை ஏற்படுவதாகத் தெரியவில்லை. நம் சர்க்கார் **1,922** அலுவலகங்களில் இன்றைக்கு ஆட்சி மொழியை தமிழாகச் செய்திருக்கிறார்கள். மேலும் எல்லா இடங்களிலும் தமிழிலேயே ஆட்சி நடை பெறப்போகிறது. இந்த முறையிலே நடைபெறும்பொழுது ஏழை ஹரிஜனங்களுக்கு அதனால் ஓரளவு நன்மை ஏற்பட முடியும். ஓரளவு ஆங்கிலம் படித்தவர்கள் மத்திய அரசாங்கத்தில் ஆங்கிலம் போய் இந்தி வந்து விட்டால் தங்களுடைய செல்வாக்கு குறைந்து விடும் என்று எண்ணுகிறார்கள். தவிர தாங்கள் பட்டதாரிகள், அறிஞர்கள், கவிஞர்கள், என்று பட்டம் பெற்றவர்கள் ஆங்கிலத்தினுடைய தன்மை குறைந்துவிடப் போகிறதே என்று அங்கலாய்க்கிறார்கள். ஏழைகளுக்கு இந்தி வந்து ஆங்கிலம் போனாலும் சரி, ஆங்கிலம் இருந்தாலும் சரி, எந்த விதமான நன்மையும் ஏற்பட முடியாது என்பதை தெரிவித்துக்

12th February 1958] [Sri T. P. Elumalai]

கொள்ள பிரியப்படுகிறேன். அந்த முறையிலே இந்தியைப் பற்றி நான் சொல்லுகிறபொழுது சென்னை மகாணத்தில் தமிழை வளர்ப்பதிலே, தமிழில் ஆர்வம் இருப்பதிலே, எல்லோர்களுடைய அக்கறையெல்லாம் இருக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். சிக்கனம் என்று சொல்லும்போது, ஓர் உதாரணம் சொல்ல பிரியப்படுகிறேன்.

சீர்திருத்த திருமணம், சீர்திருத்த திருமணம் என்று சொல்லுகிறார்கள். காந்தி அடிகள் சொல்லிய மிகவும் சிறந்த கலப்புத் திருமணத்தை, நீங்கள் திரை போட்டு மறைக்கின்ற அளவுக்கு சீர்திருத்த திருமணமாக்கி விட்டிருக்கிறீர்கள். இந்த நாட்டு ஏழை மக்களெல்லாம் முன்னேறவேண்டுமென்று நினைத்து மது அரக்கனை ஒழித்தார்கள். அதற்கு மாறாக இன்று தி.மு. கழகத்தினர் சினிமா அரக்கனை கொண்டுவந்து விட்டிருக்கிறார்கள். காங்கிரஸ் சர்க்கார் ஏழை மக்கள் சிக்கனமாக இருக்க வேண்டுமென்பதற்காக கள்ளுக் கடையையும், சாராயக் கடையையும் ஒழித்தார்கள். ஆனால் சினிமா அதிகம் வந்து விட்டது. எங்கள் திருவற்றியூரில் 3 சினிமா கொட்டகைகள் அதிகரித்து இருக்கின்றன. அம்மாதிரி ஒவ்வொரு கிராமத்திலும் சினிமா கொட்டகைகள் அதிகரித்து இருக்கின்றன. இம்மாதிரி கூத்தாடித்தனம் நாட்டில் அதிகமாக ஏற்பட்டுவிட்டது. இதனால் ஏழைகளின் பணம் சுரண்டப்படுகிறது. இதையெல்லாம் ஒழிப்பதற்கு எதிர்க்கட்சியில் இருக்கும் கனம் அண்ணாதுரை போன்றவர்கள் வழிகள் வகுக்க வேண்டும், ஏழைகளுடைய முன்னேற்றத்திற்காக அவர்கள் பாடுபட வேண்டுமென்று மிகவும் பணிவோடு கேட்டுக்கொள்ளுகிறேன்.

மற்றொன்று சொல்லுகிறேன். நண்பர் கோவிந்தசுவாமி அவர்கள் நேற்று பேசும்பொழுது, ஏழைகளிடையே சிக்கனத்தைப் பரப்பவேண்டாம். அவர்கள் ஊதாரிச் செலவு செய்துகொள்ளட்டும், பணக்காரர்களிடையே சிக்கனத்தைப் பரப்பி அவர்கள் சிறு சேமிப்பு திட்டத்திற்கு பணம் கொடுக்கும்படிச் செய்ய வேண்டுமென்று மறைமுகமாக வற்புறுத்திச் சொன்னார்கள்.

**Sri A. GOVINDASAMI** : ஆன் எ பாயிண்டு ஆப் ஆர்டர், பணக்காரர்களிடம்தான் பணம் வசூலிக்கவேண்டும், ஏழைகளை தொல்லை செய்யக்கூடாது என்றுதான் சொன்னேன். ஏழைகள் சிக்கனமாக இருக்கவேண்டாம் என்று நான் சொல்லவில்லை.

**Mr. SPEAKER : It is only a point of personal explanation and not a point of order.**

**Sri T. P. ELUMALAI** : ஏழைகள் சிக்கனத்தை கையாளவேண்டுமென்று கனம் அங்கத்தினர் இப்போது சொல்லுகிறார்கள். சீர்திருத்தத் திருமணம் என்று சொல்லி தாலி கட்டவேண்டாம் என்று சொல்லிவிட்டார்கள். உதாரணமாக ஒரு பழமொழி உண்டு. ஏழை பெண்மணிகள் தாலி கட்டிக் கொண்டிருந்தாலாவது புருஷன் நோய்வாய்ப் பட்டிருக்கும்பொழுது தாலியையாவது விற்று அவனை காப்பாற்றலாம் என்று இருந்த ஒரு தைரியத்தைக்கூட, அவர்கள் தாலி கட்ட வேண்டாம் என்று சொல்லி ஒரு சிலரிடத்தில் போக்கிவிட்டார்கள். (சிரிப்பு) இனியாவது இவர்களுடைய நோக்கங்களும் எண்ணங்களும் மக்கள் முன்னேறும் வகையிலே இருக்கவேண்டுமென்று பணிவோடு கேட்டுக்கொள்ளுகிறேன். தேசீய வளர்ச்சி என்று வாயளவில் சொல்லிக்கொண்டிருப்பதில் பிரயோசனமில்லை. அதை செயலில் காட்டவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். மேலும் நமது மதிப்பிற்குரிய நேருஜி அவர்கள் சென்னை வந்திருந்தபொழுது இவர்களுடைய (தி.மு.க.) நடவடிக்கைகளை நான் நேரில் கண்டேன். பொது மக்களுக்கும், போலீசாருக்கும் சொல்லவொண்ணாத இடைஞ்சல் செய்தார்கள். இதனால் கண்ணீர் புகை விட்டார்கள். அப்போழுது நான் பஸ்ஸில் இருக்கும்போது கண்ணீர்புகை எப்படி இருந்திருக்கும் என்று அனுபவித்தேன். இவைகளை எல்லாம் அவர்கள் எதற்காகச் செய்தார்கள் என்றால் பண்டித நேருவுக்கு அவமானத்தைக் கொண்டு வரவேண்டும் என்றும் நமது மந்திரிகளுக்கு ஒரு அவமானத்தைக் கொண்டு வரவேண்டும் என்றும் தான் இப்படிப்பட்ட காரியங்களைச்

[Sri T. P. Elumalai] [12th February 1958

செய்தார்கள். அந்த ஒரே எண்ணத்தில் தான் இப்படியெல்லாம் அவர்கள் அன்று செய்தார்கள். இப்படியெல்லாம் செய்ய வேண்டும் என்று அவர்களுக்கு சோல்ஜர்களுக்குப் பயிற்சி கொடுப்பது போல் கொடுத்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. பயிற்சி கொடுக்கப்பட்டதுபோல்தான் அன்று அவர்கள் செய்தார்கள் என்பதைமட்டும் நான் இந்தச் சமயத்தில் தெரிவித்துக்கொள்ளுகிறேன். நமது அரும் பெரும் தலைவர் காமராஜர் அவர்கள் அன்று போட்ட கூச்சல் கொஞ்ச நஞ்சம் அல்ல. மந்திரிகள் போகும்போதெல்லாம் அவர்களும் கூச்சல் போட்டுக்கொண்டே தான் போனார்கள்.

**Mr. SPEAKER :** உங்களுக்கு இரண்டு நிமிஷங்கள்தான் என்று நான் ஏற்கெனவே சொன்னேன். ஆனால் இப்பொழுது பத்து நிமிஷங்கள் ஆகி விட்டன. இன்னும் நீங்கள் பேசிக்கொண்டிருக்கிறீர்கள்......

**Sri T. P. ELUMALAI :** அங்கு போனவர்களையெல்லாம் அவமானப்படுத்த வேண்டும் என்று தான் அவர்கள் எண்ணினார்கள். அவமரியாதை செய்ய வேண்டும் என்பதற்காக என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்து வந்தார்கள். இப்படியெல்லாம் செய்தால் நாடு முன்னேற்றம் அடையாது என்பதை மட்டும் தெரிவித்துக்கொள்ளுகிறேன். மந்திரிகளையும் தலைவர்களையும் தாறுமாறாகப் பேசினால் நாடு முன்னேற்றமடைந்துவிடாது. காங்கிரஸ் கட்சியில் இருக்கிறவர்களையும் அந்தக் கட்சி தலைவர்களையும் அவமரியாதையாகவும் தாறுமாறாகவும் பேசினால் முன்னேற்றமடைந்துவிட முடியாது. அவர்கள் பேசுவதைப்போல் எங்களாலும் பேச முடியும் என்பதை மட்டும் தெரிவித்துக்கொண்டு கவர்னர் அவர்கள் நிகழ்த்திய உரைக்கு என்னுடைய நன்றியை தெரிவித்துக் கொண்டு என்னுடைய உரையை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

**Mr. SPEAKER :** எவ்வளவோ மணி அடித்தும் அங்கத்தினர்கள் சபாநாயகரைப் பார்க்கா விட்டால்—தன்னுடைய பேச்சை நிறுத்தா விட்டால்—இன்னும் முப்பது நாட்களுக்கு அவர்களுக்கு பேசுவதற்கு சந்தர்ப்பமே கொடுக்காமல் இருக்கும்படியாக இருக்கும் என்பதை இந்த நேரத்தில் சொல்லிக்கொள்ளுகிறேன். இதற்கு காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த காரிய தரிசி பொறுப்பாக இருக்க வேண்டும். இந்தப் பொறுப்பை அவர் கட்டாயம் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று நான் அவரை கேட்டுக் கொள்ளுகிறேன். கனம் அங்கத்தினருக்கு நேற்றே ஐந்து நிமிஷங்கள் முடிந்து விட்டது. இன்றைக்கும் அவர் பத்து நிமிஷங்கள் பேசுவது என்பது தவறு என்பதை நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஆகவே ஸ்பீக்கர் மணி அடித்தவுடன், அங்கத்தினர்கள் பேசிக்கொண்டிருந்தால், உடனே உட்கார்ந்துவிடவேண்டும் என்று மறுபடியும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

10–02 a.m. ***Sri T. L. SASIVARNA THEVAR :** கனம் சபாநாயகர் அவர்களே, நமது சபைக்கு முன்னால் கவர்னர் பெருமான் விடுத்துள்ள பேருரையின் மீது சில வார்த்தைகளைச் சொல்ல விரும்புகிறேன். எனக்கு முன்பு பேசிய கனம் ஏழுமலை அவர்கள் பேசும்போது அவர் தன்னுடைய கட்சியை ஆதரித்து சில வார்த்தைகளைக் கூறிக்கொண்டு மற்ற கட்சிக்காரர்களைப்பற்றி குறை கூறிக்கொண்டார். அவருக்கு பதில் சொல்லும் முறையில் நான் சில வார்த்தைகளைக் கூறிக்கொண்டு நமது நாட்டில் இன்றைக்கு ஏற்பட்டிருக்கக்கூடிய நிலைமையைப்பற்றி கொஞ்சம் கூறிக் கொள்ள விரும்புகிறேன்.

நமது மாநிலத்தில் சட்டம், நீதி ஒழுங்காக நிலை நாட்டப்படுகிறதா என்பதைப்பற்றி கவர்னர் அவர்கள் தன்னுடைய பேருரையில் ஒன்றும் சொல்லவில்லை. இப்பொழுது நடைபெறுகின்ற ஆட்சி ஆரம்பித்த முதற் கொண்டு ஏதாகிலும் நன்மை செய்யப்பட்டிருக்கிறதா என்று பார்த்தால் ஒன்றுமே செய்யப்படவில்லை. ஆனால் ஒன்றே ஒன்று மட்டும்தான் நடைபெற்று வருவது தெரியும். சமீபத்தில் நடந்த தேர்தலுக்குப் பின்னால், இந்த ஆட்சி ஆரம்பித்த காலம் முதற்கொண்டு, நாட்டில் கொந்தளிப்பும் குழப்பமும் தான் ஏற்பட்டிருக்கிறது. அடக்குமுறைதான்

12th February 1958] [Sri T. L. Sasivarna Thevar]

தாண்டவமாடிக் கொண்டிருக்கிறது. நமது ஆட்சியாளர்கள் நமக்கு வேறு எந்த வகையிலும் நன்மை செய்யா விட்டாலும் ஒரே ஒரு வகையில் பெரிய நன்மையைச் செய்திருக்கிருர்கள். ஒவ்வொரு இடத்திலும் போலீசாரைக் கொண்டு மக்களை அடித்துக்கொண்டும் சுட்டுக்கொண்டும் தான் இருக்கிருர்கள். உதாரணமாக ஒன்றை மட்டும் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். முதுகளத்தூர் தாலூகாவில் போலீஸ் அடக்குமுறை இன்னும் கொஞ்சம் கூட குறைந்தபாடில்லை. இதை நான் வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அங்கே ஒரு முக்கியமான கொலை சமீபத்தில் நடைபெற்றது. அதாவது எமானுவேலை கொலை செய்யப்பட்டது. அது எல்லோருக்கும் நன்ருகத் தெரியும். அதன் பிறகு தலைவர்கள் பலர் மீது வழக்குகள் தொடரப்பட்டிருக்கின்றன. அந்த வழக்குகளும் கோர்ட்டுகளில் இருக்கின்றன. மிகவும் புகழ்பெற்ற இந்த அரசாங்கத்தாரிடம் ஒரு முக்கியமான வஸ்து இருக்கிறது. அதாவது போலீஸார்களால் உபயோகப்படுத்தப்பட்டு வரும் வேட்டை நாய்கள். போலீஸ்காரர்கள் தங்களுடைய வேட்டை நாய்களை வைத்துக்கொண்டு வழக்குகளை கண்டு பிடிக்கிருர்கள் என்பதாக சொல்லப்படுகிறதே அந்த நாய்களை வைத்துக்கொண்டு இந்த எமானுவேல் கொலை வழக்கில் ஈடுபட்ட குற்றவாளிகளை ஏன் கண்டு பிடிக்க முயலவில்லை என்பதைக் கேட்கிறேன். அப்படி அதை உபயோகப்படுத்திளுல் உண்மையான குற்றவாளிகள் கண்டு பிடிக்கப்பட்டுவிடுவார்கள் என்ற காரணத்திளுல் அப்படி அதை உபயோகப்படுத்தவில்லையா என்று கேட்கிறேன். அல்லது அதில் சம்பந்தப்பட்டிருக்கக்கூடிய பெரியவர்கள் கண்டு பிடிக்கப்பட்டு விடுவார்கள் என்பதற்காக அதை உபயோகப்படுத்த வில்லையா என்று கேட்கிறேன். உண்மை சதிகாரர்கள் கண்டு பிடிக்கப்பட்டு விடுவார்கள் என்று அதை உபயோகப்படுத்தவில்லையா ? எந்த நோக்கத்துடன் அதை உபயோகப் படுத்தவில்லை என்று கேட்க விரும்புகிறேன்.

அந்த வழக்கில் சம்பந்தப்பட்ட எட்டு எதிரிகளை இன்னும் கண்டு பிடிக்க வில்லை என்று சொல்லுகிருர்கள். கொலை நடந்து சுமார் நாலைந்து மாதங்களாகின்றன. இதுவரையிலும் இன்னும் அந்த எதிரிகளை கைது செய்யாமல் இருக்கிருர்கள்; அதன் காரணம் என்னவென்றும் தெரியவில்லை. இது சம்பந்தமாக கிழத்தூவல் கிராமத்தில் போலீஸ்காரர்கள் சென்று அந்த எட்டு குற்றவாளிகளுடைய மனைவிமார்களையும் துன்புறுத்துகிருர்கள். அவர்களை அடித்து விரட்டி விட்டார்கள். அவர்கள் பயந்து கொண்டு மதுரைக்குச் சென்று அங்கு குடியிருக்கிருர்கள். இதளுல் அவர்களுக்கு என்ன கஷ்டம் இருக்கும் என்பதை அரசாங்கம் கொஞ்சம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். மற்றும் அந்த கிராமத்திலுள்ள குழந்தைகள், கிழவர்கள், கிழவிகளை திரட்டிக்கொண்டு போய் போலீஸ் ஸ்டேஷனில் அடைத்து வைத்து துன்புறுத்துகிருர்கள். அவர்களை காலை எட்டு மணிக்கு அழைத்துக்கொண்டு போய் இரவு எட்டு மணி வரையில் எந்த விதமான ஆகாரமும் கொடுக்காமல், ஆகாரம் கொடுப்பதையும் அனுமதிக்காமல் ஓர் இடத்தில் வைத்து துன்புறுத்தியிருக்கிருர்கள். போலீஸார்கள் குற்றவாளிகளை கைது செய்ய முடியாவிட்டால் அதற்கு ஊரிலுள்ள கிழவர்களும் கிழவிகளும்தான் பொறுப்பா என்று கேட்கிறேன். அந்த ஊரார்தான் அதற்குப் பொறுப்பாளிகளா ? இப்படி அவர்களை வைத்துக்கொண்டிருந்தால் அவராவது அந்த வழக்கிற்கு அப்ரூவராக வருவார்கள் என்ற எண்ணத்திளுல் அப்படி அடைத்து வைத்து துன்புறுத்துகிருர்களா என்ற ஒரு சந்தேகம் எனக்கு ஏற்படுகிறது. சீக்கிரமாக அந்த எட்டு எதிரிகளையும் போலீஸார் கைது செய்து வழக்குகளை துரிதமாக நடைபெறச் செய்ய வேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக இது வரையிலும் எத்தனை வழக்குகள் தொடர்ந்திருக்கிருர்கள் என்பதும் இன்னும் எத்தனை வழக்குகள் தொடரப்போகிருர்கள் என்பதும் தெரியவில்லை. இது வரையிலும் தொடர்ந்த வழக்குகள் எப்பொழுது நடைபெறும் என்பதும் எப்போது முடிவு பெறும் என்பதும் ஒன்றுமே தெரியவில்லை. ஏற்கெனவே பல வழக்குகள் தொடரப்பட்டு பல பேர்களின் பேரில் கேஸ்கள் போடப்பட்டிருக்கின்றன. இன்னும் போலீஸ்காரர்கள் ஜீப் கார்களை போட்டுக் கொண்டு கிராமங்களுக்குள் சென்று

[Sri T. L. Sasivarna Thevar] [12th February 1958

கொண்டுதான் இருக்கிறார்கள். இவர்களைக் கண்டவுடனேயே அங்குள்ள ஜனங்கள் பயந்து கொண்டு ஓடிவிடுகிறார்கள். நல்ல சூழ்நிலை அங்கு இன்னும் ஏற்படவில்லை. போலீஸ்காரர்களை அங்குள்ள கிராம மக்கள் இன்னும் நம்பவில்லை. அங்குள்ள போலீஸ் படையை வாபஸ் பெற்றிருக்க வேண்டும். அப்படி இன்னும் வாபஸ் பெறவில்லை, அதன் காரணம் என்னவென்றும் தெரியவில்லை. அங்கு போலீஸ் படை இருக்க வேண்டும் என்று நாங்கள் அப்பொழுது சொல்லவில்லை. அவர்கள் தான் அங்கு அமைதியை நிலைநாட்ட வேண்டும் என்பதற்காக அங்கு போலீஸ் படையைக் கொண்டு வந்து வைத்தார்கள். அங்கு போலீஸ்காரர்கள் என்ன செய்கிறார்கள் என்பதை கவனிக்க வேண்டும். கிராமங்களுக்குள் சென்று பத்து அல்லது பதினைந்து பேர்களை கைது செய்கிறார்கள். அவர்களை அழைத்துக்கொண்டு போய் ஒரு இடத்தில் வைத்துவிட்டு ஐந்து அல்லது பத்து அல்லது இருபது ரூபாய் வாங்கிக் கொண்டு திருப்பி அனுப்பிவிடுகிறார்கள். இப்படியே பல கிராமங்களுக்குச் சென்று செய்கிறார்கள். இதைப்பற்றி நான் கலெக்டருக்கு ஒரு மனுக் கொடுத்தேன். இப்படி எவ்வளவு கேஸ்கள் போடப்போகிறீர்கள் என்றும் எந்தெந்த கிராமங்களில் ஆட்களை கைது செய்யப்போகிறீர்கள் என்றும் கேட்டேன். அவர் ஒரே ஒரு கிராமத்தில் மட்டும் தான் என்று அருங்குள கிராமத்தில் மட்டும் வழக்குகளைத் தொடர ஏற்பாடு செய்தார். இப்படி ஒவ்வொரு கிராமமாக சென்று மக்களை துன்புறுத்தாமல் எந்த கிராமத்தில் எந்த வழக்கை தொடரப்போகிறீர்கள் என்றும் எந்த நபர்களைக் கைது செய்யப் போகிறீர்கள் என்றும் கேட்டதற்கு அவர் அருங்குளம் கிராமம் ஒன்றில்மட்டும் நான் கேட்டுக்கொண்டபடி நடவடிக்கை எடுத்துக் கொண்டார். மற்றும் எங்கங்கே என்னென்ன வழக்குகளைத் தொடரப் போகிறீர்கள் என்று பத்திரிகை வாயிலாக தகவல் கொடுத்தால் நாங்களே அதற்கு உதவி செய்கிறோம் என்று சொல்லியும் அதன்படி செய்யாமல் மக்களை துன்புறுத்திக் கொண்டிருக்கிறார்கள். குற்றவாளிகளைச் சொன்னால் அவர்களைக் கண்டுபிடிக்க நாங்கள் உதவி செய்கிறோம் என்றும் சொன்னோம். அதன் பொறுப்பை நாங்கள் ஏற்றுக்கொள்ளுகிறோம் என்றும் கேட்டுக்கொண்டோம். அப்படிச் செய்தால் எல்லா மக்களும் துன்புறுத்தப்படாமல் இருப்பதற்கு ஏதுவாக இருக்கும் என்று அப்படிச் சொன்னோம்.

மேலும் ஒரு வார்த்தை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். கலகம் நடந்து சுமார் நான்கு மாதங்களாகின்றன. அதன் பிறகு எந்த விதமான தகராறும் இது வரையிலும் ஏற்படவில்லை. ஆகவே அங்கிருந்து போலீஸ் படையை கொஞ்சம் கொஞ்சமாக வாபஸ் வாங்கிக்கொள்ள வேண்டும். போலீஸ்காரர்கள் எல்லோரையுமே உடனடியாக வாபஸ் வாங்க வேண்டும் என்று சொல்லவில்லை. மக்களைக் கைது செய்து அவர்களை போலீஸ் ஸ்டேஷனில் வைத்து விட்டு கொஞ்சம் நாளைக்கு எல்லாம் அவர்களை விரட்டி விடுகிறார்கள். அதனால் பலர் கஷ்டப்படுகிறார்கள்.

இன்னொரு விஷயம் ரொம்பவும் கேவலமாக நடந்து வருகிறது. அதாவது அங்கே ஏற்பட்ட வழக்குகளை புதுக்கோட்டையில் நடத்துவதாக ஏற்பாடு செய்திருக்கிறார்கள். புதுக்கோட்டையில் ஒரு ஸ்பெஷல் மாஜிஸ்ட்ரேட்டை நியமித்து அங்கே அந்தக் கேஸ்களை நடத்துவதாக ஏற்பாடு செய்திருக்கிறார்கள். அப்படிச் செய்வதானது ரொம்பவும் தகாரான காரியம். இதனால் ஏழை மக்கள் ரொம்பவும் பாதிக்கப்படுகிறார்கள். கீழ்தூவலிலிருந்து புதுக்கொட்டைக்குச் செல்வதாக இருந்தால் சுமார் 120 மைல்கள் போக வேண்டியதாக இருக்கிறது. பெரும் பகுதியான சாட்சிகள் ராமனாதபுரத்தில் தான் இருக்கிறார்கள். அதனால் அந்த வழக்குகளை அந்தந்த ஸ்தலத்திலேயே நடத்த வேண்டும் அல்லது மதுரையில் நடத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அல்லது சிவகங்கையிலோ அல்லது ராமனாதபுரத்திலோ நடத்தலாம் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். இதைப் பற்றி பல மனுக்கள் கொடுத்தேன். அப்படி மனுக்கள் போட்டும்கூட சர்க்கார் சரியான முறையில் என்னுடைய வேண்டுகோளை கேட்டுக்கொள்ளாமல் இருக்கிறார்கள். மேலும் சர்க்கார் சொல்லலாம் கலவரம் நடந்த இடங்களில் அந்த வழக்குகளை நடத்தினால் கூட்டங்கள் கூடும், ஆர்ப்பாட்டம் செய்வார்கள் என்று,

12th February 1958] [Sri T. L. Sasiyarna Thevar]

எங்கள் தலைவர் தேவர் அவர்கள் மீது போடப்பட்ட ஒரு வழக்கையாவது புதுக் கோட்டையில் வைத்துக்கொண்டு மற்ற வழக்குகளை மற்ற கோர்ட்டுகளுக்கு அனுப்பும் படியாகச் சர்க்காரைக் கேட்டுக் கொள்ளுகின்றேன். எங்களது இந்தக் கோரிக்கையை சர்க்காருக்குப் பல முறை தெரிவித்தோம்.

சமீபத்தில்கூட கவர்னர் பெருமான் அவர்கள் எங்கள் பிராந்தியத்துக்கு வருவதாகக் கேள்விப்பட்டேன். அப்படி நேரில் வந்தால், அங்கு நடந்த படுகொலையின் விவரம் பூராவையும் பார்ப்பதற்கு ஏதுவாக இருக்கும். கீழத்தூவலில் நடந்த சம்பவத்தில் சுட்டுக் கொல்லப்பட்ட ஐந்து பேர்களுடைய மனைவிமார்களையும் கீரந்தையில் சுட்டுக் கொல்லப்பட்டவர்களுடைய மனைவிமார்களையும், நேரில் கவர்னர் பெருமான் வரும்போது அவரிடம் குறைகளை எடுத்துச் சொல்ல ஏற்பாடு செய்யப்போகிறோம்.

இதற்கு முன்பு, பிரதம மந்திரி நேரு அவர்கள் அங்கு வரப்போவதாகச் சொன்னபோது, அவர்களிடம் நேரில் சென்று முறையிடுவதாக ஏற்பாடு செய்தோம். அங்கு உள்ள போலீஸ்காரர்கள் என்ன செய்தார்கள் என்றால் சுட்டுக் கொல்லப்பட்டவர்களுடைய மனைவிமார்கள் பூராவையும் நேரு அவர்கள் தமிழ்நாட்டுக்கு வந்து திரும்பிப் போகிறவரையில் ஒவ்வொருவரையும் **house arrest**-ல் வைத்தார்கள். கீரந்தையில் சுட்டுக் கொல்லப்பட்டவர்களுடைய மனைவிமார்களையெல்லாம் போலீஸ் ஸ்டேஷனிலேயே கொண்டு போய்க் கைது செய்து வைத்தார்கள். ஆறு வீட்டிலுள்ள பெண்பிள்ளைகளை வீட்டிலே கைது செய்து வைத்தார்கள். எங்கே நேருவினிடத்திலே முறையிட்டு விடுவார்களோ என்ற பயத்திற்காக போலீசார் அவர்களைக் கைது செய்து **house arrest**-ல் வைத்தார்கள் என்று நான் குற்றச்சாட்டாகச் சொல்கிறேன்.

கவர்னர் பெருமான் அந்தப் பகுதிக்கு வந்தால் பதினாறு பேர்களுடைய மனைவிமார்களையும், அவர்களுடைய குழந்தை குட்டிகளையும், பெற்றோர்களையும் கவர்னரிடம் அழைத்துச் சென்று அவரிடம் எடுத்துச் சொல்வதற்காக, முறையிட்டுக்கொள்ளுவதற்காக ஏற்பாடு செய்திருக்கிறோம். அந்த முறையில் சர்க்கார் அவர்கள் தயவு செய்து போலீஸ் அதிகாரிகளுக்குத் தகவல் கொடுத்து, ஏற்கெனவே போலீஸ் ஸ்டேஷனிலோ, **house arrest**-இலோ வைத்திருந்ததுபோல் வைக்காமல், கவர்னர் பெருமான் வரும்போது அவரிடம் நேரில் சென்று முறையிடுவதற்கு அனுகூலமாக இருக்கும் படியாக போலீசார்களுக்கு சர்க்கார் உத்தரவு பிறப்பிக்கும்படியாக நான் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

"பட்ட காலிலே படும், கெட்ட குடியே கெடும்" என்பது போன்று, போலீசார்களுடைய அக்கிரமும் அடக்குமுறையும் ஒருபுறமிருக்க, மற்றொரு வகையிலும் அந்தப் பிராந்திய மக்கள் பூராவையும் சர்க்கார் கஷ்டப்படுத்துகிறார்கள். அதுதான் நிலவரி வசூலிக்கும் முறை. எங்கள் பிராந்தியம் இராமனுதபுரம் ஜமீனையும் சிவகெங்கை ஜமீனையும் சேர்ந்திருந்தது. 1360-ம் பசலியிலிருந்து நாளது தேதி வரையில் உள்ள பாக்கி பூராவையும் ஒரே முறையில் வசூலிக்கவும் ஏற்பாடு செய்கிறார்கள். அங்குள்ள அதிகாரிகள் இம்மாதிரி செய்வது தவறு. அதை இரண்டொரு மாதத் தவணைகளில் திருப்பிக்கொடுக்கத் தயாராயிருக்கிறார்கள். நிலவரிக்கு வட்டி வாங்குவது தவறு. ஒரே முறையில் பாக்கியை வசூலிக்காமலிருக்க வேண்டும் என்று கலெக்டரிடத்தில் நேரில் சென்று மனுக்கொடுத்திருக்கிறேன். கிராமம் கிராமமாகச் சென்று கலெக்டரிடம் மனுக் கொடுத்திருக்கிறார்கள். கலெக்டர் எழுதிய பதிலில், "என்னுடைய சிபார்சுகளைக் கவர்ன்மெண்டுக்கு அனுப்பியிருக்கிறேன்; கவர்ன்மெண்ட் ஆர்டர் வந்த பிறகு தெரிவிக்கிறேன்" என்று குறிப்பிட்டிருக்கிறார். ஆனால் நாளது தேதிவரையில் ஆர்டர் வரவில்லை. அக்கிரமம் சகிக்க முடியாமல் இருப்பது மகத்தான கொடுங்கோன்மையாகும். நிச்சயமாக மறுக்க முடியாது. ஒருவன் கொடுக்கவேண்டிய பாக்கி ரூ. 200 இருக்கும். ஆனால், அவனுடைய நிலம் எல்லாம் சேர்த்து ரூ. 100 அல்லது ரூ. 150-க்கு ஜப்தி செய்கிறார்கள். ஆஸ்தி பூராவையும் ஜப்தி செய்கிறார்கள். தானியங்களையும் ஜப்தி செய்கிறார்கள். கால்நடைகளையும் ஜப்தி செய்கிறார்கள். இதில் சர்க்கார் உடனடியாகத் தலையிட்டு அம்மாதிரி வரி பாக்கியை ஆவன செய்ய

[Sri T. L. Sasivarna Thevar] [12th February 1958

வேண்டும். ஜூன் மாதத்திற்குள்ளாவது ஏப்ரல் மாதத்திற்குள்ளாவது வரியைத் தரத் தயாராக இருக்கிறார்கள். ஆயிரம் ரூபாய் பாக்கியிருந்தால் ஒரு வருஷத்திற்கு ரூ. 500 வீதம் வாங்கிக்கொண்டு, மற்ற ரூ. 500-ஐ அடுத்த வருஷத்தில் வாங்கிக்கொள்ள ஏற்பாடு செய்யும்படியாகச் சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன். முழுப் பாக்கியையும் ஒரே முறையில் வசூலிக்கச் சொல்வது மகத்தான தவறு. இம்மாதிரி பெரிய அடக்குமுறை நிலவரி சம்பந்தப்பட்ட மட்டில் நடக்கிறது என்பதை ஞாபகமூட்டி, அதிலே தலையிட்டு கூடிய விரைவிலே சர்க்கார் வேண்டிய உதவி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

எங்கள் தாலுகா பூராவையும் ப்ளாக் டெவலெப்மெண்டில் எடுத்ததற்காக நான் சர்க்காருக்கு நன்றி தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஆனால் வேறு கஷ்டம் இருக்கிறது. எங்கள் பிராந்தியம் மிகவும் பிற்பட்ட பிராந்தியம். ஜனங்கள் செலுத்தவேண்டிய ஈவுத் தொகையைச் செலுத்த அவர்களுக்கு வசதி இல்லை. முடிந்த அளவு ப்ளாக் சம்பந்தப்பட்ட செலவுத் தொகை பூராவும் சர்க்காரே ஏற்றுக்கொண்டு, மக்களிடமிருந்து பண உதவியை எதிர்பாராமல் அபிவிருத்தித் திட்டங்களை நிறைவேற்றிக் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். சர்க்காரே முழு உதவியையும் செய்யவேண்டியது அந்தப் பிராந்தியத்திற்கு மிகமிக அவசியம் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக சில வழக்குகள் சம்பந்தப்பட்ட வரையில் மீண்டும் ஒரு வார்த்தை. நானும், தத்தார் அவர்களும், நமது அமைச்சர் திரு. கக்கன் அவர்களும் திருப்பாச்சேத்தி முதலிய கிராமங்களுக்குச் சென்றிருந்தோம். அந்தக் கிராம மக்கள் நேரிடையாக மந்திரி அவர்கள் முன்னால் சாட்சியம் சொல்லும்போது, "எங்கள் கிராமத்தில் உள்ளவர்கள் யாரும் தீ வைக்கவில்லை, வேற்று இடங்களிலிருந்து 200, 300 பேர்கள் கொள்ளைக் கூட்டமாக வந்து தீ வைத்தார்கள் ; ஊரினுள்ளவர்கள் யாரும் தீ வைக்கவில்லை" என்று சாட்சியம் சொன்னார்கள். அந்த இரண்டு கிராமங்களில் உள்ள 50 முதல் 60 பேர்கள் மீது போலீஸ்காரர்கள் கேஸ் போட்டிருக்கிறார்கள். காரணம் என்னவென்று விளங்கவில்லை. இது விஷயத்தை நான் கலெக்டரிடம் நேரில் சொல்லியிருக்கிறேன். அம்மாதிரியாக போலீஸ்காரர்கள் எவ்வளவோ பேர்கள் மீது பொய் வழக்குப் போட்டிருக்கிறார்கள். ஆனால் சம்பந்தப்பட்ட எதிரிகள் மீதோ—குற்றவாளிகள் மீதோ—வழக்குப் போடவேண்டாம் என்று விட்டிருக்கிறார்கள். அப்படிப் போடாவிட்டாலும் போகட்டும். ஏழைகள் முடிந்த அளவு, வரக்கூடிய அளவு, சிறிய கோர்ட்டுகளிலே விசாரணை செய்யும்படியான நல்ல சூழ்நிலையை அமைதியான முறையை, ஏற்படுத்தாவிட்டால், எதிர்க்கட்சிக்காரர்களாகிய, நாங்கள் என்ன நினைக்க முடியும் ? எந்த வகையிலாவது அடக்கி ஒடுக்குவதற்காக சர்க்கார் முயற்சிக்கிறார்களே தவிர, நல்ல நிலைமையை அமைதியான சூழ்நிலையை ஏற்படுத்த சர்க்கார் முன்வரவில்லை என்று சந்தேகிக்க வேண்டியிருக்கிறது. ஆகவே, அமைதியான சூழ்நிலையை ஏற்படுத்தவேண்டுமென்றும் போலீசாரையும் உடனடியாகக் குறைக்கவேண்டுமென்றும் நான் சர்க்காரைக் கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

10–16 a.m. **Sri T. V. SANNASI** : பெருமைக்குரிய அவைத் தலைவர் அவர்களே, கவர்னர் அவர்கள் ஆற்றிய உரையைப்பற்றிய வாதப் பிரதிவாதங்கள் நல்ல முறையில் நடந்துகொண்டு தான் வருகின்றன. அவர் நல்லது சொன்னாலும் எதிர்ப்பு இருக்கிறது ; அவர் கெட்டது சொன்னாலும் ஆதரவு இருக்கிறது. இது சம்பிரதாயமாக இருக்கிறது. (சிரிப்பு.)

இந்த முறையிலே பெரிய திட்டங்களை, பெரிய காரியங்களைப் பெருக்கிச் சொல்லாதபடி, தமிழ்ப் பெரியார் வள்ளுவர் எவ்வாறு சொன்னாரோ அதுபோல் நாட்டினுடைய க்ஷேமத்திற்கான நல்ல திட்டங்களை மிகவும் சாரமாகச் சுருக்கிச் சொல்லிவிட்டார்கள். அதுவும் மிக நல்ல வகையிலே சொல்லிவிட்டார். அதாவது 'நாலு நாட்கள் உங்கள் சக்தி எவ்வளவு இருக்கிறதோ அந்த அளவு சக்தியோடு, உங்களுக்குள்ள பாணியில் கௌரவம் சிறிதும் குறையாத முறையில் விவாதம் செய்யுங்கள்' என்று பின்னாலே சொல்லிவிட்டார்.

12th February 1958] [Sri T. V. Sannasi]

எந்த மனிதரும் விருப்புடன் ஆராய்ந்தால் குறை தெரியாது ; வெறுப்புடன் நோக்குவதற்கு ஆரம்பித்தால், அதிலேயுள்ள நன்மை தெரியாது. ஆனால், எதிர்க் கட்சி என்று ஒன்று இருந்துகொண்டிருக்கும்போது, அவர்கள் சொன்ன நல்லதை ஆதரித்துப் பேசவேண்டியது அவசியம் என்று கருதினாலுங்கூட, நாட்டில் உள்ள பழக்க வழக்கங்களுக்கும், சம்பிரதாயங்களுக்கும் முரணாகாத வகையிலே எதிர்க்கத்தான் வேண்டி இருக்கிறது.

சிலர் சொல்கிறார்கள்—நாட்டிலே எத்தனையோ குறைகள் இருக்கின்றனவே அவைகளையெல்லாம் கவர்னர் பெருமான் சொல்லவில்லையே என்று. ஆனால், நாட்டிலே உள்ள குறைகள் அவ்வளவையும் சொல்ல வேண்டுமானால், இந்த **period** போதாது. அவர் இங்கேயே உட்கார்ந்து சொன்னாலும் முடியாது. உதாரணமாக, நாட்டினுடைய நன்மைக்கான திட்டங்கள் என்ன என்ன வேண்டுமோ அவைகளைச் சாரமாகச் சொல்லி விட்டார். இன்னும் செய்யவேண்டிய காரியங்கள் பல இருக்கின்றன. இதிலே அவர் சொல்ல முடியாத விஷயம், அறிந்தாலும் சொல்ல முடியாத விஷயங்கள் சில நடந்துகொண்டு வருகின்றன. நாட்டிலே எவ்வளவு அழகாகப் பேசினாலும்கூட, அந்த ஜாதிய வெறியைத் தூண்டாத உள்ளம் உடைய தலைவரை நாட்டிலே பார்ப்பது மகா அரிதாக இருக்கிறது. முதுகுளத்தூர் சம்பவங்களைப் கூட நல்ல அறிஞர்கள், நல்ல அறிவாளிகள் உலக அனுபவம் உடையவர்கள்கூட, மணிக்கணக்காகப் பேசினார்கள் என்றாலும், அவரவர்கள் ஜாதிக்குத்தான் பேசினார்களே தவிர, பாதிக்கப்பட்ட இரண்டு இனங்களையும் சேர்த்துப் பேசக்கூடிய நேர்மையுள்ளம் உடையவர்கள் யாரும் இருந்ததாக—நான் சபையில் இல்லாத சமயத்தில் யாராவது பேசி இருந்தார்களோ என்னவோ, நான் சபையில் இருந்த சமயத்தில்—நான் பார்க்கவே முடியவில்லை. அம்மாதிரி தான் இருக்கிறது சமாச்சாரம். உண்மையிலேயே சொல்கிறேன் : இந்தச் சபையிலே உள்ளவர்கள் அவ்வளவு பேரும் உள்ளம் பதறிக் கண்ணீர் வடிக்கும் முறையிலே சில சம்பவங்கள் நடந்திருக்கின்றன. . . .

**Sri K. ANBAZHAGAN** : தலைவர் அவர்களே, இந்தச் சபையில் நேர்மை உள்ளம் படைத்தவர்கள் யாரும் இல்லை என்று ஸ்ரீ சன்னாசி அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். அது முறையா என்று தங்களிடமிருந்து அறிய விரும்புகிறேன்.

**Mr. SPEAKER** : கனம் அங்கத்தினர்களைப்பற்றி அத்தகைய அபிப்பிராயத்தைச் சொல்லக்கூடாது. சபையின் அங்கத்தினர் மீது எந்தவிதமான கெட்ட அபிப்பிராயமும் சொல்லவேண்டாம். கெட்ட அபிப்பிராயம் சொல்லாமலே விவாதம் செய்யலாம் என்பது என்னுடைய அபிப்பிராயம்.

**Sri T. V. SANNASI** : நேர்மையுள்ளவர்கள். நான் தவறி இருப்பின் மன்னித்துக்கொள்ளும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

**Sri K. ANBAZHAGAN** : தலைவர் அவர்களே, நேர்மை உள்ளவர்கள் மன்னிக்கவேண்டுமென்று கேட்பது மூலமாக, நேர்மை இல்லாதவர்கள் இந்த அவையிலே இருக்கிறார்கள் என்ற கருத்தை மறுபடியும் கனம் உறுப்பினர் வலியுறுத்துகிறார் என்பதை நான் எடுத்துக்காட்டுகிறேன். அதை அவர் வாபஸ் பெறவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

**Mr. SPEAKER** : இம்மாதிரி ஒருவரைப்பற்றி ஒருவர் குறைவாகப் பேசுவது நல்லது அல்ல ; தயவு செய்து அப்படிப் பேசவேண்டாமென்று கனம் அங்கத்தினர்களை நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

**Sri T. V. SANNASI** : முசிரியில் சில சம்பவங்கள் நடைபெற்றுவிட்டதைப் பற்றிச் சொல்ல ஆசைப்படுகிறேன். கவர்னர் பெருமானுக்கு இது தெரியாது என்று நினைக்கிறேன். அண்மையில் முசிரியில் விவசாயச் சங்கம் என்று ஆரம்பித்து வைத்துக்கொண்டு அதிலும் மிகவும் உயர்ந்த சமதர்மக் கொள்கையைக் கொண்ட இன்றைய கம்யூனிஸ்டுக் கட்சியின்கீழ் இருந்துவரும் விவசாய சங்கத்தார் வேண்டுமென்றே செய்த அட்டூழியத்தைப்பற்றிச்

[Sri T. V. Sannasi] [12th February 1958

சொல்ல விரும்புகிறேன். அறுவடை செய்வதற்காக கூலிக்கு அடுத்த கிராமத்திலிருந்து வரும்விவசாயத் தொழிலாளர்கள் அறுவடை செய்துவிட்டு கூலியைவாங்கிக்கொண்டு திரும்பிப் போகும்போது உழைப்பவர்களுக்கு நிலம் சொந்தம் என்று பேசுகின்ற கம்யூனிஸ்டுக் கட்சியின் கீழ் உள்ள விவசாயச் சங்கத்தைச் சேர்ந்தவர்கள் நடுவழியில் அறுவாள் கத்தி முதலியவற்றை வைத்துக்கொண்டு திரும்பிப்போகிற தொழிலாளர்களைத் தடுத்து நிறுத்திச் செய்திருக்கிற அக்கிரமங்கள் கொஞ்சநஞ்சமல்ல. ஆண்களையும், பெண்களையும் நடுவழியில் மறித்து அவர்கள் செய்த அக்கிரமத்தைச் சொல்லவேண்டுமானால் நா எழாது. ஒரு கோட்டைக் கிழித்து அதற்கு அப்பால் ஆண்கள் சென்றால் கொன்றுவிடுவோம் என்று பயமுறுத்தி பெண்களைத் தனியாக நிறுத்தி, தாலிகட்டிய கணவன்மார்களுடைய முன்னிலையிலேயே—சொல்லவே இருதயம் துடிக்கிறது—அவர்களுடைய மனைவிமார்களைக் கற்பழித்த சண்டாளத் தன்மை நடந்துவிட்டது. யாருக்காக இந்த அரசாங்கம் பாடுபடுகிறதோ, எந்த ஏழை விவசாயிகளுக்காகப் பெரிய பெரிய மிராசுதார்களுடைய பொல்லாப்புகளை, செல்வந்தர்களுடைய பொல்லாப்புகளை எல்லாம் ஏற்றுக்கொண்டு சட்டப் பூர்வமாக பல நன்மைகளை இந்த அரசாங்கம் செய்திருக்கிறதோ அந்த விவசாயிகளுக்குச் செய்திருக்கும் கொடுமைகளை நினைக்கும்போது—திருச்சி ஜில்லா காங்கிரஸ் விவசாயச் சங்கத்தின் தலைவர் என்ற முறையில் சொல்லிக்கொள்கிறேன்—என் நெஞ்சம் பதறுகிறது. அந்தக் கொடூரச் செயல்களை, ராட்சசெயல்களை சொல்வதற்கு முடியாது.

. இன்னொரு செய்தி என்னவென்றால் போலீசாருக்கு இந்த விஷயத்தைப் பற்றி ரிப்போர்ட் கொடுத்த பிற்பாடு அந்த விவசாயச் சங்கத் தலைவர்கள் ஒன்று கூடி என்ன செய்திருக்கிறார்கள் என்றால் முதுகுளத்தூர் சம்பவத்தைபோன்று முசிறியை ஆக்கிவிடவேண்டுமென்று போலீசாருக்குச் சில தவறான தகவல்களைக் கொடுத்து, காரியங்களைச் செய்து ஹரிஜனங்களை மட்டும் அரெஸ்டு பண்ணும்படியாகச் செய்துவிட்டார்கள். ஆனால் முசிறியில் அத்தகைய கொடூரமான செயல்களைப் புரிந்த உத்தமர்கள் தலைமறைவாக இருக்கிறார்கள். அவர்களைப் பற்றிய தகவல்களைப் போலீசாருக்கு எழுதிக் கொடுத்தும் அதை அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை எனத் தெரிகிறது. இப்படிப்பட்ட அராஜகத் தன்மை இந்த அரசாங்கத்தின் நிர்வாகத்தின் கீழா நடைபெறவேண்டுமென்று நினைக்க மனம் கொதிக்கிறது. அந்தப் பகுதியில் உள்ள திராவிட முன்னேற்றக் கழகத்தினரும், சோஷலிஸ்டுகளும் இந்தச் சம்பவத்தை நினைந்து கண்ணீர் விடுகிறார்கள். ஆனால் ஒரே ஒரு கட்சிக்காரர்கள் மட்டும் பேசவில்லை. அந்தக் கட்சியைச் சேர்ந்த சில மெம்பர்கள்கூட இந்தச் சபையில் இருக்க வேண்டியதாக இருந்தும் இல்லாமல் அந்தப் பகுதியில் இருந்துகொண்டே இது சம்பந்தமாக ஆகவேண்டிய காரியங்களைக் கவனித்து வருவதாகக் கேள்வியுற்றேன். இந்த மாதிரிக் கொடுமைகள் நடந்துகொண்டே போனால் போலீஸ் அமைச்சருக்கு மட்டுமல்ல, இந்த அமைச்சர் குழுவுக்கே மட்டுமல்ல, சபையில் உள்ள எல்லா அங்கத்தினர்களும் சேர்ந்து வெட்கித் தலை குனியும்படியாக, இந்த ராஜ்ய பொதுமக்கள் அத்தனை பேரும் வெட்கித் தலைகுனியும்படியாக ஆகிவிடுமே தவிர வேறு இல்லை. சாதீய வெறித் தன்மையை நாட்டைவிட்டே அறவே ஒழிப்பதற்கு முன்நடவடிக்கையாக சாதாரண மக்களுக்கு எல்லாம் தலைவர்கள் என்று சொல்லிக் கொண்டு வருகிற உத்தமர்கள் தங்கள் உள்ளத்திலிருந்து சாதி வெறியை எடுத்துவிட்டால்தான் மிகவும் நன்றாக இருக்கும். இது மிகமிக முக்கியமான காரியமுமாகும்.

இதைவிட இன்னொன்று. சிறிய மிராசுதார்கள் என்று இரண்டு ஏக்கர், ஒரு ஏக்கர் வைத்துக்கொண்டு வாழ்க்கை நடத்தக்கூடியவர்கள், நான்கைந்து குழந்தைகளைப் பெற்றுவிட்டவர்கள், புருஷனை இழந்துவிட்டவர்கள் ஆகிய குடும்பத்தவர்களுடைய நிலைமை இருக்கிறதே அது மிகமிகப் பரிதாபகரமாக இருக்கிறது அந்தப் பகுதியில். எனக்குத் தெரியும். இரண்டு காணி, ஒரு காணி என்று வைத்துக்கொண்டிருக்கிற கைம்பெண்களுடைய நில விளைச்சல்களையெல்லாம் பிடுங்கி விவசாயச் சங்கத்தோடு சேர்த்துக்கொண்டிருக்கிறார்கள் என்று கேள்வியுறுகிறேன். விவசாயிக

12th February 1958] [Sri T. V. Sannasi]

ளுக்கு நன்மை செய்யாவிட்டால் இந்த நாடு உருப்படாது என்பது உண்மை. அதேபோல் ஒழுக்கக்கேடான காரியங்களில் அவர்கள் ஈடுபடாமல் தடுத்து நிறுத்தச் சக்தி இல்லாவிட்டாலும் நாடு சீரழிந்து போய்விடும்.

அதோடு இன்னொன்று. தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ஸ்காலர்ஷிப் கொடுக்கிறார்கள். அதற்காகப் பல விதிகளைப் போட்டிருக்கிறார்கள். பணமும் விநியோகிக்கப்படுகிறது. ஆனாலும் இன்னமும் பணத்தைக் கொடுத்து தாழ்த்தப்பட்ட மாணவர்களைச் சேர்க்கக்கூடிய நிலைமைதான் பல பள்ளிகளில் இருந்துகொண்டிருக்கிறது. இதைப்போல அவர்கள் விஷயத்தில் பல குறைகள் நாட்டில் நிறைய இருந்துகொண்டேதான் இருக்கின்றன. எல்லாக் கட்சித் தலைவர்களையும் ஹரிஜன் என்ற முறையில் நான் வணக்கமாகக் கேட்டுக்கொள்வது என்னவென்றால் எதிர்க்கட்சிக்குக் கண்ணியமும், மரியாதையும் கொடுப்பதற்குக் காரணம் ஆளும் கட்சியில் உள்ளவர்களுக்கு இருக்கக்கூடிய அதிகமான வேலையில் அவர்களுக்குத் தெரியாமல் சில தவறுகளும் நடந்துவிடலாம். அவற்றையெல்லாம் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டுவரக்கூடிய முக்கியமான பொறுப்புடையவர்கள் அவர்கள். ஆனால் எதிர்க்கட்சியில் உள்ள மெம்பர்களோ, தலைவர்களோ பயன்தரக்கூடிய வகையில் காரியங்களைப் புரியாமல் வீணான வாதங்களை எழுப்பிக்கொண்டிருந்தால் பயன் ஏற்படாது. வெறும் வேதாந்தம் பயன்படாது. ஆக்க முறையில் அரசாங்கத்தார் வகுக்கிற திட்டங்கள் எல்லாம் மக்களுக்குப் பயன்படவேண்டுமானால் எல்லாத் தரப்பாருடைய ஒத்துழைப்பும் மிகவும் அவசியமாகும். கவர்னர் அவர்கள் இதைப்பற்றி குறிப்பிட்டிருப்பதும் எல்லோருக்கும் தெரிந்த விஷயம். இந்தக் காரியத்தில் மிகவும் அன்போடு நாட்டு மக்களுக்குப் பணியாற்ற வந்துள்ள அனைவரும் ஒத்துழைக்கவேண்டியது மிகமிக் அவசியம்.

முசிறி தொகுதியைப்பற்றிய வரையில் அந்தத் தொகுதியில் உள்ள போலீஸ் அதிகாரிகள் கடமையோடு நடந்துகொள்ளவில்லை என்ற வதந்தி—என்ற எண்ணம்—அந்தப் பகுதி மக்களுக்கு நிறைய இருந்துகொண்டிருக்கிறது. அதற்குத் தக்க பரிகாரம் உடனே செய்து நேர்மையுடைய அதிகாரிகளை அங்கே நியமித்து தக்க நடவடிக்கையை சர்க்கார் எடுத்துக் கொள்ளவில்லையானால் நானும் என்னுடைய நண்பர் முத்தையா அவர்களும் ராஜிநாமாச் செய்யக்கூடிய வகையில் அப்பகுதி மக்களால் நிர்ப்பந்தம் செய்யப்படுவோம். முசிரியில் நடைபெற்றிருக்கிற சம்பவத்திற்குத் தக்க பரிகாரம் எடுக்கவில்லையென்றால் இதுபோன்ற அராஜக, எதேச்சாதிகார செயல்கள் ராஜ்யம் முழுதும் பரவுவதற்கு வாய்ப்பு உண்டாகிவிடும். அதற்கு இடம் இல்லாதபடி இந்தப் பகுதியில் நடைபெற்றிருக்கிற ஒரு அக்கிரமமான செயலுக்கு நியாயமான பரிகாரத்தைத் தேடுவதற்கு சர்க்கார் உடனடியாக நடவடிக்கை எடுத்தாகவேண்டும். இதற்குப் பரிகாரம் கிடைக்கும் என்ற நம்பிக்கையோடு என்னுடைய சிற்றுரையை முடித்துக்கொள்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, நான் இப்போது கவர்னர் பெருமான் உரையின் மீது நடந்து கொண்டிருக்கும் விவாதத்தில் குறுக்கிட்டு கைத்தறி சம்பந்தமாகச் சில வார்த்தைகள் பேச முன் வந்திருக்கிறேன். சாதாரணமாக ஒவ்வொரு இலாகாவையும் பற்றிய விஷயங்கள், விவரங்கள் எல்லாம் அந்தந்த இலாகா சம்பந்தப்பட்ட வரவு செலவு கணக்கு பற்றிப் பரிசீலனை செய்கிறபோது சமர்ப்பிக்கப்படும். ஆனால் கைத்தறி சம்பந்தமாக எழுந்திருக்கிற ஒரு முக்கியமான பிரச்சனையை ஒட்டியும், அதைப்பற்றி சில அங்கத்தினர்கள் எடுத்துக் கூறியதன் காரணமாகவும் சென்னை ராஜ்ய சர்க்கார் கைத்தறி சம்பந்தமாக எடுத்துக்கொள்ளும் நடவடிக்கையையும், இன்று இருக்கிற நிலைமையையும் விளக்கவேண்டுமென்று நான் முன் வந்திருக்கிறேன். 10-30 a.m.

நமது சென்னை ராஜ்யத்திலே கைத்தறித் தொழிலானது விவசாயத்திற்கு அடுத்தபடியாக முக்கியத்துவம் வாய்ந்தது என்று எல்லோரும் அறிந்ததே. இன்றைக்கு 20 லட்சம் மக்கள் அந்தத் தொழிலை நம்பி வாழ்கின்றார்கள். இந்தக் கைத்தறித்தொழில் வளர்ந்து வருவதைப் பார்த்தால் அரசாங்கம் எவ்வளவு தூரம் இதில் கவனம் செலுத்திவருகிறது என்பது தெளிவுபடும். இந்த மாகாணத்தில் சுமார் 5 லட்சம்

[Sri R. Venkataraman] [12th February 1958

கைத்தறி நெசவாளர்கள் இருக்கிறார்கள். இதில் கூட்டுறவு இயக்கத்தில் சேர்ந்திருக்கும் கைத்தறியாளர்கள் இரண்டு லட்சம் பேர். மற்ற மூன்று லட்சம் நெசவாளர்கள் மாஸ்டர்வீவர் மூலமாகவும், தனியார் மூலமாகவும் இந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். இம்மாதிரி மாஸ்டர் வீவர்கள் மூலமாகவும் தனியார் துறையிலும் நடத்துகிற நெசவாளர்களைப்பற்றிய சரியான புள்ளி விவரம், கணக்குகள் இல்லை. ஆனால் கூட்டுறவு சங்கத்தின் மூலமாக இருந்துவரும் கைத்தறியாளர்களைப்பற்றிய புள்ளி விவரம் நம்மிடம் இருக்கின்றன. அதாவது உற்பத்தி எவ்வளவு, விற்பனை எவ்வளவு, அவர்களுக்கு கொடுக்கின்ற கூலி எவ்வளவு, ரிபேட் எவ்வளவு என்பதில் நம்மிடம் புள்ளி விவரங்கள் இருக்கின்றன. ஆனால் நமது கூட்டுறவு இயக்கத்தில் சேராத மூன்று லட்சம் நெசவாளர்களின் புள்ளி விவரங்கள் கிடைக்காமல் இருக்கிற குறையைப் போக்குவதற்காக சென்னை சர்க்கார் இப்போது டைரெக்டர் ஆப் ஸ்டாடிஸ்டிக்ஸ் அமைத்து எல்லா விதமான புள்ளி விவரங்களையும் சேகரிப்பதற்கு ஏற்பாடு செய்திருக்கிறார்கள். ஆகவே கைத்தறி நெசவாளர்களைப்பற்றி இப்பொழுது பேசவேண்டுமென்றால் கூட்டுறவு சங்கத்தின் புள்ளிவிவரங்களை வைத்துக்கொண்டுதான் பேச வேண்டியிருக்கிறது. அந்த புள்ளிவிவரங்களைப்பற்றி விளக்குவதற்காகத் தான் நான் முன் வந்துள்ளேன். சென்னை ராஜ்யத்தில் இன்றைக்கு 961 சொஸைடிகள் இருக்கின்றன. அந்த சொஸைடிகளில் மொத்தம் ஒரு லட்சத்து எழுபத்து ஒன்பது ஆயிரம் கைத்தறி நெசவாளர்கள் மெம்பர்களாக இருக்கிறார்கள். இதன் மூலதனம் 81 லட்ச ரூபாய். அவர்களுக்கு இரண்டு கோடி அறுபது லட்ச ரூபாய் சம்பளமாக வினியோகிக்கப்பட்டிருக்கிறது. ஒரு லட்சத்து தொண்ணூற்றாறுயிரம் ரூபாய் டிவிடெண்டாக கொடுக்கப்பட்டிருக்கிறது. சென்ற ஆறு மாத காலத்தில் கைத்தறி உற்பத்தியின் மதிப்பு 5 கோடியே 5 லட்சத்து 42 ஆயிரம் ரூபாய் ஆகும்.

இந்த புள்ளிவிவரங்களைப் பார்த்தால் கைத்தறித் தொழில் எவ்வளவு தூரம் சீரடைந்திருக்கிறது என்பது நன்றாகப் புலனாகும். இதை விற்பனை செய்கின்ற முறையிலும் அரசாங்கம் முயற்சி எடுத்துக்கொண்டு வருகிறது. நம் சென்னை ராஜ்யத்தில் 260 கைத்தறி விற்பனை டிப்போக்கள் திறக்கப் பட்டிருக்கின்றன. வெளி ராஜ்யங்களிலும் நம் கைத்தறி ஆடைகள் விற்பனையாவதற்கு முயற்சிகள் செய்யப்பட்டு வருகின்றன. அந்த முறையில் மற்ற ராஜ்யங்களில் 25 டிப்போக்கள் திறந்து வைக்கப்பட்டிருக்கின்றன. இந்த கைத்தறித் துணிகளுக்கு வெளிநாடுகளில் கிராக்கி இருப்பதால் டிஸைன் முதலியனவை தயாரிப்பதைப்பற்றி ஆராய்ச்சிகள் நடத்தப்பட்டு வருகின்றன. பிற ராஜ்யங்களில் டிப்போக்கள் வைக்கவேண்டுமானால் அந்தந்த ராஜ்யத்தின் அனுமதியைப் பெறவேண்டும். மேலும் இது ஒரு அகில இந்திய பிரச்னை. அகில இந்திய போர்டின் மூலமாகத்தான் மானயம் கிடைக்கிறது. அந்த முறையிலே இன்னும் பல பாகங்களில் திறப்பதற்கு முயற்சி எடுத்துக்கொண்டு வருகிறோம்.

சாதாரணமாக இந்த கைத்தறித் துணிகளை பெரும் அளவிற்கு விற்பனை செய்யவேண்டுமென்றால் அதற்கு ரிபேட்தான் முக்கியம். இந்த ரிப்பேட்டானது நொண்டிக்கு முட்டுக்கொடுப்பதுபோல் இருக்கிறது. எவ்வளவு காலத்திற்குத்தான் இந்தத் தொழிலை இவ்விதமாக முட்டுக் கொடுத்து நிலைத்து வைத்திருக்க முடியும். ஆகவே இதைப் படிப்படியாக குறைத்துவிடலாம் என்று வாதம் செய்கிறார்கள். இதனுடைய சரித்திரத்தை நாம் ஆராய்ந்து பார்ப்போமானால் எப்படி இந்த ரிபேட் செஸ் நிதியிலிருந்து கொடுக்கப்பட்டு வந்திருக்கிறது என்பது நன்றாக விளங்கும். இந்தக் காலத்திலே கைத்தறித் துணியானது மில் துணிக்கு நேராக போட்டி போட முடியாது. ஏனென்றால் கைத்தறித்துணியின் உற்பத்தியானது மில் துணியின் உற்பத்தியைவிட கிராக்கியாகத்தான் இருக்கும். எனவே மில் துணியுடன் எந்த நாளும் போட்டியிட முடியாது. ஆகவே கைத்தறித் துணிக்கு மார்க்கெட் வேண்டுமென்றால் அதற்கு முக்கியமாக ரிபேட்தான் அவசியம். அதை ஒட்டித்தான் சில வருஷங்களுக்கு முன் சென்னை சட்ட சபையில் சேலைகளையும் வேஷ்டிகளையும் கைத்தறிகளுக்காவே ஒதுக்கப் படவேண்டும், மில்களுக்கு அனுமதிக்கக்கூடாது என்ற தீர்மானத்தையும் போட்டு மத்திய சர்க்காருக்கு அனுப்பினோம். அந்த ஒத்துக்கொள்வதன்

12th February 1958] [Sri R. Venkataraman]

மூலம் நன்மை கிடைக்குமா என்று பார்த்தோம். ஆனால் மத்திய சர்க்கார் அதை ஒத்துக் கொள்ளவில்லை. மத்திய சர்க்கார் இதன் விளைவாக பஞ்சாலைகளின் உற்பத்திகள் மீது "செஸ்" தீர்வை விதிக்க முன் வந்தனர். இதன் வருவாயைக்கொண்டு கைத்தறி செஸ் நிதியை ஏற்படுத்தி கைத்தறிகளுக்கு உதவத் தீர்மானித்தார்கள். கைத்தறித் துணிகள் விற்பனை மீது ரிபேட் கழித்துக் கொடுப்பது "செஸ்" நிதியில் இருந்து உதவும் வழிகளில் சேர்ந்தது. இதனால் கைத்தறி விற்பனைக்கு ஊக்கம் ஏற்பட்டது. ஆதலால் இந்த முடிவு அந்தக் காலத்திலேயே மத்திய சர்க்காரால் செய்யப்பட்டது. அப்படி ரிபேட் கொடுத்து வந்த நேரத்தில் கைத்தறி துணி ஏராளமாக விற்பனை ஆகிற்று. அதனால் விற்பனை மூன்று மடங்கு பெருகியது. ஆனால் ரிபேட்டை குறைக்க வேண்டும் என்ற நாளிலிருந்து கைத்தறி விற்பனை குறையத் தொடங்கியது. அதனால் துணியின் தேக்கம் அதிகமாயிற்று. தீபாவளி காலங்களிலேதான் சாதாரணமாக கைத்தறித் துணியின் விற்பனை அதிகமாக இருக்கும். அதே மாதிரியாக ரிபேட் அதிகமாகக் கொடுக்கப்பட்டபோது முக்கியமாக தீபாவளியின்போது விற்பனை அதிகமாகி தேக்கம் குறைந்தது. ஆனால் தீபாவளி முடிந்தவுடன் கைத்தறித் தேக்கம் அதிகமாயிற்று. சென்ற அக்டோபரில் இருந்த இருப்பின் துணி மதிப்பு ரூபாய் 45,87,000. ஆனால் இந்தச் சமயத்திலே மத்திய சர்க்கார் ரிபேட் தொகையைக் குறைத்த காலத்திலே. சென்ற மார்ச் மாதம் தேக்கமான ஜவுளியின் மதிப்பு ரூபாய் 64,06,000. தீபாவளி சமயம் விற்பனை காரணமாக தேக்கம் குறைந்தது. சென்ற அக்டோபரில் இருப்பின் மதிப்பு ரூபாய் 45,87,000. ஆனால் மீண்டும் தேக்கம் அதிகரித்தது. சென்ற டிசம்பரில் தேக்கத்தின் மதிப்பு ரூபாய் 84,94,000. ஆனால் இந்த நிலைமையிலேயே சென்ற டிசம்பரிலிருந்து ரிபேட் தொகையை மத்திய சர்க்கார் குறைத்தனர். இது வேண்டாமென்றும் மார்ச்சு மாதம் வரையிலாவது ஒத்திப்போட வேண்டுமென்றும் மத்திய சர்க்காரைக் கேட்டும் அவர்கள் ஒத்துக் கொள்ளவில்லை. அதேபோல், மத்திய சங்கத்தின் புள்ளி விவரங்களைப் பார்க்கும்போது, அவர்களிடம் 1957-ம் வருஷம் மார்ச்சு மாதத்தில் மொத்தம் ரூபாய் 51,71,000 பெறுமான சரக்குகளும் 1957-ம் வருஷம் டிசம்பர் மாதத்தில் மொத்தம் ரூபாய் 67,57,000 பெறுமான சரக்குகளும் தேங்கியிருந்தன என்று தெரிகிறது. ஆகவே கைத்தறித் துணிகளின் தேக்கம் அதிகமாகிக் கொண்டிருக்கிறது என்று தெரிகிறது. கூட்டுறவுச் சங்கங்களில் கைத்தறித் துணிகள் இவ்வளவு தேங்கியிருந்தால், தனிப்பட்டவர்களிடம் அவை தேங்கியிருக்கும் அளவு இதைவிட 20 சதவிகிதம் அதிகமாக இருக்கும் என்று எதிர்பார்க்கலாம் ; மொத்த கைத்தறிகளில் 40 சதவிகிதம் கூட்டுறவு முறையில் இருப்பதாலும் பாக்கியுள்ள 60 சதவிகிதம் கைத்தறிகள் தனிப்பட்டவர்களிடம் இருப்பதாலும் தனிப்பட்டவர்களிடம் தேங்கியுள்ள துணிகள் அந்த அளவில் இருக்கலாம் என்று எதிர்பார்ப்பதில் தவறில்லை.

இது சம்பந்தமாக, சென்னை சர்க்கார் இங்குள்ள கஷ்டங்களை மத்திய சர்க்காருக்கு பலமாக எடுத்துரைத்தது. இவ்வாறு இங்கே தேக்கம் இருந்து கொண்டேயிருக்கிறது என்று சொல்கின்ற காலத்திலேயே மத்திய சர்க்கார், அதுவரையிலும் கொடுத்துவந்த கழிவை சென்ற டிசம்பர் 1-ம் தேதியிலிருந்து 9 நயா பைசாவிலிருந்து 6 நயா பைசாவாகக் குறைத்து விட்டார்கள். அவ்வாறு ரிபேட்டைக் குறைப்பது தவறு என்றும், இப்போதுள்ள நெருக்கடியை சமாளிக்க முடியாத நிலையில் இருக்கிறது என்றும், அந்தக் குறிப்பை எடுத்துவிட வேண்டுமென்றும், இப்போதுள்ள தேக்கம் குறையும் வரையிலாவது—மார்ச் மாதம் 31-ம் தேதி வரையிலும்—ரிபேட் குறைப்பை ஒத்திப்போட வேண்டுமென்றும் மத்திய சர்க்காருக்குக் கடிதம் எழுதினோம். மத்திய சர்க்கார், பல மா நிலங்களிலிருந்தும் அங்கங்கே நிலவிவரும் சூழ்நிலைகளைப்பற்றி வரும் தகவல்களை கவனித்து இந்தப் பிரச்சனையைப் பரிசீலனை செய்கிறார்கள். இப்போது இந்தியாவில் சென்னை, ஆந்திரா ஆகிய இரு ராஜ்யங்களிலும் கைத்தறித் துணிகள் அதிகமாக உற்பத்தியாகின்றன ; ஆனால் இந்த ராஜ்யங்களில் இவைகளின் விற்பனை குறைவாக இருக்கின்றன. இவை தவிர மற்ற ராஜ்யங்கள் எல்லாவற்றிலும் கைத்தறித் துணிகள் நிறைய விற்பனையாகின்றன ; ஆனால் அவைகளில் கைத்தறித் துணிகள் குறைவாக உற்பத்தியாகின்றன. மத்திய

[Sri R. Venkataraman] [12th February 1958

சர்க்கார், எல்லா ராஜ்யங்களிலுமுள்ள நிலவரத்தைப் பார்த்து ஒரு சராசரிக் கணக்குப்போட்டுவிட்டு, கொஞ்ச காலத்திற்கு ரிபேட்டைக் குறைத்து வைத்து அப்போது நிலவரம் எப்படி இருக்கிறது என்று பரிசீலனை செய்து பின்பு இந்தப் பிரச்சனை குறித்து முடிவு செய்யலாம் என்று தீர்மானித்திருக்கிறார்கள். எப்போதைக்கும் ரிபேட்டை நீடித்துக் கொண்டுபோக முடியாது என்று அவர்கள் சொல்லிவிட்டார்கள். ஆகவே, இன்று கைத்தறித் தொழிலில் நமது ராஜ்யத்தில் ஏற்பட்டிருக்கும் நெருக்கடிக்குக் காரணம், பெரும்பாலும் ரிபேட் குறைப்புதான் என்று சொன்னால், அது உண்மைதான். ரிபேட் குறைப்பை நீக்கி பழையபடி ரிபேட்டை 9 நயா பைசாவாக மாற்றியமைப்பதற்கு சர்க்கார் எல்லா முயற்சிகளையும் எடுத்துக்கொள்ளும் என்று இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, விற்பனை விஷயத்திலும் நாம் இன்னும் புதிய முறைகளை அனுஷ்டிக்க வேண்டும். இந்த நாட்டில் உற்பத்தியாகும் கைத்தறித் துணிகளை ஏற்றுமதி செய்வதற்கு ஒரு எக்ஸ்போர்ட் கார்ப்பொரேஷனை அமைக்கலாம். அந்தக் கார்ப்பொரேஷன் இங்கே உற்பத்தியாகும் கைத்தறித் துணிகளை யெல்லாம் வாங்கி, அவைகளை, எந்த வெளி நாடுகளில் அவை செலவாகுமோ அந்த நாடுகளுக்கு அனுப்புவதற்கு முயற்சி செய்யலாம். மேலும், கைத்தறித் தொழிலாளர்கள்கூட, பிற ராஜ்யங்களுக்குத் தேவையான ரகங்களில் கைத்தறித் துணிகளை உற்பத்தி செய்வதற்கு முயற்சிக்கலாம். உதாரணமாக லுங்கி ஏற்றுமதி திடீரென்று அதிகரிக்கிறது, அல்லது திடீரென்று குறைகிறது. நமது ராஜ்யத்தில் தயாரிக்கப்படுகின்றவை போன்ற லுங்கிகள் ஜப்பானிலிருந்து ஆப்பிரிக்கா போன்ற நாடுகளில் திடீரென்று ஏராளமாக இறக்குமதி செய்யப்பட்டு விட்டால், நமது ராஜ்யத்தில் உற்பத்தி செய்யப்பட்ட லுங்கிகளின் ஏற்றுமதி குறைந்து அவை இங்கே தேங்கி விடுகின்றன. ஆனால் அந்த நாடுகளில் இந்தமாதிரியான ரகத் துணிகள் கிடைக்க வில்லையானால், அப்போது அவைகளை ஏராளமாக உற்பத்தி செய்ய வேண்டிய அவசியம், சமாளிக்க முடியாத அளவிற்கு நமக்கு ஏற்படுகிறது. இந்த நெருக்கடிகளை யெல்லாம் சமாளிப்பதற்கு ஒரு எக்ஸ்போர்ட் கார்பரேஷன் அவசியம். கூட்டுறவுச் சங்கங்களில் உள்ளவர்கள், தனிப்பட்டவர்கள் ஆகிய இரு பிரிவினரும் சேர்ந்து அப்படிப்பட்ட கார்ப்பொரேஷனை அமைக்க முன்வர வேண்டும். அப்படிப்பட்ட ஒரு கார்ப்பொரேஷனை அமைத்தால், கைத்தறித் துணிகளை எப்போதும்—வேண்டியபோதும் வேண்டாதபோதும்—உற்பத்தி செய்துவைத்திருந்து, அந்த அந்த நாடுகளில் அவைகளின் தேவை ஏற்படும்போது, அங்கே அவைகளை ஏற்றுமதி செய்யலாம். இந்த நிலைமையை யெல்லாம் தெரியப்படுத்தவேண்டுமென்பதற்காகத்தான் இந்த விவாதத்தில் நான் குறுக்கிட்டேன். நான் கூறியவைகளை சபையினர் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

Sri N. K. PALANISAMI : On a point of information, Sir, கனம் மந்திரி அவர்கள் மிகுந்த முயற்சி எடுத்துக் கொண்டு கைத்தறித் துணிகளுக்கு அளிக்கப்படும் ரிபேட்டைக் குறைக்கக் கூடாதென்று எவ்வளவோ சொல்லியுங்கூட மத்திய சர்க்கார் அதற்கு ஒத்துக் கொள்ளவில்லை என்பதை அறிந்தோம். சர்க்கார் மேற்கொண்டு என்ன நடவடிக்கை எடுப்பார்கள் என்று கனம் மந்திரி அவர்கள் சொல்ல வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

10-45 a.m. Sri M. SELVARAJ : மதிப்பிற்குறிய தலைவர் அவர்களே, கவர்னர் உரையின் மீது பேசி என் அபிப்பிராயங்களைச் சொல்ல முன் வந்திருக்கிறேன். பருவநிலை திருப்திகரமாக இருப்பதாகவும், அதன் காரணமாக நியாய விலைக் கடைகளை காலவரம்பின்றி நீடித்து நடத்த வேண்டிய அவசியம் இருக்காதென்று எதிர்பார்ப்பதாகவும் கவர்னர் அவர்கள் தமது உரையில் கூறியுள்ளார்கள். இப்போது பருவ நிலை திருப்திகரமாக இருக்கும்போது உணவு தானியங்களின் விலைகள் அதிகமாக உயர்ந்திருக்கின்றன. இந்த நிலையில் நியாய விலைக் கடைகளை எடுத்துவிட்டால் வறுமையால் வாடும் மக்கள் பட்டினியால் சாகவேண்டிய நிலைமை ஏற்படும் என்று சொல்லிக்கொள்கிறேன்.

12th February 1958] [Sri M. Selvaraj]

நமது அரசாங்கத்தாரால் நம் ராஜ்யத்தில் நிறைவேற்றப்படுவதற்காக வகுக்கப்பட்ட பெரிய பெரிய திட்டங்கள் டில்லியிலுள்ள வடநாட்டு சர்க்காரிடம் நிறைவேற்றப்படுவதற்காக ஒப்படைக்கப்பட்டிருக்கின்றன. 68 கோடி ரூபாய் செலவு மதிப்பீடுள்ள நெய்வேலிச் சுரங்கத் திட்டம் மத்திய சர்க்காரிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. வடநாட்டில், 178 கோடி ரூபாய் செலவு மதிப்பீடுள்ள பக்ரா நங்கல் அணைக்கட்டுத் திட்டம் மத்திய சர்க்காரால் அங்கீகரிக்கப்பட்ட பூரா பணமும் மத்திய சர்க்காரால் செலவழிக்கப்பட்டு பிறகு அதை நிறைவேற்றும் பொறுப்பை பஞ்சாப் சர்க்காரிடம் ஒப்படைப்பதற்கு மத்திய சர்க்கார் தீர்மானித்திருக்கிறார்கள். அஸ்ஸாம் ராஜ்யத்தில் நிறுவவேண்டிய எண்ணெ சுத்திகரிப்புத் தொழிற்சாலைத் திட்டத்தை அங்கீகரித்த பிறகு, அதை நிறைவேற்றும் பொறுப்பை அந்த ராஜ்ய சர்க்காரிடம் ஒப்படைத்திருக்கிறார்கள். அங்கெல்லாம் அப்படி இருக்கும்போது இங்கே நெய்வேலிச் சுரங்கத் திட்டத்தை நிறைவேற்றும் பொறுப்பை ஏன் மத்திய சர்க்காரிடம் ஒப்படைக்க வேண்டும் என்று கேட்கிறேன். நெய்வேலிச் சுரங்கத் திட்டத்தை நிறை வேற்றும்போது பல கஷ்டங்கள் ஏற்படுகின்றன. நெய்வேலித் திட்டப் பிரதேசத்தில் இருந்துவந்த மக்கள் அங்கிருந்து வெளியேற்றப்படுகிறார்கள். அவர்கள் வேறு எங்கும் நல்ல முறையில் குடியேறுவதற்கு வசதி செய்து கொடுக்கப்படவில்லை. அவர்களுக்கு சரியான அளவில் நஷ்ட ஈடு கொடுக்கப்படவில்லை. அண்மையில் கனம் முதல் அமைச்சர் அங்கே வந்து நேரில் இடங்களைப் பார்த்து குப்பநத்தம் காடுகளில் சில ஏக்கராக்கள் நிலப்பரப்பை அவர்களுக்குக் குடியிருப்பு வசதிக்காக ஒதுக்கினர். அவர் வந்தபொழுது லாரியில் மக்களை ஏற்றி வந்தார்கள் குடியேற்றுவதற்காக. அங்கே அந்தக் குடியானவர்கள் குடியேறுவதற்கு ஏற்பாடு செய்யப்படும் என்று சொல்லப்பட்டது. அப்படிச் சொல்லி 6 மாதங்கள் ஆகியும் இன்னும் அதற்கு ஏற்பாடு செய்யப்படவில்லை. கிராம மக்கள் அவர்களுடைய வீடுகளிலிருந்து வெளியேற்றப்படுகிறார்கள். அவர்களுக்கு போதிய நஷ்டயீடும் கொடுக்கப்படவில்லை, அவர்கள் வேறு இடத்தில் குடியேறுவதற்கும் ஏற்பாடு செய்யப்படவில்லை. இந்த நிலையில் அங்கு பாதிக்கப்பட்ட மக்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். அங்கே 97 சத விகிதம் ஒரு சமூகத்தினர் மட்டும் பல வேலைகளை அனுபவித்து வருகிறார்கள். மற்ற சமூகத்தினர் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். இதை இங்கே நான் வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறேன். இது சம்பந்தமாக முன்பே கனம் மந்திரியிடம் மகஜர் கொடுத்தோம். அதை கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

தென்னாற்காடு ஜில்லாவில் முன்னேற்ற வேலைகளுக்குப் போதிய ப்ளாக்குகள் எடுத்துக்கொள்ளப்படவில்லை - சமீபத்தில் விருத்தாசலம் தாலூகாவில் திட்டகுடி ப்ளாக் எடுத்துக்கொள்ளப்பட்டது வரவேற்கத்தக்கது. விருத்தாசலம் தாலூகாவில் பெண்ணாடம், ஊமங்கலம், நல்லூர் முதலிய ப்ளாக்குகள் பின்னடைந்திருக்கின்றன. அவைகளை அபிவிருத்தி செய்ய வேண்டும். அவைகளை ப்ளாக் அபிவிருத்தித் திட்டத்தில் வருகிற மாதத்தில் எடுத்துக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். விழுப்புரம் தாலூகாவிலும் எந்த ப்ளாக்கும் ப்ளாக் அபிவிருத்தித் திட்டத்திற்கு எடுத்துக்கொள்ளப்படவில்லை. அங்கேயும் ப்ளாக் அபிவிருத்தித் திட்டத்தை நடத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

சிறு சேமிப்புத் திட்டத்தைப் பற்றி சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். கிராமங்களில் விவசாயிகளிடம் ரெவின்யூ இன்ஸ்பெக்டர்களும் மணியக்காரர்களும் நிலத் தீர்வைக்காக வரிப்பணம் வாங்கும்போது, சிறு சேமிப்பிற்குப் பணம் திரட்டுவதற்காக, வரிப் பணத்தைத் தவிர 2-3 பங்கு பணம் தர வேண்டுமென்று வற்புறுத்துகின்றனர்.

சிறு சிறு வியாபாரிகளிடம் விற்பனை வரி இலாகா அதிகாரிகள் சென்று ஆயிரம் ரூபாய் கொடுக்கவேண்டுமென்றும், இரண்டாயிரம் ரூபாய் கொடுக்க வேண்டுமென்றும், சிறு டீக் கடை வைத்திருப்பவர்களிடம் சென்று 500 ரூபாய் கொடு என்றும் கேட்டு அப்படி சிறு சேமிப்புத் திட்டத்திற்கு கொடுக்கவில்லை என்று சொன்னால் உங்களுடைய கணக்குகளை அதிகமான முறையில் அஸெஸ்மெண்ட் செய்து கூடுதல் வரி வசூல் செய்யவேண்டி

வரும் என்று அவர்களை வற்புறுத்துகிறார்கள். அதனால் மக்கள் படும் கஷ்டம் சொல்லி முடியாது. ஆகவே நான் மதிப்பிற்குரிய மந்திரியவர்களைக் கேட்டுக்கொள்வது என்னவென்றால், அப்படி கண்டிப்பாக வசூல் செய்யாதீர்கள். மக்களாக விரும்பிப் பணம் கொடுத்து அரசாங்கத்தின் திட்டம் வெற்றிகரமாக நடக்கவேண்டுமென்று சொல்கிற மந்திரிகள் அப்படி விரும்பாதவர்களிடம் இருந்து வற்புறுத்தி வசூல் செய்யக்கூடாது என்ற ஒரு உத்தரவை அந்தந்த ஜில்லாக் கலெக்டர்களுக்கு அனுப்பி மக்கள் விரும்பிக் கொடுக்கக்கூடிய பணத்தைத் தான் பெற்றுக்கொள்ள வேண்டும். அவர்களை வற்புறுத்துவது சரியல்ல. கட்டாயப்படுத்தி பணம் பெறக்கூடாது. ஆகவே, அதற்குவேண்டிய ஒரு உத்தரவை பிறப்பிக்கவேண்டுமென்று நான் சர்க்காரை பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறேன். இப்படி பல குறைகள் இருக்கின்றன. ஆனால் கவர்னரது உரையில் இவைகளைப்பற்றி ஒரு குறிப்பும் காணவில்லை. எனக்கு முன் பேசிய கனம் அங்கத்தினர் எழுமலை அவர்கள் தாலி என்ற முறையைப்பற்றி விளக்கமாகச் சொன்னார்கள். நான் அவர்களுக்குச் சொல்லிக்கொள்வது என்னவென்றால் தாலி என்பது வறுமை காலத்திலே விற்க வேண்டி வரும் ஒன்றாகும் என்று அவர்கள் சொன்னார்கள். குடிகாரனும், சூதாடிகளும் தான் தாலியை விற்பார்கள் என்று நான் கேட்டிருக்கிறேன். அப்படியல்லாது வறுமை காரணமாக தாலியை விற்கவேண்டி வருகிறது என்று சொன்னால் அப்படித் தாலியை விற்கக்கூடிய நிலையில் நமது நாடு இருக்கிறது என்று சொன்னால், அந்நிலைமையில்தான் நம் அரசாங்கம் நடக்கிறது என்று சொன்னால், அந்நாட்டில் இருக்கும் மக்கள் எந்நிலையில் இருக்கிறார்கள் என்பதைத்தான் இது எடுத்துக் காட்டுகிறது. பின்னர் கனம் அங்கத்தினர் சந்நியாசி அவர்கள், பல குறைகளைப்பற்றிச் சொன்னார்கள். முடிவில் தனது பதவியைக் கூட ராஜிநாமா செய்து விடுவதாகச் சொன்னார்கள். இன்று மக்களுக்கு எவ்வித பாதுகாப்பும் இல்லை என்று ஆட்சியில் இருக்கக்கூடிய கட்சியைச் சேர்ந்தவர்களே சொல்லும் ஒரு நிலை ஏற்பட்டிருக்கிறது. ஜனவரி 6-ம் தேதி நடந்த சம்பவங்களின்போது, போலீஸ் அதிகாரிகள் மக்களை மிகவும் அக்கிரமமாகத் தாக்கினார்கள். அதே போல் சென்னையில் மாத்திரமல்லாது வேறு மாவட்டங்களிலும் பலர் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள். ஆனால் தென் ஆற்காடு மாவட்டத்தில் அப்படி எந்த விசமான கைதும் செய்யப்படவில்லை. அதற்குக் காரணம், அந்த மாவட்டத்தில் உள்ள போலீஸ் அதிகாரியின் திறமையும் சாமர்த்தியமுமே. தவிர மற்ற மாவட்டங்களில் போலீஸ் அதிகாரிகள் மிகவும் அக்கிரமமாக நடந்து கொண்டு ரோடில் நடந்து சென்றவர்களைக்கூட கைது செய்து, சில செக்ஷன் போட்டு அவர்களுக்குத் தண்டனை அளித்திருக்கிறார்கள். இந்நிலையில், மக்கள் ஆட்சி போலீஸ் ஆட்சியாகவும் தடியாட்சியாகவும் மாறியிருக்கிறது. இது, வெகு காலம் நீடிக்காது என்று நான் அவர்களிடம் திட்டவட்டமாகக் கூறிக்கொள்ள விரும்புகிறேன். அரசாங்கம் செய்வது நல்லதா அல்லது குற்றமா என்று புரிந்துகொண்டு நடக்கும் மக்களை, அம்மக்களின் கவனத்தை வேறு விதத்தில் திருப்ப அரசாங்கம் முன் வருமானால் அதைக்கண்டு மக்கள் ஏமாற மாட்டார்கள் என்று சொல்லிக் கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

10-55 a.m. **SRIMATHI T. N. ANANDANAYAKI**: மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, நம்முடைய புதிய கவர்னர் பெருமான் அவர்களுடைய உரையின் மேல் மகிழ்ச்சியையும் நன்றியையும் தெரிவித்துக்கொண்டு ஒரு சில வார்த்தைகள் பேச நான் அனுமதி கேட்கிறேன். கவர்னர் பெருமானுடைய உரை மிகச் சுருக்கமாக இருந்தாலும் மிகச் சிறந்த கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு தீட்டப்பட்டிருக்கிறது என்பதை எதிர்க்கட்சிக்காரர்களும் ஒத்துக்கொள்வதை நாம் பார்க்கிறோம். குறிப்பாக வட கிழக்கில் இருந்து தென் கிழக்கிற்கு கவர்னராய் வந்திருக்கிற அவர் நாட்டினுடைய ஒற்றுமையைப்பற்றி மிகச் சிறப்பாகச் சொல்லியிருக்கிறார்கள் நாம் ஒன்று சேர்ந்திருந்தால்தான் உலகத்தில் வாழ முடியும் என்பதை எடுத்துக் காட்டும் அளவிற்கு, அவர்கள் அவர்களது உரையில் சுட்டிக்காட்டியிருப்பதை உலகத்தின் இன்றைய போக்கை உணர்ந்தவர்கள் யாரும் மறுக்கமுடியாது என்பதை நான் தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இன்று நாம் குறிப்பாகப் பார்க்கிறோம், ஆரப் குடியரசு

என்று ஸிரியாவும் ஈஜிப்தும் ஒன்று சேர்ந்து எமனும் அதோடு சேர்ந்து, இப்பொழுது எகிப்தின் தலைவராக இருக்கும் நாஸர் அவர்களை தலைவராக ஏற்றுக்கொள்ள முன் வந்திருக்கிறது. இப்படி பல நாடுகள் ஒன்று சேர்ந்து ஒரு சக்தியாக விளங்கப் பாடுபடும்போது, இதுவரையில் இணையாத நாடுகள் இணைய முற்படும் இக்காலத்தில், அதற்கு வேண்டிய முயற்சிகள் எடுத்துக்கொண்டிருக்கும்போது, பல நூற்றாண்டுகளாக இணைந்திருக்கக் கூடிய நமது இந்திய தேசத்தை துண்டிக்க வேண்டுமென்று ஒரு சில கட்சிகள் சொல்வதென்றால் அவர்கள் எவ்வளவு பிற்போக்கானவர்களாக இருக்கிறார்கள் என்று கூறுவதோடு அவர்களை, இன்றைய உலகத்தின் போக்கைப் பார்க்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பிற நாடுகள் எல்லாம் ஒன்றுபட்டு உலகத்தில் முன்னேற ஆசைப்பட்டுக் கொண்டிருக்கும் போது, இங்கு ஒரு சிலர் தம்முடைய சுயநலத்திற்காக நாட்டை துண்டாட வேண்டுமென்று சொல்கிறபோது, அவர்களைப் பொறுத்தவரையில் பரவாயில்லை,—ஆனால் தமிழ் நாட்டை அத்துண்டாடல் பாழாக்கிவிடும் என்பதில் சந்தேகமேயில்லை. அதுமட்டுமல்ல. ஒரு அங்கத்தினர், பண்டித நேரு அவர்கள் அன்னியர் என்று சொன்னபோது எனது குருதி கொதித்தது. எத்தனையோ மைல்களுக்கு அப்பால் இருந்து வந்த வெள்ளையன் ஆண்ட காலத்தில் அப்பொழுது இருந்து வந்த கவர்னர்கள் வந்து பேசும்போது, அதே கட்சிப் பற்றுடையவர்கள் பேசாமல் உட்கார்ந்துகொண்டு அவர்களுக்கு ஆமாம் போட்டவர்கள், இன்று நமது இந்திய தேசத்தில் உள்ள ஒருவர் கவர்னராய் வந்திருக்கும்போது அவர்களை அன்னியர் என்று சொல்வது விந்தையிலும் விந்தையாகத்தான் இருக்கிறது. மற்றொரு அங்கத்தினர் சொன்னார், நாங்கள் நேருவிற்கு கருப்புக்கொடி காட்டினோம் என்கிறீர்களே, நீங்கள் சைமன்-க்கு கருப்புக் கொடி காட்டவில்லையா என்று கேட்கிறார். அதற்கு நான் சொல்ல நினைப்பது என்னவென்றால், பூனை தன் அன்பிற்குப் பாத்திரமான தன் குட்டியையும் கவ்வுகிறது, அதே சமயத்தில் எலியையும் கவ்வுகிறது. இரண்டையும் கவ்வுதல்தான் செய்கிறது. அங்ஙனம் இரண்டையும் கவ்வுவதால் இரண்டும் ஒன்றாகிவிடுமா? தன் குட்டியை அன்பின் காரணமாக கவ்வுகிறது, எலியை தின்ன கவ்வுகிறது. இதே போன்றுதான் இருக்கிறது, அங்கத்தினர் அவர்கள் சொல்வதும், நான் மேற்சொன்ன உதாரணத்தை புரிந்துகொள்ளும் சக்தியுடையவர்கள், நேருவிற்கு கருப்புக் கொடி காட்டுவதும், சைமனிற்கு கருப்புக்கொடி காட்டியதும் ஒன்றாகும் என்று சொல்லமாட்டார்கள். சைமன் நமக்கு ஒரு அன்னியர். ஆனால் நேருவோ நாம் ஏற்றுக்கொண்டிருக்கும் நமது ஒப்பற்ற தலைவராவார். ஆக, நம் நாட்டு மக்களை அவர்கள் கீழ்த்தரமான நிலைக்குக் கொண்டு போகப் பார்க்கிறார்கள். ஆகவே, இன்றைய உலகப் போக்கில் ஒன்றுபட்டிருக்க வேண்டும், ஒன்றுபட்டால்தான் வாழ முடியும் என்றுள்ள நிலைமை இருக்கும்போது, நமது சக்திகளை ஒன்றுபடுத்தி நாம் முன்னேற வழி காண்பதற்குப் பதிலாக நாட்டை துண்டாட வேண்டுமென்று சொல்லி நாட்டை கீழ் நிலைக்கு இழுத்துச் செல்ல யார் நினைத்தாலும் அது மிக மிக வருந்தத்தக்க ஒரு காரியமாகும். அடுத்தபடியாக சொன்னார்கள், எங்களது கருப்புக் கொடி போராட்டத்திற்கு எவ்வளவு ஆதரவு இருக்கிறது என்று பார்த்தீர்களா என்று கேட்கிறார்கள். ஆயிரக்கணக்கான மக்கள் கூடியிருந்தார்களே, அதைப் புரிந்து கொள்ளாமல் போலீஸ் அமைச்சர் அவர்கள் அப்படி அடித்து விட்டார்களே, அவருக்கு ஜனநாயகத் தத்துவம் என்னவென்றே தெரியவில்லையே என்றெல்லாம் கூறினார்கள். ஆம், ஆளவந்தார் கொலை வழக்கில் கூட ஹைக்கோர்ட்டில் ஆயிரக்கணக்கில் மக்கள் கூடியிருந்தார்கள். அப்படி கூடியதனால் அவர்கள் ஆளவந்தாருக்கு ஆதரவு காட்டி விட்டதாக கூறிவிடமுடியுமா? தாங்களும் அதில் கலந்துகொள்ளலாமென்று ஒரு சிலர் இப்படிக் கூடுவார்கள். நல்லதிற்கும் கெட்டதிற்கும் பலர் கூடுவார்கள் வேடிக்கை பார்க்க பலர், அல்லது கொலை வழக்கில் அவர்களுக்கு ஆசை இருந்தது என்று சொல்ல முடியுமா? அப்படி ஆயிரம் பேர்கள் கூடிவிட்டார்கள் என்றால் மக்களின் செல்வாக்கு எங்களுக்கு இருக்கிறது என்று கூறிவிட முடியுமா? ராஜ்யத்திற்குச் சொந்தமான பஸ்களை கொளுத்தினார்கள். பஸ்களை....

**SRI A. V. P. ASAITHAMBI** : பஸ்களை எரித்தது சம்பந்தமாக வழக்கு கோர்ட்டில் இருப்பதால், எரிந்ததாகச் சொல்வது தவறு.

[12th February 1958

MR. SPEAKER : நான் நேற்றே சொன்னேன். பஸ்கள் கொளுத்தப் பட்டது பற்றி பேசலாம் ; ஆனால் இவர்கள்தான் செய்தார்கள், என்று சொல்லக்கூடாது.

SRIMATHI T. N. ANANDANAYAKI : இவர்கள்தான் செய்தார்கள் என்று நான் சொல்லவில்லை. இவர்களாக எழுந்திருப்பதைப் பார்த்தால் இவர்கள்தான் செய்தார்களோ என்று சந்தேகம் வருகிறது. நடந்த நிகழ்ச்சிகளைப்பற்றி சொன்னேனே தவிர யார் செய்தார்கள் என்று நான் சொல்லவில்லை. நாட்டில் அராஜகச் செயல்களை செய்ய தூண்டிவிட்டு விட்டு, நம் மாகாண சொத்துக்களுக்கு உலை வைத்துவிட்டு இங்கு சபையில் வந்து சிக்கனத்தைக் கையாளுங்கள் என்று சொல்லும் வாதம் தொட்டிலையும் ஆட்டி விட்டு பிள்ளையையும் கிள்ளிவிடுவதுபோல் இருக்கிறது.

SRI C. N. ANNADURAI : ஸார், ஆன் எ பாயின்ட் ஆப் ஆர்டர். நாங்கள் எங்களுக்கு ஆதரவு இருக்கிறது என்று கருப்புக்கொடி காட்டிய தையும் பஸ்கள் கொளுத்தப்பட்டது பற்றியும் தொடர்போல் பேசுவதைப் பார்க்கும்போது பஸ்களை கொளுத்தியது நாங்கள் தான் என்பது போல் அவர்கள் பேசுவதாகத் தெரிகிறது. ஆகவே வழக்கிலே இருக்கின்ற விவ காரத்தைப்பற்றிப் பேச வேண்டாமென்று தங்கள் மூலம் தெரிவித்துக் கொள்கிறேன்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : போராட்டத்தின் விளை வாகத்தான் இது எற்பட்டது என்று தான் கூறினேனே தவிர நீங்கள் தான் என்று நான் சுட்டிக் காட்டவில்லை. மாகாணத்தில் சட்டத்தை அமல் நடத்துவதற்கு ஆட்சியாளர்களுக்கு எந்த அளவில் பொறுப்பு இருக் கின்றதோ அந்த அளவுக்கு எல்லாக் கட்சியிலுள்ள அங்கத்தினர்களுக்கும் பொறுப்பு இருக்கின்றது. இனிமேலாவது தமிழகத்தின் ஒற்றுமைக்காக எல்லா மக்களும் ஒன்று சேர்ந்து வேலை செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். மொழிப் பிரச்னையைப்பற்றி காரசாரமாக விவாதம் நடந்து வந்தது. இதில் நம்முடைய மாகாண அமைச்சர்கள் மிகச் சீறிய முறை யில் முடிவு எடுத்திருக்கிறார்கள் என்பதற்கு அவர்களுடைய செயல்களே சான்றாகும். அதாவது இதற்கு எல்லாக் கட்சித் தலைவர்களையும் இந்தப் பிரச்னையில் என்ன முடிவு கூறுகிறார்கள் என்று அழைத்துக் கேட்டார்கள். மத்திய அரசாங்கத்திற்கு நாட்டினுடைய மொழி என்ன, ஆட்சி மொழி என்ன என்பதைப்பற்றி ஒரு மனுவை கொடுக்கவேண்டியிருக்கிறது என் றும் அதற்கு எல்லாக் கட்சித் தலைவர்களையும் அழைத்து ஜனநாயக அடிப் படையில் ஒவ்வொருவர்களுடைய அபிப்பிராயங்களையும் கேட்டு ஒரு யாதாஸ் தைக் கொடுத்தார்கள். அதாவது 1965-க்கு பிறகும் ஆங்கிலம் இருப்பது நல்லது என்ற முடிவுக்கு வந்தார்கள். அதே கூட்டத்திற்கு தாங்களும் சென்றுவிட்டு, அங்கு கூறப்பட்ட கருத்துக்களையும் ஒத்துக்கொண்டுவிட்டு கையெழுத்தும் போட்டுவிட்டு வெளியே வந்து வேறு விதமாகச் சொல்கி றார்கள்......

SRI C. N. ANNADURAI : அதிலே கையெழுத்து போடப்பட்டது என்று சொல்வது தவறு என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : அந்தக் கூட்டத்திற்கு யார் யாரெல்லாம் வந்திருந்தார்கள் என்று தெரிந்து கொள்வதற்காகக் கையெழுத்து வாங்கியிருப்பார்கள் என்று நினைக்கிறேன்.

SRI C. N. ANNADURAI : அவ்விதமும் கையெழுத்து வாங்க வில்லை என்பதை அம்மையார் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்கி றேன்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : உங்கள் பேரில் உள்ள நாணயத்தின் பேரில் அவ்விதமிருந்திருக்கிறார்கள்..........

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, பாயின்ட் ஆப் ஆர்டர், அங்கத்தினர்களின் நாணயத்தைப்பற்றி சபையிலுள்ள இன்னொரு அங்கத்தினர் குறிப்பிட்டு பேசுவது முறையாகுமா ? ஒரு அங்கத்தின ருடைய நாணயம் . . .

12th February 1958]

Mr. SPEAKER : அங்கத்தினர்களுக்கு நாணயம் இல்லை என்று சொல்லவில்லையே ! இருக்கிறது என்று தானே அவர்கள் குறிப்பிட்டார்கள் !

SRI K. ANBAZHAGAN : அங்கத்தினர்களின் நாணயத்தின் பேரில் நம்பிக்கை இருந்தது என்ற அடிப்படையில் குறிப்பிடுவது . . .

MR. SPEAKER : At this stage—I shall say it in English let not hon. Members read between the li es of the speeches. Let them just listen and not put a bad meaning to every word that is uttered. I would also tell hon. Members making speeches that they need not use words with double meaning. Let them put their speeches in plain words; I say this to Members on both sides of the House. Otherwise, instead of contributing to unity and co-operation, the speeches will lead only to differences. Let the hon. Member use words with one meaning and let the Opposition also understand it only in one meaning.

SRIMATHI T. N. ANANDANAYAKI : கனம் சபாநாயகர் அவர்களே, நீங்கள் கூறுகின்ற ரூலிங்களுக்கு உட்பட்டு நான் நடக்கத் தயாராய் இருக்கிறேன். இதை எல்லோரும் மனதில் வைத்து பார்க்கவேண்டுமென்றும் கேட்டுக்கொள்கிறேன். அது மட்டுமல்ல ; அடிக்கடி பாயிண்ட் ஆப் ஆர்டர்களை எழுப்பாமல் இருந்தால் என்னுடைய பேச்சை சீக்கிரமாக முடித்து விடலாம் என்று எண்ணுகிறேன். மொழி விஷயத்தில் நம்முடைய மாகாண அமைச்சர்கள் ஒன்றுகூடி முடிவுக்கு வந்திருக்கிறார்கள். மேலும் நம்முடைய மாகாணத்தினுடைய நன்மைக்கு எந்தவித குறைவும் வராமல் நம் அமைச்சர் அவர்கள் மத்தியத்தோடு போராடி சிறந்த தீர்மானத்தையும் ஏற்படுத்தியிருக்கிறார்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது. மேலும் கவர்னர் பெருமான் அவர்களுடைய உரையில் நிலச்சீர்திருத்தத்தைப்பற்றி கூறியிருக்கிறார்கள். நிலச்சீர்திருத்தத்தை எடுத்துக்கொண்டால் இன்றைக்கு பலவிதமாக இருக்கிறது. மாகாணத்திற்கு மாகாணம், ஊருக்கு ஊர், மண்ணுக்கு மண் வேறு வேறாக இருக்கிறது. ஆகவே நிலச்சீர்திருத்தத்தை அவசரத்தோடும் ஆத்திரத்தோடும் கொண்டு வந்தால் அது நல்ல முறையில் அமையாது என்றுதான் சொல்லவேண்டியிருக்கிறது. நாம் நல்ல எண்ணத்தோடுதான் 60, 40 என்ற சட்டத்தை கொண்டு வந்தோம். இன்று சிறிய மிராசுதார்கள், அதாவது இரண்டு ஏக்கர், மூன்று ஏக்கர் வைத்துக்கொண்டிருக்கிற மிராசுதார்கள் இதனால் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். சட்டங்கள் என்று போட்டால் அதில் பல சங்கடங்களும் ஏற்படுவதை நாம் பார்க்கிறோம். இவ்விதமான அதிக சங்கடங்கள் வராத நிலைமையில் சட்டங்களைக் கொண்டுவருவது நல்லது என்று எண்ணுகிறேன். இதற்கு முன்னோடியாக கவர்னர் பெருமான் உரையில் நிலம் படைத்தவர்கள் மேலும் நிலங்கள் வாங்கக்கூடாது என்று சட்டம் கொண்டுவரப்படும் என்று குறிப்பிட்டிருப்பது மிகவும் பாராட்டத்தக்கது. இதில் வேறு ஒரு காரியமும் சேர்த்துக் கொள்ளவேண்டும். அதாவது இப்போது பலர் புது வழியில் சம்பாதித்துக்கொண்டு வருகிறார்கள். அதாவது அதிகமாக குத்தகைக்கு எடுத்துக்கொண்டு சுலபமாக சம்பாதித்து வருகிறார்கள். பெரிய பண்ணைகளின் நிலங்களை குறிப்பாக ஆண்டவனின் பெயரில் இருக்கின்ற நிலங்களை, அதிலும் ஆண்டவன் பெயரில் நம்பிக்கை இல்லாதவர்கள் ஆண்டவன் பெயரில் இருக்கின்ற நிலங்களை குத்தகைக்கு எடுத்து சம்பாதித்து வருகிறார்கள். ஆதலால் இதன் பேரில் அரசாங்கம் ஒரு உத்தரவு போடவேண்டும். அதாவது இவ்வளவு நிலங்கள்தான் குத்தகைக்கு வைத்துக்கொள்ளலாம் என்று, அதாவது 10 ஏக்கர் அல்லது 20 ஏக்கர் மாத்திரம்தான் வைத்துக்கொள்ளலாம் என்று ஒரு சட்டம் கொண்டு வந்தால்தான் நல்ல முறையில் இது அமையும் என்று சொல்லிக்கொள்கிறேன். இவ்விதமிருந்தால்தான் நாட்டில் ஒரு சோஷியலிஸ சமுதாயத்தை உருவாக்கமுடியும் என்று எண்ணுகிறேன். இது போன்ற நிலச்சீர்திருத்தச் சட்டங்களைக் கொண்டு வரவேண்டும், அதற்காக எல்லோரும் பாடுபடவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதற்கு பின்னர் கவர்னர் பெருமான் உரையில் மதுவிலக்கு சட்டம், ஸேல்ஸ் டாக்ஸ்

சட்டம், ஹிந்து மத பரிபாலன சட்டம் போன்ற சட்டங்களை திருத்தப்போவ தாகவும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இன்றைக்கு மதுவிலக்கை எடுத்துக் கொண்டால் இன்னும் தீவிரமாக ஆக்கினுல்தான் அதைச் சரியாக அமல் நடத்த முடியும் என்பதை எல்லோரும் ஒத்துக்கொள்வார்கள். மேலும் இந்தச் சட்டத்தின் கீழ் அதிக அதிகாரங்களை போலீஸ் அதிகாரிகளுக்கு கொடுக்கக் கூடாது என்றும் கேட்டுக்கொள்கிறேன். அதிகாரங்களை நீதி மன்றத்திற்குக் கொடுப்பார்களானுல், இந்த வழக்குகளில் குற்றம் சாட்டப் படுபவர்களுக்கு அதிக (பைன்) அபராதம் போட்டு இதை அமல் செய்ய முடியும். போலீஸ் அதிகாரிகளிடம் கொடுத்தால் சில சமயங்களில் இவை கள் மக்களை மிகப் பெரிய அளவில் பாதிக்கின்ற அளவில் வந்துவிடுகிறது. இந்தவிதமான பல சம்பவங்கள் நடந்திருக்கின்றன. அவைகளை நான் கனம் அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்கும் கொண்டு வந்திருக் கின்றேன். உண்மையிலே குற்றம் செய்யாதவர்களைப்பார்த்து குற்றம் சாட் டக்கூடிய நிலைமை ஏற்படுகிறது. இந்தக் கஷ்டங்களை நீக்கவேண்டுமென்ருல் கூடுதல் அதிகாரங்களை நீதிமன்றத்திற்குக் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அப்படிக் கொடுப்பதானுல் அது மிகவும் வரவேற்கத் தக்கதாய் இருக்கும் என்று நான் நம்புகிறேன். அடுத்ததாக பீடித் தொழிலாளர்களுக்கு என்று ஒரு சட்டம் வரப்போவதாகக் குறிப்பிடப் பட்டிருப்பது மிகவும் போற்றத்தக்க விஷயமாகும். இந்த பீடித்தொழி லாளர் இதுவரையிலும் யாதொருவிதமான சலுகையும் கிடைக்காமல் திணறிக்கொண்டிருந்தார்கள். அம்மாதிரி இருந்துகொண்டிருக்கிற அவர் களுக்கு ஒரு சட்டம் வருவது மிகவும் மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும். (இச்சமயத்தில் டாக்டர் ஸ்ரீமதி சத்தியவாணிமுத்து அவர்கள் தலைமை வகித்தார்.) மேலும் ஸினிமோட்டாகிராப் தொழிலாளர்களுக்கும் ஒரு சட்டம் கொண்டு வருவதாயிருந்தால் மிகவும் வரவேற்கத்தக்கதாயிருக்கும் என்பதையும் தெரிவித்துக்கொண்டு, கவர்னர் பெருமான் அவர்களது உரையில் குறிப்பிட்டிருக்கின்ற காரியங்களை நிறைவேற்றுவதற்காக நாம் எல் லோரும் ஒன்றுபட்டு ஆவன செய்வோமானுல் வேண்டிய நன்மை கிடைக் கும் என்று கூறி என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

* Sri M. K. SOMASUNDARAM : தலைவர் அவர்களே, மேன்மை
1-08 a.m. தங்கிய கவர்னர் பெருமான் அவர்களுடைய உரையை ஆதரித்துச் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இன்று நாட்டில் விவசாய மக்க ளில் அதிகம் ஹரிஜனங்களாக இருக்கிருர்கள். விவசாயத்தில் ஹரிஜனங் களுக்குத்தான் அதிக அக்கறை இருந்து கொண்டிருக்கிறது. அரசாங்கமும் விவசாயத்திற்கு வேண்டி பல திட்டங்களைத் தீட்டி வேலை செய்து வருகிருர் கள். ஆனுல் விவசாயத்திற்கு சில தடைகள் இருக்கின்றன. அதை அரசாங்கம் பலவாறு நிவர்த்திக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். குறிப்பாக பல மடத்து சொத்துக்கள் ஹரிஜனங்களிடத்தில் இருக்கின்றன. இவர்கள் அதைச் சொந்த நிலமாகக் கருதி விவசாயம் செய்ய முடியாமல் பல தடைகள் இருக்கின்றன. பல நிலங்கள் இன்னும் ஜாரி செய்யப்படா மல் இருந்துகொண்டிருக்கின்றன. அதை அரசாங்கம் உடனடியாக ஜாரி செய்வதற்கு முன் வரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்த படியாக விவசாயிகளுக்கு நிலங்களை அபிவிருத்தி செய்வதற்காக மாடு வாங்கிக் கொடுக்கப்படுகிறது. இது நல்லதொரு திட்டம்தான். ஆனுல் இதற்கென்று இருக்கின்ற உத்தியோகஸ்தர்கள் இதற்கென்று ஒதுக்கப்படும் பணங்களை சரியான முறையில் விநியோகிக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அடுத்தபடியாக வீடு கட்டிக்கொடுக்கும் திட்டம் ஆரம்பமாகி இருக்கிறது. சில இடங்களில் மடத்து இடங்களில் இவர்களுக்கு வீடு கட்டுவதற்கு ஒதுக்கப்படுகிறது. ஆனுல் இவைகள் சரியான முறையில் கொடுக்கப்படுவதில்லை. இதை உடனடியாகக் கொடுப்பதற்கு உத்தியோகஸ் தர்களுக்கு அரசாங்கம் உத்தரவு போடவேண்டுமென்று கேட்டுக்கொள் கிறேன்.

அடுத்தபடியாக, ஹரிஜனங்கள் பற்றியும் முதுகுளத்தூர் நிலைமை பற்றியும் சில அங்கத்தினர்கள் பேசினுர்கள். அதை நானும் வரவேற் கிறேன். அதையும் பற்றி நானும் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். 1948-ம் வருஷம் முதுகுளத்தூரில் வேலை பார்த்து வந்த சமயத்தில் அங்கு ஹரிஜனங்கள் எவ்வாறு நடத்தப்பட்டார்கள், என்ன துன்பத்தை

12th February 1958] [Sri M. K. Somasundaram]

யெல்லாம் அனுபவித்தார்கள் என்று சொல்ல ஆசைப்படுகிறேன். ஹரி ஜனங்கள் எவ்வாறு வாழ்ந்தார்கள். அப்போது இருந்த நிலையில் அவர்கள் கிணற்றில் தண்ணீர் எடுக்க முடியாது. ஜாதி ஹிந்துக்களால் பல கொடுமைகள் செய்யப்பட்டார்கள். இதை யாரும் மறுக்க முடியாது. ஹரிஜனங்கள் எவ்வாறு நடத்தப்பட்டார்கள் என்றால், நாயினும் கேடாக நடத்தப்பட்டார்கள். அவர்கள் நல்லதொரு கல்வி கற்று முன்னேறுவதாக இருந்தால், அதற்கு அந்த ஜாதி ஹிந்துக்கள் எப்படி எப்படியோ முன்னேற விடாமல் தடுத்து வந்தார்கள். அவர்களுக்குப் பல கஷ்டங்களைக் கொடுத்து சமீபத்திலே இம்மாதிரிக் குழப்பங்களில் ஈடுபடுத்தினார்கள். ஆகவே, முதுகுளத்தூரிலே நான் வேலை பார்க்கும் போது போனபோது, ஒரு ஹரிஜன் எப்படி உடுப்புப் போட்டுக்கொண்டு மக்களிடையே வேலை செய்யலாம் என்று மறைக்கப்பட்டவர்களுள் நானும் ஒருவன். தகப்பன், பிள்ளை போல் இருக்கவேண்டுமென்று சொல்கிறார்கள். தகப்பன் பிள்ளை என்றால் எவ்வாறு இருக்கவேண்டும். மேடைகளில் பிரசங்கம் செய்யும் போது தகப்பன் பிள்ளை போல் இருக்கவேண்டுமென்று சொல்கிறார்கள். தகப்பன் பிள்ளை என்றால் எப்படி இருப்பார்களோ அந்த முறையில் இருக்க வேண்டும். ஹரிஜனங்கள் புருஷனை இழக்கவில்லையா ? இன்று எடுத்துக் கொண்டால் இமானுவேல் மனைவி புருஷனை இழந்து வெள்ளை உடை உடுக்கவில்லையா என்று கேட்கிறேன். புருஷனை இழந்தவர்களை அரசாங்கம் காப்பாற்றுகிறது. அரசாங்கம் பாதுகாப்புக் கொடுக்கிறது. ஏன் புருஷனை இழந்த ஹரிஜனங்களை மட்டும் காப்பாற்றக் கூடாது. ஹரிஜனங்களுடைய வீடுகள் தீயிடப்பட்டிருக்கின்றன. இதை நாட்டு மக்கள் பார்த்திருக்கிறார்கள். இது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். ஹரிஜனங்கள் எவ்வாறு நசுக்கப்படுகிறார்கள். கிணற்றில் தண்ணீர் எடுக்கக்கூடாது. தெருவில் நடக்கக் கூடாது. குடை பிடிக்கக் கூடாது. இதை நீங்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். தனிப்பட்ட ஜாதியைப் பற்றிக் குறிப்பிடுவது சரியல்ல. நாடு முன்னேற எவ்வாறு நடந்து கொள்ளவேண்டும். ரஷ்யா சந்திரனை விடும் போது நாம் ஜாதிப் பிரிவினை பற்றிப் பேசுவது சரியாகுமா ? நான் அங்கத்தினர்கள் எல்லோரையும் கேட்கிறேன். கிராமங்களில் வேலை செய்யும் போது ஒற்றுமையாக இருந்து எல்லாக் கட்சிகளும் சேர்ந்து கட்சி மாறுபாடுகளை விடுத்து நல்ல காரியங்களைச் செய்ய முன்வரவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

பெண்கள் கற்பழிக்கப்படுகிறார்கள் என்பது வருந்தத்தக்கது. இம்மாதிரி ஹரிஜனப் பெண்களைக் கற்பழிக்க முற்பட்டால், ஜாதி ஒழிய வேண்டும் என்று பேசி என்ன பயன் என்று கேட்கிறேன். இந்த ஹரிஜனப்பெண்கள் மானத்தோடு வாழக் கூடாதா? அவர்களுக்கு மானம் இல்லையா? அதைக் காட்டிலும் உயிரை இழந்துவிடலாம். ஆகையால் அவர்களை நல்ல முறையில் நடத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். தனியாக ஒரு பெண் வழியே போனால், முறைப்பது, சிரிப்பதாக இருக்கிறது. கேவலமாக நடத்தப்படுகிறார்கள். முதுகுளத்தூர் சம்பவத்தின்போது பல வீடுகள் தீயிடப்பட்டிருக்கின்றன. எல்லா ஜாதி மக்களுக்கும் பாதுகாப்பு இருக்கவேண்டும். இவ்வாறு ஜாதிகள் பற்றிக் குறிப்பிடுவது நல்லதல்ல. ஆகையால் இங்கு இருக்கும் அங்கத்தினர்கள் எல்லோரும் ஜாதிப் பிரிவினையைத் தள்ளி விட்டு எல்லோரும் ஒரே ஜாதி என்று வாழ வழி செய்ய வேண்டுமென்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

முதுகுளத்தூரிலே நான் வேலை பார்த்த சமயத்திலே உடுப்புப் போட்ட காரணத்திற்காக வழி மறைக்கப்பட்டு வேலையை இழக்க நேரிட்ட சமயத்திலே என்னுடன் படித்த ஒருவரால் தப்பிக்க நேரிட்டது. அந்த முதுகுளத்தூரிலே ஜாதிப் பிரிவினை கிடையாது என்று சில அங்கத்தினர்கள் பேசினார்கள். அங்கு ஜாதிப் பிரிவினை அதிகம் என்பதை யாரும் மறுக்க முடியாது.

பண்டிகை காலங்களில் ஹரிஜன மக்கள் ஜாதி ஹிந்துக்களின் வீடுகளுக்குச் செய்யவேண்டிய காணிக்கையைச் செய்யவில்லையென்றால் பல துன்பங்கள் நேரிடுகிறது. இதையெல்லாம் அவர்கள் உணர்ந்து பார்த்தால் இம்மாதிரி சம்பவங்கள் நடந்திருக்காது. ஆகையால் மற்ற ஜாதி ஹிந்துக்கள் அங்கத்தினர்களும் மற்றவர்களும் நாட்டுக்கு நல்லதொரு சேவை

[Sri M. K. Somasundaram] [12th February 1958

செய்வதற்காக ஒற்றுமையுடன் இருந்து சென்னை அரசாங்கம் தீட்டுகிற திட்டங்களை நல்ல முறையிலே நடத்திக் கொடுப்பதற்கு முன் வரவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

பல கட்சிகள் அந்தந்த சமயங்களில் ஏற்படுகின்றன. ஒரு தெரு வழியாக பொம்மை வியாபாரி பல வர்ண பொம்மைகள் விற்கும்போது, 10 மாதம் சுமந்து பெற்ற தன் குழந்தை மடியில் இருக்கும் போது, கீழே இறங்கி பொம்மையைப் பார்க்கப் போகின்றது. சிறிது நேரம் பார்த்து விட்டு தாயிடம் திரும்பி வருகிறது. எலெக்ஷன் வரும்போது அந்தந்த சமயங்களில் ஹரிஜன மக்களை அந்தந்தக் கட்சியில் சேர்த்துக்கொள்கிறார்கள். ஏனென்றால் மற்றவர்கள் இதற்கு வசப்படமாட்டார்கள் என்ற காரணத்தால் அவர்களைப் போய் வாழ்த்திச் சென்று கட்சியில் சேர்த்துக் கொண்டு, தங்கள் கைப் பொம்மையாக வைத்துக்கொண்டு விட்டு, கைக் கருவிகளாக வைத்துக் கொண்டு கட்சிப் பிரசாரம் செய்கிறார்கள். ஆனால் கட்சிப் பிரசாரம் முடிந்த பிறகு கடைசியில், அவர்கள் தலைவர்களானவுடன் இவர்களைப் பற்றிக் கவலைப்படுவதேயில்லை. அவர்களுக்குக் கைக் கூலிகளாக இருந்ததுதான் மிச்சம். ஆகையால் ஹரிஜனங்களைக் கேட்டுக் கொள்கிறேன், எந்த விதமான கட்சியில் வேண்டுமானாலும் சேரும் பொழுது, நல்லதொரு கட்சி எது என்று தெரிந்து, எது அவர்கள் நலனுக்குப் பாடுபடும் என்று தெரிந்து, பிறகு ஆராய்ந்து அந்தக் கட்சியில் சேர்ந்து நாட்டுக்காகப் பாடுபடவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

கம்யூனிஸ்ட் கட்சியில் தூத்துக்குடியில் பொன்னு குடும்பர் என்பவர் நோய்வாய்ப்பட்டு சாகும் தருவாயில் இருக்கிறார். அவர்களை இப்போது கவனிப்பார் இல்லை. இப்படி ஹரிஜனங்கள் பல இன்னல்களுக்கு ஆளாகின்றார்கள். ஆகவே, கவர்னர் உரையிலே ஹரிஜனங்களைப் பற்றி குறிப்பிடாவிட்டாலும், ஹரிஜனங்களுடைய நிலையை அறிந்து அரசாங்கம் ஆவன செய்து கொண்டிருக்கின்றது என்று மகிழ்ச்சியுடன் தெரிந்து, எனக்குப் பேச இடம் கொடுத்த தலைவர் அவர்களுக்கு நன்றி தெரிவித்து முடித்துக் கொள்கிறேன்.

11-20 a.m. **Sri S. PAKKIRISAMI PILLAI** : கனம் தலைவர் அவர்களே கவர்னர் பெருமான் ஆற்றிய சொற்பொழிவிலே பல கருத்துகள் அடங்கியிருக்கின்றன. கட்டுப்பாடான ஒற்றுமை நம் நாட்டிற்கு அவசியம், அரசாங்க அலுவலகங்களில் மொழி மாற்றம், படாஸ்கர் அறிக்கை, கிராமப் புறங்களிலே மின்சார வசதி விஸ்தரிப்பு இவைகளையெல்லாம் எடுத்துக் குறிப்பிட்டுச் சொன்னார்கள். ஆனால் சென்னை நகரம் நம் ராஜ்யத்தின் தலைநகராக சிறந்து விளங்குகிறது. இந்த நகரத்தில் இருக்கும்படியான மக்கள் எந்த நிலைமையிலே இருக்கிறார்கள், அவர்களுடைய வாழ்வு எத்தகைய சீர்கேடான நிலையிலே இப்பொழுது இருந்துகொண்டு வருகிறது என்பது பற்றி ஒரு வார்த்தையும் காணோம். முக்கியமாக சென்னை நகரத்தில் இருக்கக்கூடியவர்கள் வீட்டு வசதி போதுமான அளவுக்கு இல்லாமல் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். நமக்குத் தெரியும், மத்தியதர வகுப்பினர் கடன் பளுவின் விளைவாக வெவ்வேறு வரிகளைக் கொடுக்க முடியாமல் கஷ்டப்படுகிறார்கள். அதனால் அவர்களுடைய கடன் பளு அதிகமாக ஆக்கப்பட்டு அவர்களுடைய வீடுகளை விற்கும்படியான நிலையில் இருக்கிறார்கள். கீழ்த்தர வர்க்கத்தினர், தொழிலாளிகள் உயர்ந்த வாடகையைக் கொடுக்க முடியாமல், தாழ்ந்த இடங்களில் குடிசைப் பிரதேசங்களில் போய் குடியிருக்கும்படியான நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அந்த இடங்களுக்கும் அவர்கள் அதிக வாடகை கொடுக்கும்படியான நிலையிலே இல்லை. குடிசை வீடுகள் கூட சிறிது சிறிதாக்கப்பட்டு, அறைகளை அதிகமாக ஆக்கி வாடகைக்கு கொடுக்கப்பட்டிருக்கின்றன. இதன் விளைவாக நெருக்கடி நிறைந்து இருக்கிறது. முக்கியமாக தொழிலாளர்கள் வாழும் பகுதிகளில் உள்ள நெருக்கடியைப் பற்றி சொல்லுவதற்குக் கூட முடியவில்லை. அவ்வளவு கஷ்டத்தை அவர்கள் அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள். அதே சமயத்தில் அங்கே சுகாதார வசதிகள் கிடையாது. சுகாதார வசதி இல்லாததால், மூட்டைப் பூச்சி, கொசு உபத்திரவம் அதிகம். மூட்டைப் பூச்சியை ஒழிப்பதற்கு இதுவரையில் யாரும் மருந்து கண்டுபிடித்து, அதை வசதியான வகையிலே மக்கள் உபயோகப்படுத்துவதற்கு அரசாங்கத்தார்

12th February 1958] [Sri S. Pakkirisami Pillai]

ஒரு முயற்சியும் எடுத்துக்கொள்ளவில்லை. மூட்டை பூச்சியால் நகர மக்கள் ரொம்பவும் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். முக்கியமாக வாடகைக்கு இருக்கும்படியான இடத்திலே மக்கள் மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டிருக் கிறார்கள். கும்பகோணம் தான் கொசு உற்பத்திக்கு பெயர்போனது என்று சொன்னால், அதைவிட இப்பொழுது இந்த இடங்களிலே கொசு அதிகமாக இருந்து கொண்டிருக்கிறது. இதை நிவர்த்திக்க சென்னை கார்பரேஷன் அதிகாரிகள் எடுத்துக்கொண்டுள்ள முயற்சி மிகவும் சொற்பம் தான். அவர்கள் எடுத்துக்கொண்டிருக்கும் முயற்சி போதுமான அளவுக்கு இல்லை என்பதை நாம் ஒப்புக்கொள்ளவேண்டும். இம்மாதிரியான நிலை யிலே அரசாங்கம் இவர்களுக்கு வீடு வசதி செய்துகொடுப்பதற்கு என்ன முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறார்கள்? இதர ராஜ்யங்களிலே மத்திய அரசாங்கம் கொடுக்கும்படியான சலுகைகளை உடனுக்குடன் பெற்று விஸ் தாரமான முறைகளில் வீடுகள் கட்டிக்கொண்டு வருவதை பார்க்கிறோம். வெவ்வேறு ராஜ்யங்களிலே அநேக வீடுகள் கட்டிக்கொடுத்திருக்கிறார்கள். அந்த ராஜ்யங்களிலெல்லாம் இம்மாதிரியான திட்டங்களை மேற்கொண்டு செய்திருக்கும்பொழுது, சென்னை அரசாங்கம் ஒரு ஏற்பாடான திட்டத்தை மத்திய அரசாங்கத்திற்கு சமர்ப்பித்து அந்தச் சலுகைகள் அத்தனையும் பெற்றிருக்கிறார்களா என்பது சந்தேகமாகத்தான் இருக்கிறது. ஆனால் தொழிலாளர்களுக்கு வீடுகள் கட்டுவதற்கு "இண்டஸ்டிரியல் ஹவுஸிங் ஸ்கீம்" பிரகாரம் சர்மா நகர், திரு.வி.க. நகர் போன்ற இடங்களில் வீடு கள் கட்டிக் கொடுத்திருக்கிறார்கள். அப்படி 900 வீடுகள் அந்த இடங்களில் கட்டியிருக்கிறார்கள். இருந்தும், தொழிலாளர்கள் அங்கு குடி புகுவதற்கு இடம் அளிக்கவில்லை. அதிகாரியின் அனுமதி கிடைக்காத நிலையில் அத்தனை பேர்களும் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். குறிப் பிட்ட அதிகாரி அம்மாதிரி தடை செய்வதற்கு காரணங்கள் சில இருக்க லாம். தண்ணீர் வசதி இல்லை, விளக்கு வசதி இல்லை என்று சொல்ல லாம். அம்மாதிரி வசதிகளை சீக்கிரமாக செய்து கொடுக்கவேண்டும். அதனால் தொழிலாளர்களும் மற்றவர்களும் வீடுகள் கிடைக்காமல் கஷ்டப்பட வேண்டிய நிலைமை ஏற்படுகிறது.

இந்த "ஹவுஸிங் ஸ்கீம்" போக மற்றபடி வீடுகள் கட்டும் பொறுப்பை சென்னை கார்பரேஷன் பொறுத்த வரையில், நகர அபிவிருத்தி டிரஸ்டுக்கு விட்டிருக்கிறார்கள். நகர அபிவிருத்தி டிரஸ்டு சாதாரணமாக 500 ரூபாய் பொறும்படியான நிலங்களை ரூ. 1,500, 2,000-க்கு அதிக விலையிலே வாங்கி வீடுகள் கட்டுவதால், அந்த விலையின் பளுவை பணக்காரர்கள் தான் தாங்க முடிகிறது. பணக்காரர்களுக்குத்தான் இப்பொழுது நகர அபி விருத்தி டிரஸ்டு வீடுகள் கட்டிக் கொடுக்கிறார்களே தவிர, சாதாரண ஏழை மத்திய தர வகுப்பினர் அந்த வீடுகளை மாத தவணையில் கொடுத்து வாங்க முடியாத நிலையிலே தான் இருக்கிறது என்பதை நான் இங்கே சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அதே மாதிரி தான் கார்பரேஷனில் நேற்றைய தினம் நகரசுத்தி தொழிலாளர்களுக்கு வீடுகள் கட்டி கொடுப்ப தற்கு திட்டம் போட்டிருக்கிறார்கள். இத்தனை நாட்களாய் அம்மாதிரி திட்ட டம் போடவேண்டும் என்று நினைத்துக்கொண்டிருந்தார்கள். நேற்று தான் அந்தத் திட்டம் கார்பரேஷன் கவுன்சிலில் சமர்ப்பிக்கப்பட்டு அங்கீ கரிக்கப்பட்டது. ஆனால் அதை அமுலுக்குக் கொண்டுவருவதற்கு இன்னும் எத்தனை வருஷங்கள் பிடிக்குமோ? எல்லாவற்றிற்கும் மேலாக மக்க ளுடைய கஷ்டங்களை உடனுக்குடன் கவனித்து அவைகளை நிவர்த்தி செய் யும்படியான நிலையிலே அரசாங்கம் மாத்திரமல்ல, மற்ற ஸ்தல ஸ்தாபன அதிகாரிகளும் நடந்துகொள்ளவில்லை என்பதை இந்த சந்தர்ப்பத்திலே எடுத்துச் சொல்ல ஆசைப்படுகிறேன். ஆகவே, இம்மாதிரியான நிலையிலே கஷ்டங்கள் ஒரு பக்கம் இருந்தாலும் தொழிலாளர்களுடைய நலனுக்கு அரசாங்கம் என்ன செய்கிறார்கள்? எத்தனையோ செய்யவேண்டியிருக் கிறது. எத்தனையோ சட்டங்கள் ஏற்படுத்த வேண்டியிருக்கிறது. அவை களைப்பற்றி ஒன்றுமே காணோம். விவசாயிகள் அல்லது கிராமங்கள் என்ற எண்ணத்தையே மனதில் புகுத்தி மனதை மாற்றி இதையெல்லாம் ஒரு பக்கமாக புறக்கணித்தால் அது நன்மை ஆகாது. எல்லா பக்கங்களிலும் எல்லோருக்கும் நல்ல வசதிகள் செய்துகொடுக்கும்படியான நிலையிலே அரசாங்கத்தார் இயங்கவேண்டும்.

[Sri S. Pakkirisami Pillai] [12th February 1958

நமக்குத் தெரியும் குடிசைவாழ் மக்கள் எவ்வளவு கஷ்டப்பட்டுக்கொண்டிருப்பார்கள் என்பது. சென்ற 6 மாதங்களுக்கு முன்னாலேயே நமது முதல் அமைச்சர் சேரிகளை சீர்திருத்தம் செய்யவேண்டுமென்று அந்தந்த இடங்களை போய் பார்த்து அங்கீகாரம் செய்திருக்கிறார்கள். ஆனால் இது வரையில் இன்னும் வேலை துவக்கப்படவில்லை. வருஷக் கடைசி ஆகிவிட்டது. இந்த வருஷம் அது நடக்குமோ அல்லது இன்னொரு வருஷம் ஆகுமோ என்பது நமக்கு சந்தேகமாக இருக்கிறது. மிகவும் பிற்போக்கான நிலையிலே இம்மாதிரி தாமதம் ஏற்படுவதை நான் கண்டிக்கிறேன். இது தான் என்னுடைய குற்றச்சாட்டு.

சாதாரணமாக தொழிலாளர்கள் கடன் பளு அதிகமாக இருக்கிறது. அநேகர் கடன் கொடுப்பதற்கு தயாராக இருக்கிறார்கள். ஆனால் தொழிலாளிகள் அந்தக் கடன்களை திருப்பிக் கொடுக்க முடியவில்லை. கடன் அதிகமாகப் போக போக அவர்கள் அதை திருப்பிக் கொடுக்க முடியாத நிலையிலே அவர்கள் ஜெயிலுக்குப் போகவேண்டியிருக்கிறது. ஜெயிலுக்கும்போகும் விளைவாக அவர்கள் வேலையிலிருந்து நீக்கப்படும் நிலைமையும் ஏற்படுகிறது. தொழிலாளர்களுக்கு கடன் பளுவை நிவர்த்திப்பதற்கு அரசாங்கத்தார் உடனடியாக ஒரு திட்டத்தை செய்து கொடுக்க வேண்டுமென்று இந்த சந்தர்ப்பத்திலே கேட்டுக்கொள்ளுகிறேன்.

இப்பொழுது தொழிற்சாலைகளிலே நகரத்தைப் பொருத்த வரையில் மின்சார வசதி கட்டுப்பாடு (ஸ்டாகரிங்) இருக்கிறது. "ஸ்டாகரிங்" விளைவாக அசாதாரணமான காலங்களில் தொழிலாளிகள் வேலை செய்யவேண்டுமென்று நிர்ப்பந்தப்படுத்தப்படுகிறார்கள். அந்த "ஸ்டாகரிங் பீரியட்" எப்பொழுது எடுத்து விடுவார்கள்? இன்னும் ரிபேர் செய்யவேண்டும், எப்ரல் மாதம் வரை ஆகும் என்று கனம் மின்சார அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். அது உண்மையிலேயே எப்ரல் மாதம் வரையிலும் ஆகுமா அல்லது அதற்கு முன்னால் முடியுமா என்பதை நாம் சொல்வதற்கு இல்லை. இதை எல்லாம் அரசாங்கம் உடனடியாகக் கவனித்து வேலை செய்யவேண்டும் என்பது என்னுடைய கருத்து. இது தவிர, சாதாரணமாக, தொழிலாளர்கள், தொழிலாளர்கள் இயக்கத்தில் ஈடுபட்டிருக்கிறவர்கள் ஜாதி மத வித்தியாசமின்றி எல்லோரும் ஒரு இனம், நாம் அத்தனைபேரும் இந்தியர்கள் என்று சொல்லும்படியான வகையில் நடந்து கொண்டிருக்கிறார்கள். ஆனால் அரசாங்கத்தார் கடைப்பிடித்து வரும் கொள்கையானது இந்த ஜாதி மனப்பான்மையை வளர்த்துவதாயிருக்கிறது. ஆதித் திராவிடன், ஜாதித் திராவிடன், வீருகட்டி வெள்ளாளன், கோயில் வெள்ளாளன், என்று பல பாகுபாடுகளை உண்டாக்கிக் கல்விச் சலுகையை அரசாங்கத்தார் அளித்து வருகிறார்கள். இது ஜாதியை ஒழிப்பதற்குப் பதிலாக வளர்ப்பதாகவே இருக்கிறது. இப்பொழுது, ஆதித்திராவிட ஜாதி, பிற்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர் என்று சொல்லிக்கொண்டு, பாரங்களைப் பூர்த்தி செய்து ஸெர்ட்டிபிகேட் வாங்கும் நிலையில் நாம் இருக்கிறோம். ஒரு பக்கம் ஜாதி வித்தியாசம் வேண்டாம் என்று சொல்லிக்கொண்டு, அதேசமயத்தில் ஜாதி, மத வித்தியாசத்தை மக்கள் மனதில் பதியும்படியாகச் செய்கிறார்கள். இந்த மனப்பான்மை எப்பொழுது மாறுமோ தெரியாது. சொல்வது ஒன்று, செயல்படுவது வெறொன்றாக இருக்கிறது. நம் நாட்டில் ஒற்றுமை வேண்டுமென்று சொன்னால், இந்தமாதிரியான கல்விச் சலுகை இருக்கக் கூடாது. மதத்தின் பெயரால் சலுகைகள் காட்டக்கூடாது. எல்லா ஏழைகளுக்கும் ஒரேமாதிரியான சலுகை இருக்கவேண்டும். எல்லா ஏழைகளுக்கும் இலவசக் கல்வி அளிக்கப்படும் என்ற திட்டத்தை ஏன் இன்னும் அரசாங்கத்தார் கொண்டுவர வில்லை? அரசாங்கத்தாரின் இவ்வித மனப்பான்மையை நாம் எதிர்த்து கிளர்ச்சி செய்ய முற்படுவோமேயானால், அதைத் தடுப்பதற்கு அரசாங்கம் வெவ்வேறு சட்டங்களை இயற்றியிருக்கிறார்கள். இந்த இடத்திலே கூட்டம் போடக்கூடாது, அந்த இடத்திலே கூட்டம் போடக்கூடாது, போலீஸார் அனுமதி பெற்றுக் கூட்டம் போடவேண்டும், கலெக்டர் அனுமதி பெற்றுக் கூட்டம் போடவேண்டும் என்றெல்லாம் சொல்லப்படுகிறது. சாதாரண மைதானத்தில், மல ஜலம் கழிக்கும்படியான இடத்தில் கூட கூட்டம் போடக்கூடாது. இப்படி ஒவ்வொன்றுக்கும் தடைகளை விதித்து, சுதந்திரத்தைத் தடைப்படுத்தும்படியான நிலையை அரசாங்

12th February 1958] [Sri S. Pakkirisami Pillai]

கத்தார் ஏற்படுத்தியிருக்கிறார்கள். கிளர்ச்சி செய்வதற்கு யாராவது முற்படுவோமேயானால், போலீஸார் தடியடிப் பிரயோகம் செய்கிறார்கள். தடி கொண்டு நொறுக்குகிறார்கள். இன்னும் வேண்டுமானால் சுடுகிறார்கள். இந்த மாதிரி முதலாளித்துவ மனப்பான்மையை மக்களிடம் பரப்பி, மனிதனை மனிதனின்று பிரித்து ஆட்சியாளர் ஆண்டுகொண்டு வருகிறார்கள் என்பதை மிகவும் வருத்தத்துடன் சொல்லிக்கொள்ளவேண்டியிருக்கிறது.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** இந்த ஜாதி ஒழிப்பு, ஜாதி பாகுபாடுகளை அகற்றுவது என்பதைப்பற்றி எத்தனை முறை கனம் அங்கத்தினர்கள் கூட்டம் போட ஏற்பாடு செய்து அது தடை விதிக்கப்பட்டிருக்கிறது என்பதை தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

**SRI S. PAKKIRISAMI PILLAI :** ஜாதி மதத்தைப் பற்றிக் கூட்டம் கூடுவது என்னுடைய பொறுப்பு அல்ல. அது மந்திரிகளுடைய பொறுப்பு. அவர்கள் செய்யும்படியான காரியங்கள் ஏட்டளவிலே ஒரு மாதிரியாக இருந்தாலும், செயலளவிலே ஜாதி மத உணர்ச்சியை ஊர்ஜிதம் செய்யும்படியான நிலையில்தான் இருக்கிறது என்பதைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். ஆகவே, எல்லாவற்றிற்கும் தடை விதித்து, முதலாளித்துவக் கொள்கையைக் கடைப்பிடித்து, மனிதனுக்கு மனிதன் வித்தியாசத்தைக் கற்பித்து ஆட்சி நடந்து வருகிறது. இந்த மனப்பான்மை மாறவேண்டும். இல்லாவிட்டால் சோஷலிஸ சமுதாயம் அமைப்போம் என்று சொல்வதில் அர்த்தம் இல்லை. இந்தமாதிரி நிலையில் சோஷலிஸ சமுதாயம் வரவே வராது. யதேச்சாதிகார சமுதாயம் ஆகத்தான் மாறிக் கொண்டிருக்கும். அதற்கு முடிவு கட்டுவதற்கு, மக்கள் எல்லோரும் திரண்டு பல கிளர்ச்சிகளைச் செய்வதற்குத் தயாராயிருப்பார்கள் என்று சொல்லிக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

**SRIMATHI D. RAGUPATHI DEVI :** மதிப்பிற்குரிய அம்மையார் அவர்களே, இம்மாதம் 8-ம் தேதியன்று கவர்னர் அவர்கள் நிகழ்த்திய உரையை வரவேற்கிறேன், பாராட்டுகிறேன். அந்நிய ஆட்சியிலிருந்து நாம் விடுபடுவதற்கு போராடிய காலத்தில் நம் நாட்டு மக்கள் அனைவரும் ஒரு தாயின் புதல்வர்கள் என்ற நினைவுடன் ஒன்றாக நின்று போராடினார்கள். இன்று நவ இந்தியாவை நிர்மாணிப்பதில் முழு மூச்சுடன் வேலை செய்கின்ற நேரத்திலே, நம்முடைய நாட்டின் பொருளாதாரத்தையும் பண்பாட்டையும் உயர்த்துவதற்கு, அன்று கடைப்பிடித்த தேசிய ஒற்றுமை இன்றைக்கும் இருக்கவேண்டியது மிகவும் அவசியமென்பதை கவர்னர் அவர்கள் தம்முடைய அனுபவத்தில் உணர்ந்து, அதை வலியுறுத்தியுள்ளார்கள். இது ஒவ்வொருவருடைய மனதிலும் பதிய வைத்துக்கொள்ள வேண்டிய விஷயமாகும். சமீபத்தில், ஆந்திரா, சென்னை அரசாங்கங்கள் ஸ்ரீ படாஸ்கரின் தீர்ப்பை நடு நிலையாக ஏற்றுக்கொண்டுள்ளனர். இரு சாராரையும் சேர்ந்த அரசியல் குழுவானது அதை ஆக்கவேலையில் நடத்த முற்பட்டிருக்கிறது. இம்மனப்பான்மை அண்டையிலுள்ள இரு ராஜ்யங்கள் நல்லெண்ணத்துடனும், மனிதாபிமானத்துடனும் நடந்து கொள்ள அடிகோலுகிறது. ஆட்சிமன்ற அனுபவங்களில் மக்கள் நேரடியாகத் தொடர்பு கொள்வதற்கு ஜில்லா போர்டு போன்ற பெரிய அமைப்புகளை மாற்றியமைக்க முற்பட்டிருப்பது வரவேற்கத் தகுந்த செயலில் ஒன்றாகும். கவர்னர் அவர்கள் தம்முடைய உரையில் ஒரு தனி நபர் குறிப்பிட்ட அளவுக்குமேல் நிலம் வைத்துக்கொண்டிருப்பதைத் தடைசெய்வதற்கு இடைக் காலத்தில் ஒரு சட்டம் கொண்டு வரப்படுமெனக் கூறியுள்ளார். இதை நான் முழு மூச்சுடன் வரவேற்கிறேன். இதைக் காலதாமதமின்றிக் கொண்டு வந்தால்தான், எதிர்காலத்தில் நாம் நிர்ணயிக்கப்போவதாக ஆவடியில் கூறிய சோஷலிஸ சமுதாயத்தை அமைக்க முடியும். இந்தத் திட்டம் அதற்கு அடிப்படையாக அமையும் என்பது என்னுடைய நம்பிக்கை. நம் நாட்டில் பொருளாதாரப் பற்றுக்குறை யிருந்தும், குந்தா, பெரியாறு போன்ற திட்டங்களை அந்நியக் கடன் வசதிகளை பெற்று நடத்த முன் வந்திருப்பதும், நெய்வேலி பழுப்பு நிலக்கரித் திட்டத்தை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 11-35 a.m.

சேர்த்து அமுலுக்குக் கொண்டு வந்திருப்பதும் போற்றத் தக்க விஷயங்கள் ஆகும். நம்முடைய மாகாணத்தில் இன்று பற்றுக்குறையைச் சரிக்கட்டுவதற்கு நமது மதிப்பிற்குறிய நிதி மந்திரி அவர்கள் சிறு சேமிப்புத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள். பொது மக்களுக்குப் பயன்படும் வகையில் இச்சமயத்தில் பொருளாதாரத்தைச் சரிக்கட்டுவதற்கு சிறு சேமிப்புத் திட்டம்தான் சிறந்தது என்பது எல்லோருடைய கருத்து ஆகும். இந்த விஷயத்தில் பலாத்காரம் கூடாது. கிராம மக்களுக்கும் மற்றவர்களுக்கும் அதனுடைய நலன்களை எடுத்து விரிவாகக் கூறினால், மிகவும் எளிதில் பணத்தை வசூலிக்கலாம். இந்த விஷயத்தில் கட்சிப் பாகுபாடு இன்றி அனைவரையும் ஒத்துழைக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, சென்னை மது விலக்குச் சட்டத்தைத் தீவிரமாக அமுல் நடத்துவதற்காக ஒரு திருத்த மசோதாவையும், தொழில் செய்யும் பெண்கள் மகப்பேறு காலத்தில் தாராளமாக மேலும் சில நலன்கள் பெறும் வண்ணம் மகப்பேறு நலச் சட்டத்தைச் திருத்துவதற்கான ஒரு மசோதாவையும், தொழிற்சாலைகளில் வேலை பார்க்கும் தொழிலாளருக்கு அதிகப்படியாக விடுமுறை நாட்களை அளிப்பதற்கும், வார நிலங்களைப் பகிர்வதற்கான சட்டங்கள் இங்கு கொண்டு வரப்படுமென்று கவர்னர் அவர்கள் கூறியுள்ளார்கள். பாட்டாளி மக்களின் எதிர் கால நல் வாழ்வுக்கு அவைகள் சிறந்த வழிவகைகள் ஆகும் என்பதை அறிந்து நாம் அனைவரும் வரவேற்க வேண்டும். அவல நிலையிலுள்ள கைத்தறி நெசவாளர்களைப் பற்றியும், முன்னேற்றமடைய விரும்பும் ஹரிஜன மக்களைப்பற்றியும் தம்முடைய உரையில் குறிப்பிட்டிருப்பார்களேயானால் அவர்கள் உரையானது இன்னும் சிறந்து விளங்கும் என்று நினைக்கிறேன். தொன்று தொட்டு நம் நாட்டில் கைத்தறியை உயிர் நாடியாகக் கருதும் நெசவாளி மக்கள் மத்திய சர்க்கார் ரிபேட்டைக் குறைத்தால், எதிர் காலத்தில் நாம் வாழ்வதற்கு வழியுண்டா என்று கலங்கி வாழ்க்கை நடத்துகிறார்கள். சிறிது நேரத்திற்கு முன்னர், நமது தொழில் அமைச்சர் அவர்கள், அந்த ரிபேட்டை பழைய விகிதத்திற்கு கொண்டு வருவதற்கு இடையருது வற்புறுத்திக்கொண்டு வருவதாகக் கூறியுள்ளார். அதை முழு மூச்சுடன் வரவேற்கிறேன். கைத்தறி நெசவாளர்களைப் பற்றிக்கூறும்போது, என்னுடைய தொகுதியாகிய மேட்டுபாளையம், சிறுமுகை பிர்க்காவிலுள்ள நெசவாளர்கள் வசிக்கும் கிராமங்களைப்பற்றிக் கூற விரும்புகிறேன். சிறுமுகைப் புதூர், இலுப்பனத்தம், ஆலாங்கொம்பு, மூலத்துறை போன்ற கிராமங்கள் பவானி ஆற்றின் கரைக்குச் சிறிது அப்பாலிருக்கின்றன. பவானிசாகர் அணைக்கட்டு கட்டப்பட்ட பிறகு இந்தக் கிராமங்களில் நீர்க்கசிவு ஏற்பட்டுள்ளது. வெள்ளம் வரும் காலங்களில் தண்ணீர் கிராமத்திற்குள் செல்லுகிறது. நிரந்தரமாக ஈரக்கசிவு உள்ளதால், கொசுக்கள் உண்டாகி, மலேரியாபோன்ற வியாதிகள் ஏற்படுகின்றன. பல கஷ்டங்களை அவர்கள் அங்கு அனுபவிக்க வேண்டியவர்களாக இருக்கிறார்கள். அங்குள்ளவர்களுக்கு எல்லாம் வேறு இடங்களில், தர்காஸ்து இடங்களில் இடம் கொடுத்து அவர்களுக்கு நல்ல முறையில் நிவாரணம் அளிக்கலாம். அல்லது வேறு சிறந்த முறைகள் இருந்தால் அவ்விதங்களில் அதற்கு வேண்டிய நடவடிக்கைகளை அரசாங்கம் உடனடியாக எடுத்துக்கொள்ளவேண்டும் என்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

நம்முடைய இந்தியா நாட்டை உலகத்திலேயே நல்ல நிலைக்குக்கொண்டு வர தலையாய காரணமாக இருப்பவரும், பாரதம் மட்டுமின்றி, மற்ற ஏனைய நாடுகளில் நன்மதிப்பைப் பெற்றவரும், நம் இந்தியப் பிரதமரும் ஆகிய நேருஜி அவர்கள் சென்னை மாகாணத்திற்கு வந்தபோது நம் திராவிட முன்னேற்றக் கழக தோழர்கள் நடந்துகொண்ட விதத்தால் அவர்கள் அழியா பழியைத் தேடிக்கொண்டு விட்டார்கள். அத்துடன் அவர்கள் நிற்காமல் கவர்னர் அவர்கள் கூட்டிய இரண்டு சபையின் கூட்டுக் கூட்டத்திற்கும் வராமல், அவர் நிகழ்த்திய உரையைக் கேட்க வராமல், ஒரே கட்டுப்பாடாக நின்று விட்டார்கள். சட்ட சபையில் அவர்கள் அங்கம் வகிப்பதால் அவர்களுக்குப் பொறுப்பு உண்டு. அவர்களுடைய எதிர்ப்பை சட்டசபைக்கு வந்து எடுத்துக்காட்டியிருக்கலாம். பாராளுமன்றத்தில் அவர்களுக்கு இடம் இருக்கிறது. அங்கு அவர்களை அதட்டியிருக்கலாம். பாட்டாளும்,

12th February 1958] [Srimathi D. Ragupathi Devi]

எட்டிலும் தமிழ் நாட்டின் பண்பை பாடியும் எழுதியும் வருகின்ற இவர்கள் அதைக் கடைப்பிடிக்கவில்லை. விருந்தினர்கள் வந்தால் பட்டினி யிருக்க நேர்ந்தாலும் அவர்களை இன்முகத்துடன் வரவேற்று உபசரிப்பது தான் தமிழனின் தலையாய பண்பு என்பதை அறிந்தும், உணர்ந்தும், இருந்து அதைக் கடைப்பிடிக்காமல் நடந்துகொண்டார்கள். இது தமிழ் பண்பு படைத்த, தமிழ் உள்ளம் படைத்த, ஒவ்வொரு தமிழ் மகனையும், தமிழ் மகளையும், தலை குனியச்செய்து விட்டது என்பதை மிக்க வருத்தத் துடன் சொல்லிக்கொள்ளுகிறேன். நேற்று கனம் அம்மையார் அவர்கள் கூறினார். மதிப்பிற்குரிய ராஜகோபாலாச்சாரியாரையும், மதிப்பிற்குரிய பெரியாரையும் அவர் இகழ்ந்து பேசினார் என்று குறிப்பிட்டார். நேரு அவர்கள் பேசினார் எனபதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். அவர் பேச வில்லை என்று நான் சொல்லவில்லை. நீங்கள் சட்டசபையில் மக்களுடைய பிரதிநிதிகளாக, ஒரு பொறுப்பான கட்சியாக இருக்கிறீர்கள். தங்களுடைய குறைகளைச் சொல்லிக்கொள்வதற்கு அவரை நேரில் கண்டு தங்களுடைய அதிருப்தியைத் தெரிவித்துக் கொண்டிருக்கலாம். அவரை சந்தித்துப் பேசி யிருக்கலாம். மதிப்பிற்குரிய தலைவர் ராஜகோபாலாச்சாரியார் அவர்களும் பெரியார் ஈ. வெ. ரா. அவர்களும் விடுதலைப் போராட்டத்தில் உங்களுடன் தோளோடு தோள் நின்று போராடினார்கள். நலிவடைந்த மக்களின் நலனுக்காக பாடுபட்டார்கள். இன்று அவர்கள் வயது முதிர்ந்த நிலையிலுள் ளார்கள். அவர்களை நீங்கள் இவ்வாறு கூறுவது சரியா? இதைக்கண்டு எங்கள் உள்ளங்கள் கொதிக்கின்றன. " No man is perfect " என்ற பொன மொழியை நினைவூட்டியிருக்கலாம். இவ்வாறு கூறியிருந்தால் நிச்சயமாக அப் பெருமகனார் தாம் உணர்ச்சி வசத்தால் கூறியதாக ஒப்புக்கொண்டிருப்பார். ஆனால் அப்படிச் செய்ய அவர்கள் தவறிவிட்டார்கள். நல்ல சூழ் நிலையை பயனபடுத்திக்கொள்ளாமல் அவர்கள் எடுத்துக்கொண்ட முறையானது தவ றானது. இப்படிச் செய்யாமல் இருந்தது அவர்களுடைய குற்றம். இவ்வாறு இருக்க அம்மையார் அவர்கள் நேற்று அரசாங்கத்தின் மேல் குற்றஞ்சாட்டி, " அமைச்சரவர்கள் என்ன செய்வார்கள்? பாவம், பட்டமும் பதவியும் அவ்வாறு இருக்கச் செய்கிறது " என்று சொன்னார். அதற்கு முன்னமே சொல்லி விட்டார்கள் " நாங்கள் நினைத்திருந்தால் நேருஜி டில்லிக்குச் சென்றுவிடுவாரா? என்று. " இங்கு அமர்ந்துள்ள அமைச் சர்கள் நினைத்திருந்தால் உங்கள் கட்சித் தலைவர் மதிர்ப்பிற்குறிய அண்ணாத்துரை அவர்கள், சிறையை விட்டு வெளியேறி சட்டசபையில் அமர்ந்திருக்க முடியுமா? என நான் கேட்கிறேன். பேசுவதை சிறிது சிந்தித்துப் பேச வேண்டும். அதுதான் மனிதப் பண்பாடு. எல்லோ ருக்கும் பேச்சுரிமை வாங்கிக்கொடுத்தது யார்? என்று கேட்கிறேன். பேச் சுரிமையை வாங்கிக்கொடுத்தது, ஜனநாயக ஆட்சியை நடத்தும் காங்கிரஸ் கட்சிதானா? அல்லது வேறு யாராவதா? என்று கேட்கிறேன்.

ஆகவே சில வார்த்தைகளைப் பேசுவதற்கு எனக்கு அனுமதி கொடுத்த கனம் சபாநாயகர் அவர்களுக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொண்டு கவர்னர் உரையை ஆதரித்து என்னுடைய சிற்றுரையை இத்துடன் முடித்துக் கொள்ளுகிறேன்.

SRI N. R. THIAGARAJAN : கனம் தலைவர் அவர்களே, 11-45 a.m.
நேற்று நான் காலம் கடந்து சபைக்குள் வந்தேன். ஆகவே சபையில் நடந்த இரண்டு நாளைய விவாதம் எனக்கு அதிகமாக தெரியாது. நான் இரண்டு நாட்கள் வாரது இருந்தாலும் நேற்று சபைக்குள் நுழையும் போது டாக்டர் சத்தியவாணிமுத்து அவர்கள் பேசிக்கொண்டிருந்தார். " செந்தமிழ் நாடென்னும் போதினிலே " என்று பாடிக்கொண்டிருந்த இன்பத் " தேன் மொழி " என் காதில் பட்டது. திராவிட நாடு வேண்டும் என்று கேட்டுக்கொண்டிருந்தவர்கள் இப்பொழுது செந்தமிழ் நாடென்றும் போதினிலே இன்பத்தேன் மொழி பாயுது காதினிலே என்று பாடக்கூடிய காலம் வந்துவிட்டது என்பதைக் கேட்க எனக்கு சந்தோஷ மாக இருந்தது. அவருடைய வார்த்தைகள் என்னுடைய காதில் கர்ண மிருதமாக இருந்தது. அப்படிப் பாடும்போது அவர் திராவிட நாட்டையே மறந்து விட்டார் என்று தோன்றிற்று. அவர்கள் எப்பொழுது செந் தமிழ் நாட்டில் குடியேறினார்கள் என்பது தெரியவில்லை. அவர் சொன் னதை எல்லாம் தொட்டுத் துளாவி அலசி ஆராய்ந்து விட்டேன். கல்வி

குறைந்த தமிழ் நாடு, இகழ் கம்பன் பிறந்த தமிழ் நாடு என்று பாடிய பாட்டெல்லாம் போய்விட்டது. கம்பரைப் இகழ்ந்து பேசி இப்போது புகழ்ந்து பாடகூடிய காலம் வந்து விட்டதைக்கண்டு சந்தோஷப்படுகிறேன். அது வாஸ்தவம்தான். அது மாத்திரம் அல்ல, இன்னும் என்ன காட்சி களையெல்லாம் காணப்போகிறோமோ தெரியவில்லை. கையில் கட்டை கழுத்தில் கொட்டை நெற்றியில் பட்டை என்ற காலமும் வரப்போகிறது. அதையும் நாம் பார்க்கத்தான் போகிறோம். எங்கள் ஊரில், மதுரையில் சுவறுகளில் பத்து வருஷங்களுக்கு முன்பு ஆரியர்கள் ஒழிக என்று எழுதியது இன்னும் அப்படியே புத்தம் புதிதாக இருக்கிறது. அன்று அப்படி எழுதி விட்டு இன்றைக்கு ராஜாஜிக்கு வக்காலத்து வாங்கிப் பேசும் நிலைமை வந்துவிட்டது. தமிழனுடைய மானத்தைக் காப்பாற்ற வேண்டும் என்று இந்தக் காரியங்களைச் செய்கிறார்கள் என்று எனக்குத் தோன்று கிறது. இப்பொழுது தமிழ் நாடு இந்தியா எங்கும் தெரிந்த நாடாக மாறிவிட்டது. சென்ற காலங்களில் நேரு தென்னாட்டிற்கு வந்ததுபோல் இன்றைக்கு அவர் தென்னாட்டிற்கு வரவில்லை. அவர் பல முக்கியமான காரியங்களுக்காகத்தான் வந்தார். தொழிற்சாலைகளை திறப்பதற்கும் கிண்டியில் இஞ்சினியரிங் தொழில் பண்ணையை ஆரம்பிப்பதற்கும், விஞ்ஞான ஆராய்ச்சி மகாநாட்டை ஆரம்பிப்பதற்கும்தான் வந்தார். இப்படிப்பட்ட நல்ல காரியங்களைச் செய்வதற்குத்தான் அவர் இங்கு இப்பொழுது வந்தார். இப்படிப்பட்ட காரியங்கள் இது வரையிலும் நம் நாட்டில் நடைபெறவில்லை. இப்பொழுதுதான் நடைபெற ஆரம்பித்திருக்கிறது. அது அவர்களுக்குப் பிடிக்கவில்லையா ? அது பிடிக்கவில்லை என்றுதான் பலம் கொண்டு எதிர்த்தார்களோ என்னவோ ? ஒரு பக்கத்தில் திராவிட நாடு வேண்டும் என்று சொல்லுகிறார்கள், மற்றொரு பக்கத்தில் திராவிட நாட்டிற்கு வேண்டிய நன்மைகளைச் செய்யும்போது அதை எதிர்க்கிறார்கள்.

ஒரு பக்கத்தில் தமிழ் மொழி வேண்டும் என்று சொல்லுகிறார்கள். திராவிட நாட்டிற்கு என்ன மொழி வேண்டும் என்று அவர்களாலேயே பதில் சொல்ல முடியவில்லை. வருங்கால திராவிட நாட்டிற்கு, மத்திய இந்தியாவிற்கு எப்படி ஹிந்தி மொழி அவசியமோ, அந்த மாதிரி திராவிட நாட்டிற்கும் ஒரு மொழி அவசியம் வேண்டும். அப்பொழுது 25 சத விகிதம் தெலுங்கு மொழியும், 25 சத விகிதம் தமிழ் மொழியும், 25 சத விகிதம் மலையாள மொழியும், 25 சத விகிதம் கன்னட மொழியும் கலந்த ஒரு கதம்ப மொழியை கண்டுபிடிக்க அவர்களே ஆராய்ச்சி செய்வார்கள் போலிருக்கிறது. (ஸ்ரீ மு. கருணாநிதி : குறுக்கீடு.) நல்ல சமயத்தில் ஞாபகப்படுத்தினார். அது அவர்களுடைய முன்னோர்களுடைய மொழி. அப்பொழுது அது அவர்கள் வாழ்வை வளமாக்கியது. அதனால் ஆங்கிலம் மீது அவர்களுக்கு பற்றும் பாசமும் இருக்கிறது. நான் இந்தியன் என்ற முறையில் சொல்லுகிறேன். ஹிந்திதான் மத்திய அரசாங்கத்தில் மொழியாக இருக்க வேண்டும் என்று ஏற்றுக்கொள்ளுகிறேன். அதையே ஒவ்வொருவரும் ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள்.

இங்கிலாந்து மற்ற நாடுகளுடன் சேருவதற்கான காலமும் வரப்போகிறது. இப்பொழுது ஈஜிப்டும் சிறியாவும் சேரவில்லையா. அதைப்போலவே உலகத்திலுள்ள நாடுகள் எல்லாம் ஒன்றோடொன்று சேரக்கூடிய காலம் வராமல் இருக்கப்போவதில்லை. அப்படிப்பட்ட காலம் வந்து இங்கிலாந்து நம்முடன் சேர்ந்தால் அதை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டியதுதான். வெள்ளைக்காரர்களை வெளியே போ என்று சொல்லியும், சைமன் கமிஷனை பகிஷ்கரித்தோம் என்று இவர்கள் நேருவை பகிஷ்கரிக்கிறார்களாம். சைமன் இந்த நாட்டு மக்களுக்கு ஓட்டுரிமை வழங்காமல் லண்டனிலிருந்தே ஆள சட்டம் செய்ய வந்தவன். நான் இந்தியன் என்ற முறையிலும், பிரதம மந்திரி நேருவுக்கு பிரதிநிதி என்ற முறையிலும் பேசுகிறேன். இந்த நாட்டின் 36 கோடி மக்களுடைய பிரதிநிதி என்ற முறையிலும் பேசுகிறேன். நாளைக்கு இங்கிலாந்து நம்முடன் சேர்ந்தால் அதை வரவேற்று அவர்களுக்கு நம்முடைய பார்லிமெண்டில் இடம் கொடுக்க தயாராக இருக்கிறேன். நாம் எப்படி 7½ லட்சம் பேர்களுக்கு ஒரு பிரதிநிதி என்று பார்லிமெண்டில் இடம் கொடுத்திருக்கிறோமோ அதைப்போலவே அவர்களுடைய ஜனத்தொகைக்குத் தக்கபடி அவர்களுக்கும் நம்முடைய பார்லிமெண்டில் இடம் கொடுக்க தயாராக இருக்கிறோம். அதற்கு நமது

12th February 1958] [Sri N. R. Thiagarajan]

பிரதமர் அவர்களும் தயாராக இருப்பார் என்று சொல்லிக்கொள்ளுகிறேன். இங்கிலாந்து நம்முடன் சேர்ந்து உலகம் முழுவதுமே ஒரு உலக சர்க்கார் ஏற்பட வேண்டும் என்பது என்னுடைய ஆசை. உலகம் முன்பு இருந்தது போல் இப்பொழுது இல்லை. முன்பு பரந்து இருந்தது. இப்பொழுது குறுகி விட்டது. மதுரையிலிருந்து சென்னைக்கு வருவதாக இருந்தால் பனிரெண்டு மணி நேரம் ஆகும். ஆனால் இப்பொழுது திருவனந்தபுரத்திலிருந்து டில்லிக்குச் செல்ல நாலேந்து மணி நேரம்தான் ஆகிறது.

பண்டைய காலத்தில் மனிதன் காட்டுமிருண்டியாக வாழ்ந்தான், எளிதில் எட்டிப்பார்க்கும் தூரத்தையும், கால் நடையில் சுற்றிப்பார்க்கும் இடத்தையும் கழுதை மீதும் குதிரை மீதும் கட்டை வண்டியிலும் சென்று பார்க்க முடிந்த இடத்தையும் நாடு எனப் பெயர் வைத்தான். அந்த தற்கால மனித சகாப்தத்திலிருந்து மனிதன் வெகு தூரம் முன்னேறி விட்டான், காரும் ரயிலும் சென்ற 50 ஆண்டுகளாக மனித நாகரீகத்தை ஒன்றுபடுத்தி வருகிறது. நாடுகளுக்கு இனி கோடுகள் போட்டு மறைக்க இயலாது ஒரே உலகம், உலக சர்க்கார் கோஷம் வலுத்து வருகிறது. சர்வதேச சங்கமும், ஐக்கிய நாடுகள் ஸ்தாபனமும் அதற்கு வழிகாட்டி களாக இருக்கிறது.

இந்தப் பரந்த உலகத்தை குறைந்த நேரத்தில், அதாவது நாலரை மணி நேரத்தில், இங்கிருந்து டில்லிக்குப் போய்விட முடிகிறது. இது மட்டுமா ? 20 ஆயிரம் மைலைக் கூட வெகு விரைவில் ஒரே சுற்றுச் சுற்றி விடலாம் என்ற நிலை ஏற்பட்டுவிட்டது. இந்த நேரத்தில், சிறு சிறு குட்டி நாடுகள், தனித் தனி நாடாக இருப்பதற்கு நியாயமே இல்லை ; அப்படி இருக்க வேண்டியது அவசியமும் இல்லை. அப்படித்தான் இருக்கவேண்டும் என்றால், அதாவது "தமிழ் நாடு" என்று ஒன்று தனித்திருக்க வேண்டுமென்றால்—"தமிழ் நாடு" என்று சரித்திரத்திலே இல்லவே இல்லை என்று நான் நிச்சயமாகக் கூறுகிறேன். சேர நாடு, சோழ நாடு, பாண்டிய நாடு, பல்லவ நாடு, கொங்கு நாடு என்று நாடுகள் இருந்தனவே தவிர, "தமிழ் நாடு" என்று ஒரு நாடு இருக்கவில்லை.

பாண்டிய நாடு என்று கூறும்போது, நண்பர் ஸ்ரீ ஏ. பி. ஸி. வீரபாகு அவர்கள் தென் பாண்டிய நாடு என்று இருந்திருப்பதை நினைவூட்டுகிறார். எங்கள் பகுதியில் பாண்டிய நாடு வேண்டுமென்று புதிதாக ஒரு கட்சியை ஆரம்பித்திருக்கிறார்கள். இனி பழைய 72 பாளையக்காரர்கள் தனித்தனி யாக நாடு வேண்டுமென்று கேட்பார்கள், புதிய புதிய சிறு சிறு நாடுகள் ஏற்பட வேண்டியிருக்கும். அப்படி நாடு பிரிக்கப்படுவதை நாங்கள் ஒரு பொழுதும் ஏற்றுக்கொள்பவர்கள் அல்ல. இதையெல்லாம் ஏற்றுக்கொண்டால் என்ன ஆகும் ? தெற்கு மாசி வீதிக்காரர்கள் வடக்கு மாசி வீதிக் காரர்களை "ஒழிக" என்பார்கள். அதேபோல் வடக்கு மாசி வீதிக்காரர் களும் சொல்லுவார்கள், எங்கள் ஊரிலே அல்லி நகரம், தேனி என்று பகுதிகள் இருக்கின்றன. அல்லி நகரத்தவர்கள் ஆதிக்கத்திற்கு வந்தால், தேனி வாசிகள் தகராறு செய்வார்கள். தேனிவாசிகள் ஆதிக்கத்திற்கு வந்தால் அல்லி நகரத்தவர்கள் தகராறு செய்வார்கள். அதேபோல வடக்குத் தெருவார்கள் ஆதிக்கத்திற்கு வந்தால், தெற்குத் தெருவார் "ஒழிக" என்று கூச்சலிடுவதும், தெற்குத் தெருவார் ஆதிக்கத்திற்கு வந்தால் வடக்குத் தெருவார் "ஒழிக" என்று கூச்சலிடுவதும் ஒவ்வொரு கிராமத்திலும் சகஜம், எங்கள் பக்கத்தில் பெரியகுளம் என்று ஒரு ஊர் இருக்கிறது. அந்த ஊரை ஒரு ஆறு பிரிக்கிறது, வடகரை என்றும், தென்கரை என்றும், அங்கே வடகரை வாசிகள் ஆதிக்கத்திற்கு வந்தால் தென்கரை வாசிகள், "ஒழிக" என்று கூறுவதும், தென்கரை வாசிகள் ஆதிக்கத்திற்கு வந்தால், வடகரை வாசிகள் "ஒழிக" என்று கூறுவதும் உண்டு. ஆகவே, இதுபோல் ஒவ்வொரு ஊரிலும் வடக்குத் தெருவும் தெற்குத் தெருவும் இருந்துகொண்டுதான் இருக்கும். வடகலை, தென்கலை என வைஷ்ணவர்கள் கூடதான் சண்டை போடுகிறார்கள். ஆகவே, வடக்கு-தெற்கு என்பதை யாரும் புதிதாகக் கண்டுபிடித்து விட்டதாகச் சொல்ல முடியாது.

எஸ்டிமேட் கமிட்டி அங்கத்தினர்கள் டில்லிக்குச் சென்றிருந்தபோது, வடக்கு நிச்சயமாகத் தாழ்ந்து வருகிறது என்பதை நானும், நண்பர் கோவிந்தசாமி அவர்களும், நண்பர் கருத்திருமன் அவர்களும் பார்த்

[Sri N. R. Thiagarajan] [12th February 1958

தோம். அங்குள்ள நிலைமையை அவரும் நேரில் பார்த்திருப்பார்கள். அப்படியிருந்தும், அவருடைய கட்சிதான் அவரை அப்படிப் பேசக் கூறுகிறதே தவிர, அவருடைய உள்ளம் வேறு விதமாகத்தான் கூறியிருக்க வேண்டும். தமிழ்நாட்டைப் போன்ற முன்னேற்றம் வடக்கு மாகாணங்களில் இல்லவே இல்லை என்பதைக் கண்கூடாகப் பார்த்தோம்.

உதாரணமாகச் சொல்ல வேண்டுமானால், ஒரு இடத்தில் நூற்றுக் கணக்கான பெண்கள் கூடியிருந்தார்கள். அந்தக் கூட்டத்திலே ஒரு பெண் சுத்தமாகவும் சுகாதாரமாகவும் இருக்கக் கண்டோம். நண்பர் கோவிந்தசாமி அவர்களும், நண்பர் கருத்திருமன் அவர்களும் பார்த்தார்கள். "இந்த அம்மாள் ஒரு ஆபீசராகத்தான் இருக்க வேண்டும்" என்று சொல்லிக்கொண்டோம். ஏனென்றால், வடக்கே உள்ள மாகாணங்களிலே அவ்வளவு சுத்தமாகவும் சுகாதாரமாகவும் உள்ள பெண்களைச் சாதாரணமாக காணவே முடியவில்லை. அதனால், எதற்கும் சந்தேகத்தை நிவர்த்தி செய்துகொண்டுவிடலாம் என்பதற்காக அந்த அம்மாவிடமே நேரில் சென்று, "நீங்கள் இந்த ஊர்வாசி போல் தெரியவில்லையே" என்று கேட்க, அந்த அம்மாள், "நான் சோஷல் எடுகேஷன் ஆபீசர்" என்று பதிலளித்தாள். இதிலிருந்து, சோஷல் எடுகேஷன் ஆபீசர் போன்றவர்கள்தான் நன்றாக இருக்க முடியும் என்ற நிலையை நாங்கள் அங்கு கண்கூடாகப் பார்த்துவிட்டோம்.

எத்தனையோ கிராமங்களை நாங்கள் பார்த்தோம். நான் மாத்திரம் பார்க்கவில்லை. எங்களுடன் பன்னிரண்டு மெம்பர்கள் வந்திருந்தார்கள். டில்லியிலிருந்து 1-வது மைலில் உள்ள ஒரு இடத்திற்கு எங்களை அழைத்துச் சென்றிருந்தார்கள். அங்குள்ள பி.டி.ஓ. காரில் நாங்கள் போய்க்கொண்டே இருந்து 1-வது மைலில் உள்ள அந்த ஊரை அடைந்தோம். "இங்கெல்லாம் ரோடு வசதி இருக்கிறதா?" என்று அந்த பிளாக் டெவலப்மென்ட் ஆபீசரைக் கேட்டோம். அதற்கு அவர், "இப்பொழுது வந்ததுதான் ரோடு" என்று பதில் சொன்னார். அதைக் கேட்டு நாங்கள் ஆச்சரியம் அடைந்தோம். அதிலிருந்து அங்கே நல்ல ரோடு வசதி இல்லை என்று தெரிந்துகொண்டோம்.

உலகத்திலேயே உள்ள ஐந்து தலை நகர்களில் டில்லித் தலை நகரமும் ஒன்று என்று இராக் பிரதிநிதி அவர்கள் சர்வதேச சங்கத்தில் கூறினார். ஆனால், டில்லிக்கு அருகே, டில்லியிலிருந்து 1-வது மைலிலேகூட மின்சார வசதி இல்லாமலிருக்கிறது. இதுபோல், இரண்டு மூன்று மாகாணங்களில் நாங்கள் சுற்றுப் பிரயாணம் செய்தோம். கிராமந்தோறும் பார்த்தோம். எந்த கிராமத்திலாவது மின்சார விளக்கு, ரோடு வசதி, குழாய்த் தண்ணீர் வசதி முதலியவைகளில் எதையாவது பார்க்கவேண்டுமென்று பேரவா கொண்டிருந்தோம். ஆனால் எங்கும் பார்க்க முடியவில்லை.

இங்குள்ள தேனியை எடுத்துக்கொள்ளுங்கள். அந்தப் பகுதியில் எல்லா கிராமத்திலும் மின்சார வசதி இருக்கிறது. பல இடங்களில் குழாய்த் தண்ணீர் வசதி இருக்கிறது, ரோடு வசதி இருக்கிறது, போக்குவரத்து வசதி இருக்கிறது, இன்னும் பலப் பல வசதிகளை தமிழகத்திலே நாம் பார்க்கிறோம். (கனம் அங்கத்தினர் ஸ்ரீ ஆ. கோவிந்தசாமி குறுக்கீடு.)

நண்பர் கோவிந்தசாமி அவர்களுடைய தொகுதியிலே ஒருவேளை வசதிகள் குறைவாக இருக்கலாம். ஆனால், மதுரை ஜில்லாவில் அநேக இடங்களில் மக்களுடைய ஒத்துழைப்பு காரணமாகவும் எங்களுடைய திறமை காரணமாகவும் எவ்வளவோ வசதிகளைச் செய்ய முடிந்தது. தங்களுடைய தொகுதியிலே சரியாக இல்லையென்றால், நாட்டிலேயே ஒன்றும் இல்லை என்ற கருத்தை நான் ஏற்றுக்கொள்ள முடியாது. ஆக, வடக்கு மாகாணங்கள் உண்மையிலேயே மிக மோசமான நிலைமையில் இருக்கின்றன. பள்ளிக்கூடத்திற்குள்ளே சென்றால் துர்நாற்றம் வீசுகிறது. அதற்கும் ஏதாவது கூறலாம்—பத்து ஆண்டுகள் ஆகியும் டில்லிக்கு அருகாமையிலேயேகூட சீர்திருத்தம் செய்ய முடியவில்லையே என்று குறை கூறிப் பேசலாம். அது ஒருபுறமிருக்க, பரிதாபாத் தொழிற்சாலையைப் பார்த்து, "ஆகா!

12th February 1958] [Sri N. R. Thiagarajan]

வடக்கு வாழ்ந்துவிட்டது" என்று சொல்பவர்களைப் பார்த்து, "எங்கள் தேனியைப் பாருங்கள்" என்று நான் கேட்டுக் கொள்ளுகிறேன். பதினைந்து ஆண்டுகளுக்குள்ளாகத் தோன்றிய ஊர்தான், தேனி. இந்தக் காலத்திற்குள்ளாக ஏராளமான தொழிற்சாலைகள் ஏற்பட்டிருக்கின்றன. மூன்று ஆண்டுகள் நான் சிறையில் இருந்துவிட்டுத் திரும்பி வந்த பிறகும்" இது என ஊரா! என்று ஆச்சரியம் அடையும் வண்ணம் ஊர் மாறியிருந்தது. தீப்பெட்டி மாடல், சோப்பு மாடல் வீடுகளும், இன்னும் பலப்பல தொழிற்சாலைகளும், சிமெண்ட் கான்க்ரீட் வீடுகளும் கட்டப்பட்டிருந்ததை நாங்கள் பார்த்தோம். இதுபோல், நாட்டிலுள்ள ஒவ்வொரு பகுதியும் முன்னேறிக் கொண்டுதான் இருக்கின்றது. அதைபெல்லாம் கவனிக்காமல், வடக்கே ஒருசில இடங்களை மட்டும் பார்த்துவிட்டு, கேட்வே ஆப் இந்தியாவிலிருந்து மலபார் ஹில் வரையிலுள்ள மரைன் ட்ரைவ் ஐப் பார்த்துவிட்டுவந்து, "ஆகா, பம்பாயைப் பாருங்கள்; வளர்ந்துவிட்டது" என்று கூறினால் அது அவ்வளவு பொருத்தமாக இருக்காது. ஆகவே, நகரங்களை ஒப்பிடுவது விடுத்து கிராமங்களை ஒப்பிட்டுப் பார்க்கவேண்டும். அப்படிப் பார்த்தால், உத்தரப் பிரதேச ராஜ்யத்தில் 9 சதவிகித மக்கள்தான் படித்தவர்கள் இருக்கிறார்கள் என்பதும், சென்னை ராஜ்யத்தில் 22 சதவிகித மக்கள் படித்தவர்கள் இருக்கிறார்கள் என்பதும், அஸ்ஸாம் ராஜ்யத்தில் அதிக சதவிகிதத்தவர் படித்தவர்கள் இல்லை என்பதும் மத்திய சர்க்கார் கொடுத்துள்ள புள்ளி விவரத்திலிருந்து தெரிகிறது. ஆக, மற்ற எந்த ராஜ்யத்தைக் காட்டிலும் தமிழ் ராஜ்யம் குறைந்துவிடவில்லை. அகதிகளுக்கு ஒருசில வசதிகள் செய்யப்பட்டிருந்தாலும், சிலர் சொல்கிறபடி, அங்கே மக்கள் வாழ வசதி இல்லாமல்தான் இருக்கிறார்கள்.

தமிழ்நாடு தனித்து இருக்கவேண்டுமென்று கூறுகிறவர்களை நான் கேட்கின்றேன் காவிரியாறு நம்முடைய நாட்டில் உற்பத்தியாகிறதா? இல்லையே. பெரியாறு திருவாங்கூர்-கொச்சியில் உற்பத்தி ஆகிறது. தென் பெண்ணையாறு கர்நாடக ராஜ்யத்தில் உற்பத்தியாகிறது. அப்படி இருக்க, காவிரி, தென்பெண்ணை, பாலாறு என்று சொல்கிறார்கள். அவர்களை நான் கேட்கிறேன்—இந்த நதிகள் உங்களுக்குச் சொந்தமானதா? என்று. இந்த நதிகள் எங்கே உற்பத்தியாகின்றன? என்று நான் கேட்கிறேன். இந்த நிலையில், தமிழகம் தனியாக இருந்தால் தமிழ்நாட்டின் கதி என்ன ஆகும் என்பதை அவர்கள் சற்று யோசித்துப் பார்க்கவேண்டும். எகிப்தும் சிரியாவும் இணைந்து வாழவேண்டிய நிலை இன்று ஏற்பட்டிருக்கிறபோது தமிழ்நாடு தனித்திருக்க வேண்டுமென்று இன்னும் கேட்டுக் கொண்டிருப்பதில் அர்த்தம் இருக்கிறதா என்று நான் அவர்களைக் கேட்கின்றேன். ஹங்கேரி ரஷ்யாவால் அடிபட்டு உதைபட்டு கஷ்டப்பட்டு வருவதைக் கண் கூடாகப் பார்த்த பின்னரும் "தமிழ்நாடு" என்ற பிரச்னைக்கு அர்த்தம் இல்லை. இந்தக் கோஷத்தை விட்டுவிடவேண்டும்.

இப்பொழுது புது மெருகு ஒன்று ஏற்பட்டிருக்கிறது. எதையாவது பேசிவிட்டு, பிறகு இல்லை என்று கூறிவிடலாம். நான் முதல் முதலில் சட்டசபைக்கு வந்தபோது, "எல்லோரும் உண்மைவாதிகள்தான் இருக்கிறார்கள்" என்று நினைத்து வந்தேன். என்ன வேண்டுமென்றாலும் எதை வேண்டுமென்றாலும் கூறி பிறகு மறுத்துவிடலாம் என்று ஒரு வருஷத்திற்குள்ளாகத் தெரிந்துகொண்டேன். சினிமா காண்ட்ராக்ட் என்று நினைத்துக்கொண்டு ஒவ்வொரு காரியத்தையும் செய்கிறார்களோ என்று நினைக்கத் தோன்றுகிறது.

மொழிப் பிரச்னை கூட்டம் நடந்தது. கூட்டம் நடந்து ஆனவுடனேயே ஒரு அறிக்கை விட்டிருக்கலாம். "மொழிப் பிரச்னைக்கும் எனக்கும் சம்பந்தம் இல்லை" என்று. சர்க்கார் யாதாஸ்தில் கையெழுத்து இடவில்லையென்றால் எதிர்த்துவிட்டு வந்திருக்கிறேன் என்றாவது அறிக்கை விட்டிருக்கலாம். அல்லது சர்க்கார் யாதாஸ்துக்கே ஒரு "டிஸ்ஸென்டிங் மினிட்" கொடுத்திருக்கலாம். அப்படிச் செய்யாமல், "நான் என்ன கையெழுத்தா போட்டுவிட்டேன்?" என்று கேட்பது திரு. அண்ணாதுரை முதலியார் அவர்களுக்குக் கொஞ்சங்கூடப் பொருத்தம் இல்லை என்று நான் கூறிக்கொள்கிறேன்.

[12th February 1958

SRI C. N. ANNADURAI : ஒழுங்குப் பிரச்னையொன்று எழுப்ப விரும்புகிறேன். நான் கையெழுத்துப் போட்டதாக ஒருவர் சொன்னதற்கு, " நான் கையெழுத்துப் போடவில்லை " என்று நான் சொன்னேனே தவிர, கையெழுத்துப் போட்டதும் போடாததும் அவ்வளவு முக்கியம் என்ற கருத்தை நான் சொல்லவில்லை.

SRI N. R. THIAGARAJAN : ரொம்ப சந்தோஷம். கையெழுத்துப் போட்டுத்தான் காரியம் ஆகவேண்டும் என்பது இல்லை என்று புரிந்து கொண்டோம். நிதி அமைச்சர் அவர்கள் மதுரைக் கூட்டத்தில் சவால் விடுத்தார்கள் : " நடந்த சம்பவங்கள் விஷயமாக ஒரு ஜட்ஜைக் கொண்டு எல்லாவற்றையும் விசாரித்து யார் குற்றவாளி என்று ருசுவானல் நான் அரசியலிருந்தே விலகிவிடுகிறேன். ஆனல், திரு. அண்ணதுரை அவர்கள் விலகுவாரா ? " என்று கேட்டார்கள். அதற்கு அந்தத் தரப்பிலிருந்து பதில் வரவே இல்லை.

SRI A. V. P. ASAITHAMBI : தேர்தல் வைக்கட்டும்.

MR. SPEAKER : மற்ற அங்கத்தினர்கள் குறுக்கே பேசினல், பேசுகிற அங்கத்தினருடைய நேரம் குறைந்துவிடும்.

SRI N. R. THIAGARAJAN : அங்கத்தினர்கள் சிலர் குறிப்பிட்டவைகளைக் குறித்து நான் தெளிவுபடுத்தவேண்டியது அவசியம் என்று நான் நினைக்கிறேன். கவர்னருடைய உரைக்காக நான் வாழ்த்து தெரிவிக்கிறேன்.

நிலச் சீர்திருத்தம் பற்றி கவர்னர் உரையில் குறிப்பிட்டிருக்கிறார்கள். அது வரவேற்கத்தகுந்தது. ஒருவர் குறிப்பிட்ட அளவு நிலம்தான் வைத்திருக்கலாம், இவ்வளவு நிலம்தான் வைத்திருக்கலாம், இவ்வளவுக்கு மேல் வைத்திருக்கக்கூடாது என்று நிர்ணயம் செய்தாகவேண்டும் என்ற கருத்தை உடையவன் நான். இருந்தாலும் கூட, நிலத்தைப் பங்கிடுவதற்கு முன்பு புத்திசாலித்தனத்தையும் அறிவையும் பங்கிட வேண்டிய நிலை ஏற்படுகிறது. புத்திசாலிகள் அதிகம் இருக்கும் தமிழ்நாடு என்ற நிலை இன்று மாறி தான்தோன்றித்தனமாக யாரும் எப்படியும் செய்யலாம் என்ற நிலை ஏற்பட்டிருக்கிறது. ஆகையால், நிலம், சொத்து முதலியவைகளைப் பங்கிடுவதற்கு முன்பு புத்திசாலித்தனத்தையும் பங்கிட முடியுமா என்பதை ஆராய்ச்சி செய்ய வேண்டுமென்று சர்க்காரை நான் கேட்டுக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

ஆயிரம் கிராமங்களுக்கு அதிகமாக மின்சாரம் கொடுப்பதாகச் சொல்கிறார்கள். அதை நான் வரவேற்கிறேன். பன்னிரண்டு ஆயிரம் கிராமங்களுக்கு மின்சார வசதி என்று இருப்பதில், 7 ஆயிரம் கிராமங்கள் தமிழகத்தில் இருக்கின்றன என்றால், இது வாஸ்தவத்திலேயே பெருமைப்படக்கூடியது. அமெரிக்க நாட்டிலே தேர்தல் சமயத்தில் ஐசன்ஹோவருக்கும் ஸ்டீவன்ஸனுக்கும் போட்டி ஏற்பட்டபோது, ஐசன்ஹோவர் தாம் தேர்தலில் ஜெயிப்பதற்காக, அதிகமான கிராமங்களுக்கு மின்சார வசதி செய்து கொடுத்திருக்கிறேன் என்று கூறினர்களாம். அதிலிருந்து என்ன தெரிகிறது ? அந்த நாட்டிலே கூட மின்சார வசதி இல்லாத கிராமங்கள் இருக்கின்றன என்று தெரிகிறது. ஆகவே அமெரிக்க ஐக்கிய நாட்டைக் காட்டிலும் வெகு வேகமாக சென்னை மாகாணம் மின்சார விஸ்தரிப்பில் முன்னேறிக்கொண்டிருப்பது போற்றக்கூடியது. இன்னும் அதிகமாக மின்சார வசதி இன்னும் பல கிராமங்களுக்குக் கிடைப்பதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்து வரவேண்டும். இந்த வகையில் மின்சார போர்டு இனித் தொடர்ந்து இந்த வகையில் காரியங்கள் செய்வார்கள் என்ற நம்பிக்கையோடு, இந்த நீண்ட நேரம் பேசுவதற்குச் சந்தர்ப்பம் அளித்த சபாநாயகர் அவர்களுக்கு நன்றியைத் தெரிவித்துக் கொண்டு என்னுடைய வார்த்தையை இத்துடன் முடித்துக்கொள்கின்றேன். ஜெய் ஹிந்த்.

12 noon. *SRI D. SUBRAMANIA RAJAKUMAR : கனம் சபாநாயகர் அவர்களே, எனக்கு முன்னல் அம்மையார் அவர்கள் பேசுகையில் அமைச்சர் அவர்கள் நினைத்தால் இன்று அரசியல் தலைவர்கள் விடுதலையாகி சட்டமன்றத்திற்கே வந்திருக்க முடியாது என்று கூறினர்கள், அப்படி ஒரு போக்கு சர்க்காருக்கு வந்தால் ஆட்சிக்கு எப்படிப்பட்ட ஒரு சூழ்நிலை ஏற்படும்

12th February 1958] [Sri D. Subramania Rajakumar]

என்பதை அவர்களுக்குக் கூறிக்கொள்ளவிரும்புகிறேன். அந்தக் கருத்துடன் தான் இன்று திரு. முத்துராமலிங்கத் தேவரை பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் வைத்து இருக்கிறார்களோ என்று தோன்றுகிறது. இப்படிப்பட்ட ஒரு போக்கிலே சர்க்காரின் ஆட்சி போய்க்கொண்டிருக்குமானால் சட்டதிட்டங்களை இவர்கள் நல்லமுறையிலே அமுல் செய்வார்கள் என்று தோன்றவில்லை.

எனது நண்பர் திரு. சசிவர்ணதேவர் அவர்கள் கூறினார்கள். இராமநாதபுரம் ஜில்லாவில் பல பகுதிகள் மிகவும் பிற்போக்காக இருக்கின்றன. முன்பு அந்தப் பகுதி இராமநாதபுரம் ஜமீனையும், சிவகங்கை ஜமீனையும் சேர்ந்து இருந்தது. இப்போது ஜமீன் ஒழிப்பு வந்து 11 வருஷங்கள் ஆகியும் எந்தவிதமான முன்னேற்றமும் அந்தப் பிராந்தியம் அடையவில்லை. அன்று ஜமீன் காலத்தில் அந்தப் பகுதி எந்த நிலையில் இருந்ததோ அதே நிலைமையில்தான் இன்றும் இருந்துகொண்டு வருகிறது. ஜமீன் ஒழிப்பு வந்த பிறகு நாம் எல்லாவகையிலும் முன்னேறுவோம் என்று அந்தப் பிராந்திய மக்கள் நினைத்துக்கொண்டிருந்தார்கள். எந்த வகையான முன்னேற்றமும் வராத காரணத்தால் ஏமாந்து மிகவும் அதிருப்தியுடன் இருக்கிறார்கள் என்பதைக் கூறவிரும்புகிறேன். இராமநாதபுரம் ஜில்லாவில் இவ்வருஷம் கால மழை தவறிய காரணத்தினால் விவசாயம் பாதிக்கப்பட்டிருக்கிறது. அப்படி இருக்கும் சூழ்நிலையில் இன்று சர்க்கார் 58–ம் பசலியில் இருந்து 67–ம் பசலி வரையில் மிகவும் கொடூரமாக மகசூல் ஜப்தி செய்வதன் மூலம் வரி வசூலித்து வருகிறார்கள். அதுமட்டுமல்லாமல் தக்காவி லோன், மற்றும் புயல் லோன் இவைகளை இதே சமயத்தில் வசூல் செய்து வருகிறார்கள். இதை சர்க்கார் அவ்வப்போது வசூலித்துக்கொண்டு வந்திருப்பார்களேயானால் இவ்வளவு பெரிய கஷ்டம் இப்போது விவசாயிகளுக்கு வந்திருக்காது. தேர்தல் வருகிறதே என்ற காரணத்தால் அப்போது go slow policy-ஐ கையாண்டு விட்டு, இப்போது விவசாயிகளைக் கஷ்டப்படுத்தி வரி வசூலிப்பது சரியல்ல. ஆகவே சர்க்கார், அதிகாரிகளுக்கு வரியைத் தவணைகளில் வசூல் செய்யவேண்டும். தக்காவி லோன், புயல் லோன் இவற்றை அடுத்த பசலியில் வசூல் செய்யலாம் என்பதாக உத்தரவு போடவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

ஜமீன் காலங்களில் நெல்லை வாரப்பத்து என்றும், வரியை தீர்வைப் பத்து என்றும் வாங்கி வந்தார்கள். ஆனால் ஜமீன் ஒழிக்கப்பட்ட பின் ஒரே விதமாக தீர்வைப்பத்தாக வசூலிக்காமல், நெல்லை வாரப்பத்திற்கு அதிகமாகவும் தீர்வைப் பத்திற்குக் குறைவாகவும் வசூலித்து வருகிறார்கள். ஆகையால் எல்லா விவசாயிகளுக்கும் ஒரேவிதமாக வசூலிக்க அதாவது ஜமீன் ஒழிப்பு ஏற்பட்ட காலத்திலிருந்து வசூலிக்க வேண்டுமாய் நான் கேட்டுக் கொள்கிறேன்.

மற்றும் செட்டில்மெண்ட் ரேட் 13 அணு வீதம் நிர்ணயம் செய்து இருக்கிறார்கள். ஆனால் சிலயிடங்களில் இரண்டு ரூபாய், நான்கணுவாக வசூலிக்கப்படுகிறது. எல்லாவிடங்களிலும் செட்டில்மெண்டு ரேட்டுப்படி வசூலிக்க வேண்டுமாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன.

மற்றும் பிற்பட்ட இனத்தவர்களுக்கு ஸ்காலர்ஷிப் வந்தும், இதுவரையில் எல்லாக் கல்லூரிகளுக்கும் பணம் வந்து சேரவில்லை. உதாரணமாக மதுரை காலேஜில் பிற்பட்ட மாணவர்களுக்கு வரவேண்டிய தொகை வந்து சேராத காரணத்தால் கல்லூரியிலிருந்து மாணவர்கள் விலக்கப்படுகிறார்கள். இப்போது சிவகெங்கையில் உள்ள ஆர்டியன் காலேஜை எடுத்துக்கொண்டால் அங்குள்ளவர்களில் பெரும்பாலோர் பிற்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர்கள். அவர்களுக்கு இன்னமும் ஸ்காலர்ஷிப் வராது இருக்கிற காரணத்தால் ஹாஸ்டலிலோ, கல்லூரியிலோ அவர்களுக்கு இடமளிக்க முடியாமல் இருக்கிறது. இந்தக் கல்லூரியை நடத்துவதற்கே மிகவும் கஷ்டமாக இருக்கிறது. ஆகையால் பிற்பட்ட வகுப்பு மாணவர்களுக்கு உடனடியாக ஸ்காலர்ஷிப் தொகையில் ஒரு term தொகையாவது உடனடியாக அனுப்ப வேண்டுமாய்க் கேட்டுக்கொள்கிறேன்.

இன்று இராமநாதபுரம் கலவரத்தில் சிவகங்கைத் தாலுக்காவில் போடப்பட்ட வழக்குகள் முன்பு சிவகங்கை கோர்ட்டில் நடந்து வந்தது. இப்போது எல்லா வழக்குகளையும் புதுக்கோட்டைக்கு மாற்றிவிட்டார்கள். அந்த தாலுக்காவிலேயே வழக்குகள் நடந்து கொண்டிருக்கையில் கண்டிஷன்

பைலில் பலர் இருந்தார்கள். இவையெல்லாம் சிறிய வழக்குகள். இதில் ஈடுபட்டுள்ள 100 பேர்களுக்கு மேல் புதுக்கோட்டைக்கு வழக்குகள் மாற்றப் பட்டுவிட்டதால் கண்டிஷன் பைலில் இருந்து வருவது கஷ்டமாக இருக்கிறது. சிவகங்கை தாலுக்கா தலைநகரம் கலவர காலத்தில் அமைதியாக இருந்த பகுதி. ஆகவே இந்த இடத்திற்கே திரும்பவும் அந்தச் சிறிய வழக்குகளை எல்லாம் மாற்றிவிடவேண்டுமாய்க் கேட்டுக்கொள்கிறேன். எனக்கு முன்னால் பேசிய நண்பர் திரு. சோமசுந்தரம் அவர்கள் சொன்னார்கள். கீழத்தூவலில் பாதிக்கப்பட்ட குடும்பத் தலைவர்களுடைய மனைவி மார்களை நேருவிடத்தில் இண்டர்வ்யூ செய்வதற்கு ஒரு மனு அனுப்பினோம். அது நிராகரிக்கப்பட்டுவிட்டது என்றார்கள். ஆனால் சோமசுந்தரம் சொன்ன போது கொலைசெய்யப்பட்ட இமானுவேலினுடைய மனைவியார் வெண்மை ஆடை உடுத்திக்கொண்டிருக்கும்போது இந்தச் சமூகத்தைச் சேர்ந்த பாதிக் கப்பட்ட பெண்கள் ஏன் மற்ற தலைவர்களையோ இதரர்களையோ பார்க்க வேண்டும் என்று சொன்னார்கள். அப்படிக் குறிப்பிட்டுச் சொல்லும்போது அது ஒரு தனிப்பட்ட சமூகத்தின் பெண்களைப் பாதிப்பதாக இருக்கிறது. இன்று முதுகுளத்தூர் கலவரம் நடந்து பல மாதங்கள் ஆகின்றன. வழக்குகள் நடந்து கொண்டிருக்கிறது. ஏதோ துரதிருஷ்டவசமாக இந்தக் கலவரம் நடந்திருக்கிறது. ஆகையால் அதை மீண்டும் மீண்டும் பேசிக்கொண்டு அந்த மனப்பான்மையை வளர்த்துக்கொண்டிருந்தால் மற்ற சமூகத்தார் களுக்கோ மற்றவர்களுக்கோ எந்தவிதமான நலனும் கிடைக்காது. ஆகை யால் நாம் அதைப்பற்றி பேசவேண்டாம் என ஹரிஜன அங்கத்தினர்களைக் கேட்டுக் கொள்கிறேன். அதில் எந்தவித மனவேற்றுமையிருந்தாலும் எல்லாவற்றையும் மறந்து நாம் ஓர் ஒற்றுமை நிலையை அடைவதற்கு பாடுபடவேண்டும்.

கடைசியாக சிவகங்கைப் பிர்க்கா இதுவரையிலும் இன்னும் ப்ளாக் டெவெலெப்மெண்டுடன் சேர்க்கப்படவில்லை. மற்ற பகுதிகளைச் சேர்த்திருப் பதுபோல உடனடியாக மிகவும் பிற்பட்ட இந்தப் பகுதியையும் சேர்க்க வேண்டுமாய்க் கேட்டுக்கொள்கிறேன். இன்று ஜமீன் ஒழிப்புக்குப் பிறகு இந்தப் பகுதியில் முன்பு இப்படிப்பட்ட பிற்போக்கான நிலைமை இருந்ததோ அதே பிற்போக்கு நிலைமை நீடித்துக் கொண்டிருக்கக்கூடாது. ஆகையால் இப்பகுதிகளுக்கு ஒரு தனிப்பட்ட முக்கியத்துவம் அளித்து அங்குள்ள பெரு மக்கள் விவசாயத் துறையிலும், குடிசைத்தொழில் துறையிலும் முன்னேறு வதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எல்லாம் எடுத்துக்கொள்ளவேண்டு மாய் நான் சர்க்காரை மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன். இத்துடன் என் உரையையும் முடித்துக் கொள்கிறேன்.

12-10 p.m. **Sri D. S. AUTHIMOOLAM** : கவர்னர் பெருமானுடைய உரையில் ஒரு சில நல்ல அம்சங்கள் இருந்தபோதிலும், விடுபட்டுப்போன விஷயங்கள் ஜாஸ்தியாக இருக்கின்றன. இதைச் சொல்வதற்கு முன்னால் சட்டசபை இடத்தைப்பற்றி ஒருசில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த சட்ட சபை முன்பு நடந்த இடத்திலிருந்து மாற்றக்கூடாது என்று கம்யூ னிஸ்ட் கட்சியைச் சேர்ந்த ஸ்ரீ கல்யாணசுந்திரம் அவர்கள் ஆட்சேபனை தெரிவித்தார். இந்த கட்டடத்தில் நாம் உட்கார்ந்து கொண்டிருப்பதற்குக் கூட போதிய சௌகரியம் இல்லையென்று நினைக்கிறோம். ஜனநாயக சர்க்காரி னுடைய நடவடிக்கைகளை கவனிப்பதற்கு மக்கள் இம்மாதிரி உட்கார்ந்து பார்க்கவேண்டியிருக்கிறது. பல ஜில்லாக்களிலிருந்து சட்டசபை நடவடிக் கைகளை கவனிப்பதற்காக வருகிறார்கள். அவர்கள் சௌகரியமாக உட் கார்ந்து சட்டசபை நடவடிக்கைகளை கவனிப்பதற்கு தகுந்த வசதியான இடம் இல்லை. பழைய காலத்தில் லெஜிஸ்லேடிவ் கவுன்ஸிலில் இருக்கும்போது ஜில்லாவிற்கு ஒரு பிரதிநிதியாக 40, 50 பேர்கள்தான் கூடுவார்கள். அப் பொழுது பொதுமக்கள் ஒருசிலர்தான் பார்ப்பதற்கு வருவார்கள். ஆனால் இப்பொழுதோ ஏராளமான பேர்கள் வருகிறார்கள். அவர்கள் மேலே உட்கார்ந்து பார்த்தால் முதலில் இருக்கும் பெஞ்சுகளில் உட்கார்ந்திருப்பவர் களுக்குத்தான் நடவடிக்கைகளை கவனிக்கமுடியும், கீழே இருப்பவர்களை நன்றாக கவனிக்கமுடியும். ஆகவே இந்தச் சட்டசபை கூட்டத்தை இங் கிருந்து மாற்றித்தான் ஆகவேண்டும். கடைத்தேங்காயை எடுத்து வழி பிள்ளையாருக்கு உடைப்பதுபோல்தான் சட்டசபை நடத்துவதற்காக ஏற்பட்

12th February 1958] [Sri D. S. Authimoolam]

ஒரு கட்டடத்தை குழந்தைகளுக்கு சினிமா பார்ப்பதற்கு என்று அதை யாருக்கோ கொடுத்திருக்கிறார்கள். இது ஜனநாயக சர்க்காருக்கு புறம்பானது. ஜனநாயக சர்க்காரில் நடக்கும் சட்டசபையை கவனிப்பதற்கு மக்கள் மிகவும் ஆர்வத்துடன் வருகிறார்கள். அவர்கள் சௌகரியமாக பார்ப்பதற்கு வசதி செய்து கொடுக்கவேண்டும். வெய்யில் காலத்தில் ஊட்டிக்குப் போய் அங்கு சட்டசபை நடப்பதற்கு பதிலாக பழைய இடத்திற்கே சென்று அங்கே சௌகரியமாக பொதுமக்கள் பார்ப்பதற்கு வழிசெய்யுங்கள் என்று அரசாங்கத்தை தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன். இங்கே பொது ஜனங்கள் அதுவும் இரண்டு வரிசைக்கு பின்னால் இருப்பவர்கள் உட்கார்ந்து பார்ப்பதற்குக்கூட லாயக்கில்லை. ஏதோ சர்க்கஸ் பார்ப்பதுபோல் எழுந்து எழுந்து பார்ப்பதற்கு முயற்சி செய்கிறார்கள். தெரியாததினால் சத்தம் போடுகிறார்கள். அவர்கள் பேசுகிறவர்களைப் பார்க்கமுடியாமல், அங்கத்தினர்களுடைய பேச்சை மாத்திரம்தான் எங்கோ கேட்பது போல் கேட்கிறார்கள். ஆகவே பொதுஜனங்களின் நன்மைக்காக உடனடியாக நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

மேலும் சர்க்கார் இப்போது நல்ல காரியங்கள் செய்ததில் நம் தமிழ் பாஷையை ஆட்சிமொழியாக்கியது. அதிலும் 1922 அலுவலகங்களிலே பொங்கல் திருநாளன்று தமிழ் பாஷையிலேயே அலுவல்கள் கடிதப் போக்குவரத்து நடக்கவேண்டும் என்பதை அரசாங்கம் துவக்கி வைத்திருக்கிறார்கள். இது நமது அரசாங்கம் செய்த ஒரு நல்ல அம்சமாக இருந்தாலும் தமிழ் நாடு என்று நம் மாநிலத்திற்கு பெயரிட்டிருப்பதாக கவர்னர் பெருமான் உரையில் குறிப்பிடப்படவில்லை. எப்படியாவது இந்த நாடு தமிழ் நாடு என்ற பெயருடன் விளங்கவேண்டும். மற்ற கட்சிக்காரர்களால் பேசப்பட்டு வருகிறதே எங்கே பெயர் அவர்களுக்கு போய் விடப்போகிறதோ என்று ஆட்சியாளர்கள் பயப்படுகிறார்கள். அடுத்த வருஷத்திலாவது இந்த மாகாணத்திற்கு தமிழ் நாடு என்று பெயரிடப்பட வேண்டும். நீங்கள் பயப்படவேண்டியதில்லை. இன்னும் 50 வருஷங்களுக்கு நீங்கள் தான் ஆளப்போகிறீர்கள் என்று எல்லோரும் அறிவார்கள். தமிழ் நாடு என்று சொன்னால் ஏதோ தனி நாடாகி விட்டமாதிரி, ஏதோ பாகிஸ்தான் மாதிரி பிரிந்துவிடுமோ என்று நினைக்கிறார்கள். பாகிஸ்தானை கத்தியைக் காண்பித்து வாங்கியிருக்கிறார்கள். அவர்கள் வாங்கினது சுய ஆட்சி இல்லை. நீங்கள் இன்னும் 50 வருஷங்களுக்கு கட்டாயம் இருக்கப்போகிறீர்கள். ஆகவே நீங்கள் ஒன்றுக்கும் பயப்படக்கூடாது. டில்லியிலும், உலகத்திலே மற்ற பாகங்களிலேயும் " தமிழ் நாடு " என்ற பெயர் சொல்லப்பட்டால், நமக்கெல்லாம் பெருமை அல்லவா. ஆகவே அரசாங்கம் உடனடியாக நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். முக்கியமாக பாஷை விஷயத்திலே கொள்கை வித்தியாசம் இருந்தபோதிலும் சர்க்கார் தாராளமாக தமிழ் தான் எல்லா அலுவல்கங்களிலும் ஆட்சி மொழியாக இருக்கவேண்டும். எல்லா நடவடிக்கைகளும் தமிழில்தான் இருக்கவேண்டும் என்று சர்க்கார் உடனடியாக நடவடிக்கை எடுக்கவேண்டும். நாங்கள் எல்லாம் இங்கிலீஷ் படித்தவர்கள் அல்ல ஆனால் தமிழிலே பேசுவதற்கு வசதி இருப்பதனால் இவ்வளவு பெரிய விவகாரங்களை எல்லாம் பேசுகிறோம். ஆகவே ஆட்சியாளர் இந்த ஆட்சிமொழியை எப்படியாவது உடனடியாக எல்லா இடங்களிலும் கொண்டுவரவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த இந்தி பாஷையை இப்பொழுது கொண்டுவரப் போவதில்லை. எவ்வளவோ செய்யவேண்டிய காரியங்கள். கட்சி நலத்திற்காக இந்த பாஷை பிரச்னையில் இறங்கிவிடாதீர்கள். ராஜ்ய சர்க்கார் தமிழுக்கு ஊக்கம் கொடுக்கவேண்டி தமிழை அமுலாக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இப்பொழுது சுதந்திர திராவிடம் அடையவேண்டுமென்று பேசுகிறார்கள் தனித் தமிழ் நாடு வேண்டுமென்று ஒரு கட்சி ஆரம்பித்திருக்கிறார்கள். மாகாண சுயாட்சி வருவதற்கு பாடுபடவேண்டும். தமிழ்நாட்டிலிருந்து மத்திய சர்க்காருக்கு கோடிக்கணக்கான ரூபாய் வரிப்பணமாக கொடுக்கப்பட்டுவருகிறது. ஆனால் அந்த அளவிற்கு நமது சர்க்காருக்கு பங்கு கிடைப்பதில்லை. இதை அதிகமாக்குவதற்கு ஆட்சியாளர் முயற்சி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். சமீப காலத்தில் திருச்சியில் நடந்த ஒரு நிகழ்ச்சியில், சர்க்கார் திராவிட கழகத்தின் மீது சர்க்கார்

[Sri D. S. Authimoolam] [12th February 1958

எடுத்துக்கொண்ட கொள்கை ஓரளவிற்கு வழவழாவாகத்தான் இருக்கிறது. சர்க்கார் இந்த விஷயத்தில் கண்டிப்பாக இல்லாததினுல்தான் இந்த நிகழ்ச்சி ஏற்பட்டிருக்கிறது. பொதுவாக போலீஸ் மந்திரி அவர்கள் கண்டிப்பான கொள்கையை அனுசரிக்காததினுல்தான் ஸ்ரீ சீனிவாச்சாச்சாரியாருக்கு கத்திக்குத்து ஏற்பட்டிருக்கிறது. பின்னுல் அவர்களின் உதவி எங்கு வேண்டி இருக்குமோ என்று கருதி நடப்பது சரியல்ல. இதற்கு முன்னமே சி.ஐ.டி.-களை வைத்து முன் ஜாக்கிரதையாக இருந்திருந்தால் இந்த நிகழ்ச்சி ஏற்பட்டிருக்காது. தேர்தல் காலத்திலே எங்கே பெரியார் அவர்களின் உதவி கிடைக்காதோ என்று நீங்கள் பயப்படவேண்டியதில்லை. அப்படி நீங்கள் திராவிடக் கழகத்தின் மீது நடவடிக்கை எடுத்தாலும் அவர் நிச்சயமாக உங்களுக்குத்தான் உதவி செய்வார்.

நேரம் அதிகமாகி விட்டது. ஆகவே ஊர் சமாசாரங்களை சொல்வதை விட்டு விட்டு, நான் சொல்லவேண்டிய முக்கிய சமாசாரங்களைச் சுருக்கமாக சொல்ல விரும்புகிறேன். (சிரிப்பு.)

சிறு நீர்ப்பாசனத் திட்டங்கள் சம்பந்தமாகக் குறிப்பிடும்போது, '**Special attention is being paid to the Minor Irrigation Programme including the de-silting of tank and the utilization of underground water sources**" என்று கவர்னர் அவர்கள் உரையில் சொல்லியிருக்கிறுர்கள். இது ரொம்பவும் வரவேற்கத்தக்க விஷயம். எங்கள் ஜில்லாவில் சிறு நீர்ப்பாசனத் திட்டங்களை நிறைவேற்றுவதற்கான வாய்ப்புகள் இருக்கின்றன. துரதிர்ஷ்டவசமாக நான் சுயேச்சை அங்கத்தினுக இருக்கிறேன் என்பதைப் பாராமல் சர்க்கார் நான் சொல்வதைக் கவனிக்கவேண்டும். எங்கள் ஜில்லாவில் ராமநதி அணைக்கட்டுத்திட்டம் என்ற திட்டம் இருக்கிறது. அது ஒரு கோடி ரூபாய் செலவாகக்கூடிய திட்டம். அதை நிறைவேற்றினுல் 5,000 ஏக்கர் நஞ்சை நிலங்கள் பயனடையக்கூடும்; அந்த 5,000 ஏக்கர் நஞ்சை நிலங்களில் இரு போகம் சாகுபடி செய்யும்படியான வசதி ஏற்படும். இரண்டாவதாக, சிவசைலம் என்ற இடத்தில் கருணை நதி இருக்கிறது. சர்க்காருடைய கருணையால் அந்தக் கருணை நதியின் மூலம் சிறு நீர்ப்பாசனத் திட்டம் ஒன்று நிறைவேற்றப்படட்டும். கருணை நதித் திட்டம் நிறைவேற்றப்பட்டால் 7,000 ஏக்கர் நஞ்சை நிலங்கள் அதனுல் பயனடைய முடியும். இந்தத் திட்டங்கள் சம்பந்தமாக நன்முக சிபாரிசு செய்யப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. இதற்காக நான் ஒன்றும் முயற்சி எடுத்துக்கொள்ளவில்லை. அதுவாக வெற்றியடைந்துகொண்டேயிருக்கிறது. நான் முயற்சி எடுத்துக்கொண்டிருந்தாலும் அமைச்சர்கள் ஒரு மாதிரியாகப் பார்க்கலாம். (சிரிப்பு) அதுவாக நடந்து கொண்டிருக்கிறது, ஆகவே எங்கள் ஜில்லாவில் இரண்டு அருமையான சிறு நீர்ப்பாசனத் திட்டங்கள் இருக்கின்றன. இப்படிப்பட்ட திட்டங்களை நிறைவேற்றுவதற்கான வாய்ப்புகள் தமிழ்நாட்டில் பல இடங்களிலும் இருக்கக்கூடும். அவைகளை சர்க்கார் நிறைவேற்றி, கிராம மக்களின் வாழ்க்கைத் தரத்தையும் பொருளாதார நிலையையும் உயர்த்த வேண்டுமென்று சொல்லிக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

12-23 p.m. **SRI P. U. SHANMUGAM**: கனம் தலைவர் அவர்களே, இரண்டு நாட்களாக கவர்னர் அவர்களுடைய உரையின் மீது நடக்கும் விவாதத்தில் சபை அங்கத்தினர்கள் தங்கள் கருத்துக்களைப் பரிமாறிக்கொள்ளும்போது தங்கள் தங்கள் நாவன்மைக்குத் தக்கவாறு தூற்றியும் போற்றியும் கருத்துக்களைத் தெரிவித்திருக்கிறுர்கள். பொதுவாக கவர்னர் அவர்களுடைய உரையில் சுவை இல்லாவிட்டாலும் பல அங்கத்தினர்கள் விவாதத்தில் சுவையைக் கலந்திருக்கிறுர்கள். அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். ஆளும் கட்சி அங்கத்தினர்கள் நிகழ்த்திய உரைகளுக்கும் திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் நான் நன்றி தெரிவித்துக்கொள்கிறேன். அதற்கான காரணத்தைக் கூற விரும்புகிறேன். நாங்கள், திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்கள், இங்கே 15 பேர்கள் இருக்கிறேம் ஆளும் கட்சியில் 105 பேர்கள் இருக்கிறுர்கள். ஆகவே எங்களில் 5—6 பேர்களுக்குத்தான் இங்கே இந்த விவாதத்தில் பேசுவதற்கு வாய்ப்புக் கிடைக்கும். ஜனவரி 6-ம் தேதி சென்னையில் நடந்த நாங்கள் 5—6 பேர்கள் மட்டும் பேசினுல், எங்களுடைய பேச்சுக்கள் சட்டசபை நடவடிக்கைப்

12th February 1958] [Sri P. U. Shanmugam]

புத்தகத்தில் இருக்கும் இடமே தெரியாது. அவைகளைக் கண்டுபிடிக்க முடியாமல் பொது மக்கள் கஷ்டப்படுவார்கள். இங்கே பேசிய ஆளும் கட்சி அங்கத்தினர்கள் அத்தனை பேரும் அந்த சம்பவத்தைப்பற்றிப் பேசியிருக்கிறார்கள். சட்டசபை நடவடிக்கைப் புத்தகத்தில் அதை பொது மக்கள் எளிதில் கண்டுபிடித்துக்கொள்ளும்படி அவர்கள் செய்ததற்காகத்தான் அவர்களுக்கு நான் நன்றி தெரிவித்தேன். பொதுவாக ஆளும் கட்சியைச் சேர்ந்த அங்கத்தினர்கள் தாங்கள் பேசும்போது இரு தவறான கருத்துக்களைத் தெரிவித்துவிட்டனர் என்பதையும் குறிப்பிட விரும்புகிறேன். ஒன்று, ராஜாஜீயை திராவிட முன்னேற்றக் கழகத்தினராகிய நாங்கள் எங்கள் தலைவராக ஏற்றுக்கொண்டுவிட்டோம் என்று சொன்னார்கள். இரண்டாவது, ராஜாஜீயின் கொள்கைகளை நாங்கள் ஆதரிக்கிறோம் என்று சொன்னார்கள். அந்த இரண்டு விஷயங்களுமே தவறானவை. இதை நான் திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் தெரிவித்துக்கொள்கிறேன். ராஜாஜீயை நாங்கள் எங்கள் தலைவராக ஏற்றுக்கொள்ளவில்லை. ராஜாஜீயின் கொள்கைகளை நாங்கள் ஏற்றுக்கொண்டுவிட்டோம் என்பதும் தவறு. ராஜாஜி தான் எங்கள் கொள்கையாகிய ஹிந்தி எதிர்ப்பை ஏற்றுக்கொண்டிருக்கிறார். எங்கள் தோட்டத்தில் மலர்ந்த மல்லிகையை ராஜாஜி எடுத்துவைத்துக்கொண்டு "இந்த மலரின் மணம் நன்றாக இருக்கிறது" என்று சொல்கிறார். அடுத்து ஒன்று சொல்வேன் சபையிலுள்ள காங்கிரஸ் அன்பர்கள் சிலர் ராஜாஜீக்கு எதிராகப் பேசும்போது, அவருக்கும் ஸ்ரீ காமராஜுக்கும் விரோதம் இருக்கிறதென்றும், அதனால் அவர் ஹிந்தி எதிர்ப்பைக் கிளப்பிவிடுகிறார் என்றும் கூறினார்கள். ராஜாஜீக்கு அப்படிப்பட்ட அற்பப் புத்தி கிடையாது என்று நான் சொல்வேன். இந்த சபையிலுள்ள அவருடைய பெரும் படத்தின் கீழ் "**Great are his head and heart**" என்று எழுதப்பட்டிருக்கிறது. அப்பேர்ப்பட்ட ராஜாஜீயை சிறிய புத்திபடையவர் என்று அவர்கள் கேவலமாகச் சொல்லிவிட்டார்கள். இதற்காக நான் மிகவும் வருத்தப்படுகிறேன். இது குறித்து, திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் என் ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன். இன்னொன்று சொல்ல விரும்புகிறேன். ஜனவரி 6-ம் தேதியன்று சென்னையில் பண்டித நேருவுக்கு ஏற்பட்ட இகழ்ச்சியைப்பற்றிக் குறிப்பிட்ட நீலகிரி அங்கத்தினர், பண்டித நேருவின் மீது செருப்பு வீசப்பட்டதாகவும், அதற்கு திராவிட முன்னேற்றக் கழகம்தான் பொறுப்பு என்றும் கூறினார். அது உண்மையிலேயே அசம்பாவிதமான காரியம்தான். அதைப் பற்றி இந்தச் சட்டமன்றத்தில் சொல்லியிருக்க வேண்டியதில்லை. அதற்காக திராவிட முன்னேற்றக் கழகத்தவராகிய நாங்கள் வருத்தப்படுகிறோம்; வேதனைப்படுகிறோம். இன்னொரு உண்மையைச் சொல்வேன். நானும் அறிஞர் அண்ணாவும் சிறையிலிருந்தபோது அண்ணாவிடம் "நேரு அவர்கள் இங்கே வந்தபோது அசம்பாவிதங்கள் நேர்ந்துவிட்டன" என்பதைச் சொன்னபோது, அவருடைய கண்களில் நீர் ததும்பியது. அப்போது அவர் "நேருவும் ஒரு மக்கள் தலைவர் தானே! அவருக்கு இப்படி நேர்ந்ததே! இப்படி அசம்பாவிதமான காரியத்தைச் செய்துவிட்டார்களே! ஒரு மக்கள் தலைவரிடம் இப்படி நடந்துகொண்டார்களே! நம்மிடமும் இவ்வாறுதானே நடந்து கொள்வார்கள்! நான் நேருவுக்குக் கருப்புக் கொடி காட்டச் சொன்னேன். யார் யாரோ ஏதேதோ செய்துவிட்டார்களே!" என்று வருந்தினார். ஜனவரி 3-ம் தேதியன்று பொதுக் கூட்டத்தை அனுமதித்திருந்தால், ஜனவரி 6-ம் தேதியன்று எந்த விதமான அசம்பாவிதமும் நடந்திருக்காது; பொதுக் கூட்டத்தில், அண்ணா அவர்கள் எந்த விதமான பலாத்காரச் செயலுக்கும், அசம்பாவிதமான காரியங்களுக்கும், மக்களைத் தூண்டிவிட்டிருக்கமாட்டார்கள். சிறையிலிருந்து திரும்பிய பிறகு திருவல்லிக்கேணிக் கடற்கரையில் நடந்த பொதுக்கூட்டத்தில் அண்ணா அவர்கள் கூட்டம் முடிந்தவுடன் அமைதியாக கலைந்து போகவேண்டுமென்று பொதுமக்களைக் கேட்டுக்கொண்டார்கள். அதன் படியே பொது மக்கள் அமைதியாகக் கலைந்து சென்றதை ஆட்சியாளர்கள் அறிந்திருக்கக்கூடும்.

மொழிப் பிரச்னையை எடுத்துக்கொண்டால், ஹிந்தி இந்த நாட்டின் ஆட்சி மொழியாக வரலாம் என்ற கொள்கையை திரு. அண்ணாதுரை ஏற்றுக்கொண்டார் என்று சிலரும், அப்படி இல்லை என்று வேறு சிலரும் சொன்னார்கள். திரு. அண்ணாதுரை ஒருபோதும் ஹிந்தி இந்த நாட்டின் ஆட்சி மொழியாக ஆகவேண்டுமென்று சொன்னதில்லை. இது சம்பந்தமாக நடந்த மந்திரி

[Sri P. U. Shanmugam] [12th February 1958

சபைக் கமிட்டிக் கூட்டத்தைப்பற்றிக் குறிப்பிடும்போது, எங்கள் கட்சியைப் பொறுத்த வரையில், "மணப்பெண்ணேயே எனக்குப் பிடிக்கவில்லை ; எனக் குத் திருமணமே வேண்டாம்" என்று சொல்பவனிடம் 'திருமணத் தேதியை எப்போது வைக்கலாம் ? தரலி எப்படி வாங்கலாம் ?' என்று கேட்டது போல் இருக்கிறது என்று கூறுவேன். ஹிந்தியே வேண்டாம் என்று கூறும் திராவிட முன்னேற்றக் கழகத்தவரிடம் 'ஹிந்தியை எப்போது ஆட்சி மொழியாகக் கொண்டு வரலாம் ?' என்று எப்படிக் கேட்டறிவது ? கனம் நண்பர் திரு. ஆசைத்தம்பி சொன்னதுபோல் "நாங்கள், திராவிட முன்னேற்றக் கழகத்தவர்கள், இந்தியாவையே ஒரு நாடாக ஏற்றுக்கொள்ளாதவர்கள். இந்தியா ஒரு உப கண்டம்". அப்படியிருக்கும்போது ஹிந்திக்கு எவ்வாறு விட்டுக்கொடுத்திருப்போம் ? ஹிந்தி 1965-ல் நாட்டின் ஆட்சி மொழியாக ஆகவேண்டுமா என்பதைத் தீர்மானிப்பதற்காக அமைச்சரவை கூடவில்லை. 1965-க்குப் பிறகும் ஆங்கிலம் நீடிக்க வேண்டுமா என்பதுபற்றித் தீர்மானிப் பதற்காகத்தான் அது கூடியது ; ஆங்கிலம் நீடிக்கவேண்டும் என்ற தீர்மானத் திற்கு ஒத்துக்கொண்ட அண்ணு அவர்கள் ஹிந்திக்கும் ஒத்துக்கொண்டார்கள் என்று தவருகச் சொல்லப்படுகிறது. இப்படிச் சொல்வது 'விருந்துக்கு அழைத்து மருந்து கொடுப்பது' போல இருக்கிறது ; எங்களை வருந்தி யழைத்து வலுச்சண்டைக்கிழுக்கிருர்கள், ஆட்சியாளர்கள் என்றும் சொல் வேன். மொழி சம்பந்தமாக எங்கள் கொள்கை திட்ட வட்டமாக அறிவிக் கப்பட்டிருக்கிறது என்று திராவிட முன்னேற்றக் கழகத்தினர் சார்பில் சொல் லிக்கொள்கிறேன். ஹிந்தி ஆட்சி மொழியாகப் புகுத்தப்பட்டால் தமிழகத் தில் அதற்கு எதிர்ப்பு எரிமலையாகக் கிளம்பும் என்று நாங்கள், திராவிட முன்னேற்றக் கழகத்தினர் பல முறைகள் சொல்லியிருக்கிறோம்.

தமிழ் நாட்டின் அவல நிலை குறித்துப்பேசும்போது, கனம் அங்கத்தினர் திரு. தியாகராஜன் தமிழ் நாட்டுக்குச் சொந்தமான ஆறு கிடையாதென்றும், அது கிடையாதென்றும், இது கிடையாதென்றும் பலவாருகப் பேசினுர். ஆனல் அவர் பேசும்போது ஒன்று தோன்றியது. தமிழர்களிடம் பகுத்தறிவு கூடவா இல்லை ? பகுத்தறிவுகூடவா தமிழர்களுக்குச் சொந்தமாக இல்லை ? அதை அவர் விட்டுவிட்டிருக்கிருரா என்று கேட்க விரும்புகிறேன். அவர் இன்னென்றும் சொன்னுர். அதாவது, வடநாட்டில் பெண்கள் ஆபாசமாக இருந்தனர் என்று குறிப்பிட்டு 'தென்னுட்டில் இருக்கும் பெண்களைப் பாருங் கள்' என்று சொல்லி முடித்துவிட்டார்.

அது எதைக் காட்டுகிறது என்றல், வடநாடு தாழ்ந்திருப்பதைக் காட்ட வில்லை. வடக்கே கலாசாரம், நாகரீகம், பண்பாடு இவைகள் மிக குறைவு என்பதைத்தான் அது எடுத்துக் காட்டுகிறது. தெற்கே நாகரீகம், பண்பாடு, கலாசாரம் இவைகள் இயற்கையாகவே வளர்ந்திருக்கிறது. அவைகள், இந்த சர்க்கார் வளர்த்தது அல்ல. இன்னெரு அம்மையார் அவர்கள் பேசும் போது குறிப்பிட்டார்கள், எங்கள் அமைச்சர் எண்ணி இருந்தால் நீங்கள் சிறைச்சாலையை விட்டு வெளியே வந்திருக்க முடியுமா என்று. நாங்கள் சிறையில் இருந்தபோது அண்ணு அவர்களும் நாங்களும் பேசிக்கொண் டிருக்கும்போது அவர்கள் சொன்னுர்கள், சிறைச்சாலையில் இன்னும் ஆறு மாதங்கள் விருந்தாளிகளாக இருக்க நேரிடும் என்று சொன்னுர்கள். காரணம் என்னவென்று தெரியாது, அரசாங்கம் எங்களை விடுதலை செய்தது. அதற்கு மேல் வைத்துக்கொள்ள சர்க்காருக்கு வக்கில்லை என்றுதான் நான் சொல்வேன். அப்படிச் செய்திருக்கலாமே. ஒரு நாள் சம்பவத்தில் ஏதோ அசம்பாவிதங்கள் நடந்ததாகச் சொன்னுர்கள். பஸ்கள் கொளுத்தப்பட்டது என்றெல்லாம் எதை எதையோ சொன்னுர்கள். எங்கள் பொதுச் செயலாளர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் ஒரு அறிக்கை விட்டிருந்தார்கள், அதோடு ஒரு பொதுக்கூட்டத்தில் வைத்து அண்ணு அவர்களே சொல்லியிருக்கிருர்கள், பஸ்களைக் கொளுத்தியவர்கள் காலிகள் என்று, பகிரங்கமாக கண்டித்தார்கள் அதைப்பற்றி. எனக்கு முன்பு பேசிய அம்மையார் சொன்னுர்கள், ஆளவந் தார் கேஸில் ஆயிரம் பேர்கள் கூடினுர்கள் என்றல் அது ஆளவந்தாரை ஆதரிப்பதாகுமா என்று கேட்டார்கள். நேரு வந்தால் லட்சக்கணக்கில் மக்கள் கூடுகிருர்களே, அதுவும் ஒரு கொலைக்கேஸ் கேட்பதற்கு கூடுவது போலாகுமா என்று எனக்கு சந்தேகமாயிருக்கிறது. இந்த நாட்டை ஆள் வோர் இரண்டு நபர்களைக் கொலை செய்திருக்கிருர்கள், சென்ற மாதம் 6-ம் தேதியன்று. இதற்கு ஒரு பகிரங்க விசாரணை தேவையில்லையா ? அண்ணு

12th February 1958] [Sri P. U. Shanmugam]

அவர்கள் அடிபட்டவர்களை ஆஸ்பத்திரியில் போய் பார்த்ததும், இறந்தவர்களின் பிரேத ஊர்வலத்தில் கலந்து கொண்டதும் பற்றி அமைச்சர் ஒருவர் சென்னையில் ஒரு கூட்டம் ஒன்றில் பேசியதை நான் பத்திரிகைகளில் பார்த்தேன். நான் கேட்கிறேன், உங்களுக்கு மனித அபிமானம் கூட இல்லையா என்று ? அடிபட்டவர்களுக்கு ஆறுதல் சொல்வதும், கொலை செய்யப்பட்டவர்களின் அனுதாப ஊர்வலத்திலும் பங்கு கொள்வது மனிதத்தன்மைதான். அன்று ஜெர்மனியின் சர்வாதிகாரியாக இருந்த ஹிட்லர் கூட ரெட் க்ராஸ் போட்ட ஒரு கப்பலையும் சுட்டதில்லை, அவைகளை வீழ்த்தியதில்லை, அவனுக்குக் கூட மனிதாபிமானம் இருந்தது. ஆனால் இன்றைய தினம் இங்கிருக்கும் ஆட்சியாளர்களுக்கோ அந்த மனிதாபிமானம் ஏனோ இல்லாமல் போய் விட்டது. இறந்து போனவர்களுக்காக ஒரு சிறு அனுதாபம் தெரிவித்தார்களா என்று கேட்கிறேன். நீங்கள் வேண்டுமானாலும் அடித்தது நியாயம் என்று சொல்லலாம். உங்கள் வாதப்படி அது சரியாக இருக்கலாம். அன்று நடந்த சம்பவம் குறித்து ஒரு பகிரங்க விசாரணை வையுங்கள். திராவிட முன்னேற்றக் கழகம் அதற்கு தயாராகயிருக்கிறது. திராவிட முன்னேற்றக் கழகத்தார் செய்தது அசம்பாவிதம் என்று ஒரு முடிவு வருமானால் அதற்காக திராவிட முன்னேற்றக் கழகம் எந்த தண்டனையையும் ஏற்றுக்கொள்ள தயார். அடுத்து, நீலகிரியில் சட்டமன்றம் வரவில்லையே என்று ஆத்திரத்தில் அவ்வங்கத்தினர் ஏதேதோ பேசிவிட்டதைக் கண்டு வருந்துகிறேன். அங்கு சட்டமன்றம் கூடாதது குறித்து அதை அரசியல் சூதாட்டம் என்று குறிப்பிட்டார்கள். அரசியல் சூதாட்ட பந்தயக் காய்கள் நாங்களல்ல. அடுத்து இன்னொருவர் கூறினார், தாலியைப்பற்றி. பெண்களுக்கு தாலி கட்டுவதைக் கூட சுயமரியாதைக்காரர்கள் சம்மதிக்கமாட்டேன் என்கிறார்களே என்று, நெருக்கடி ஏற்படும்போது அது உதவுமே, அதை விற்று விடலாமே என்றார்கள். அந்தோ பரிதாபம். தமிழ் பெண்கள் தாலியை விற்கும் பரிதாபத்தை அப்பரிதாப நிலை ஏற்பட வேண்டுமா ? அப்படி அவர் விரும்பினால் சர்க்கார் அவருக்கு தனிப்பட்ட முறையில் அனுமதி கொடுக்கட்டும், ஒன்றல்ல ஒன்பது தாலி கட்டுவதற்கு. தாலியை விற்பதற்காக தாலி கட்டும் பண்பாடு தமிழ் நாட்டில் கிடையாது. சட்டமன்ற தலைவர் அவர்களே, உங்கள் மூலம் நான் ஆட்சியாளர்களை கேட்டுக்கொள்கிறேன், பகிரங்க விசாரணை தேவை, என்று திராவிட முன்னேற்றக் கழகச் சார்பில் நான் வலியுறுத்த விரும்புகிறேன். திராவிட முன்னேற்றக் கழகம், யாருக்காக வேண்டியும் தனது கொள்கைகளை விட்டுக் கொடுத்தது கிடையாது. எங்கள் கொள்கையை பிறர் ஏற்றுக் கொள்ளும்போது அதைப் பாராட்டுகிறோம். திராவிட முன்னேற்றக் கழகம் என்றும் பிறருடைய கொள்கைகளைத் தேடிக்கொண்டு ஓடியது கிடையாது என்று எங்கள் கழகச் சார்பில் கூறிக்கொண்டு எனது உரையை முடித்துக் கொள்கிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சபாநாயகர் அவர்களே, இந்த விவாதத்தில் நான் குறுக்கிடுவதற்கு நான் அனுமதி பெற்றது இந்த விவாதத்தில் கலந்துகொண்டு பேசிய சில அங்கத்தினர்கள் போலீஸின் நடவடிக்கைகள் பற்றியும் அவைகளின் விளைவாக ஏற்பட்ட சில நிகழ்ச்சிகளைப் பற்றியும் குறிப்பிட்டார்கள், குறை கூறினார்கள். ஆகவே அதைப்பற்றி சில விளக்கம் கூறவும், நிலைமையைக் எடுத்துக் கூறவும்தான் நான் சில வார்த்தைகள் பேச முற்படுகிறேன். முதுகுளத்தூர் பிரதிநிதி கனம் அங்கத்தினர் அவர்கள் அங்கு முன்பு நடந்த சம்பவங்களையொட்டி மீண்டும் போலீஸ் தொல்லை இருக்கிறது என்றும் சொன்னார்கள். இன்னும் கைது செய்யப்படவேண்டியவர்கள் கைது செய்யப்படவில்லை என்றும் ஏன் தாமதம் ஏற்படுகிறது என்றும் கேட்டார்கள். போலீஸார் அதிகத் தொல்லை கொடுப்பதாகவும் கூறினார்கள். முசிரி சம்பவத்தைக் குறிப்பிட்டு கனம் அங்கத்தினர் அவர்கள் அங்கு மக்கள் கொடூரமாக நடத்தப்பட்டும் ஒரு சிலர் மீது போதிய நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளவில்லை என்று சொன்னார்கள். ஆனால் திரு. ஆதிமூலம் அவர்கள் பேசும்போது யாராயிருந்தாலும் தாட்சண்யம் இன்றி போலீஸார் தக்க நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளவேண்டுமென்று சொன்னார்கள். அவ்வாறு நடைபெற்றுக்கொண்டுதான் வருகிறது. ஆனால் சிலருக்கு இதிலே வருத்தம் ஏற்படுகிறது. எவ்வளவு காலம் சிறையில் வைக்கவேண்டுமென்று ஏற்படுகிறதோ அவ்வளவு காலம் 12-35 p.m.

[Sri M. Bhaktavatsalam] [12th February 1958

வைக்கப்படுகின்றார்கள். அதற்கு மேல் அவசியம் இல்லை என்றால் அவர்கள் விடுதலை செய்யப்படுகிறார்கள். இதில் சவால் விடுவதற்கு ஒன்றும் இல்லை. அரசாங்கத்தை பொறுத்தமட்டில் யாராயினும் சரி, மக்களை பாதுகாக்க வேண்டும் என்ற ஒரே நோக்கத்தோடு, குற்றம் செய்கிறவர்கள் மீது தாட்சன்யம் இல்லாமல் நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டு தான் வருகிறோம். முதுகுளத்தூர் சம்பவங்கள் பற்றி குறிப்பிடுகையில் என் முதலிலே போலீஸ் துப்பு பார்க்கும் நாய்களைக் கொண்டுவிட்டு குற்றம் செய்கிறவர்களை கண்டுபிடிக்கவில்லை என்று கேட்டார்கள். குற்றம் செய்தவர்களின் பெயர் தெரியாமல், ஆனால் இந்த கேசில் தகவல் தெரியாமல் இருந்தால் நாய்களின் உதவி கோரப்படுகிறது. தகவல் தெரிந்துவிட்டது. ஆனால் ஆட்கள்தான் அகப்படவில்லை. ஆட்கள் அகப்படாததற்கு, இதுவரையில் பிடிபடாததற்கு போலீஸ் மீதும் அரசாங்கத்தின் மீதும் குற்றம் சாட்டினார்கள். சீக்கிரத்தில் அவர்கள் பிடிபடவில்லையே என்று சொல்வதை நான் வரவேற்கிறேன். ஆனால் குற்றம் செய்து விட்டு மறைந்திருக்கிறவர்கள் மீது குற்றம் உண்டா இல்லையா என்று கோர்ட்டார் தீர்ப்புச் சொல்கிற வரையில் அத்தகையோருக்கு நான் இடம் கொடுக்கக்கூடாது என்ற மனப்பான்மை மக்களுக்கு வரவேண்டும். ஆனால் சில அரசியல் வாதிகள் அவ்வாறு மறைந்திருக்கிறவர்களுக்கு பாதுகாப்புக் கொடுத்துக்கொண்டிருக்கிறார்கள் என்ற தகவல் எனக்கு கிடைத்திருக்கிறது. இருப்பினும் போலீஸ் நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டுதான் வருகிறார்கள். பொது அமைதியை நிலை நாட்டுவது, மக்களை பாதுகாப்பது இவைகளுக்கு வேண்டிய நடவடிக்கைகள் எல்லாம் எடுக்கப்பட்டு தான் வருகிறது. அதுபற்றி குறை கூறினால் அதற்கு அர்த்தமே இல்லை என்றுதான் சொல்வேன். முன்பிருந்த போலீஸ் படை பலம் குறைக்கப்பட்டிருக்கிறது என்பது அங்கத்தினர்களுக்கு தெரியும். ஆனால் சிலர் கூறுகிறார்கள், படை பலத்தைக் குறைத்து விடாதீர்கள் எங்கள் நிலை கவலைக்குள்ளாகும் என்று சொல்கிறார்கள். ஆனால் மக்கள் பாதுகாப்பிற்கு வேண்டிய அளவு ஏற்பாடு செய்துகொண்டுவருகிறோம். எதிர்கட்சியில் உள்ள அங்கத்தினர் சுப்பிரமணிய ராஜா அவர்கள் பேசியபோது சொன்னார்கள், பழையதெல்லாம் போகட்டும், இனி சமாதானத்தை நிலை நாட்டி மக்கள் நல் வாழ்க்கை வாழ ஒன்றுபட்டு பாடுபட வேண்டுமென்று சொன்னார்கள். அந்த மனப்பான்மையை நான் பெரிதும் வரவேற்றுகிறேன். அதுதான் அரசாங்கத்தின் கருத்துமாகும். எல்லோரும் சேர்ந்து அந்தப் பிராந்தியத்தில் உள்ள நிலையை மாற்றி மக்கள் அனைவரும் கவலையின்றி சேர்ந்து நல் வாழ்வு வாழ, அதற்குரிய வகையில் அரசாங்கம் கவனம் செலுத்தி வருகிறது. இதற்கு, எதிர்க்கட்சிகள் தங்கள் ஒத்துழைப்பை அளிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். முசுரி சம்பவங்களைப் பற்றிக் குறிப்பிட்ட அங்கத்தினர் அவர்களுக்கு சொல்கிறேன், என்னிடம் தகவல் வந்தவுடன் அதற்கு வேண்டிய நடவடிக்கைகள் உயர்
12-35 p.m. தர அதிகாரிகளைக் கொண்டு எடுத்துக் கொள்ளப்பட்டுத்தான் வருகிறது. இதில் அனாவசியமாக கவலை படுவதற்கும் ஆவேசம் கொள்வதற்கும் அவசியமில்லை. அரசாங்கம் வேண்டிய நடவடிக்கைகளை தயங்காமல் எடுத்துக் கொள்ளும் என்று அங்கத்தினர் அவர்களுக்கு சொல்லிக் கொள்கிறேன். முக்கியமாக இந்த விவாதத்தில் குறிப்பிடப்பட்டது, என் பகுதியில் உள்ள கட்சியினராலும், எதிர்க்கட்சியினராலும் குறிப்பிடப்பட்டதும், நான் குறிப்பிட விரும்புவதும், சமீபத்தில் நம்முடைய பிரதம மந்திரி சென்னைக்கு வந்த சமயத்தில் நடந்த சில நிகழ்ச்சிகளைப் பற்றி, அப்பொழுது போலீஸ் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகள்பற்றி நான் விரிவாக குறிப்பிட விரும்புகிறேன். எல்லாம் கருப்புக் கொடி காட்டவேண்டும் என்று முடிவு எடுத்ததின் விளைவாக நடந்ததுதான். திராவிட முன்னேற்றக் கழகத்தினர் பிரதம மந்திரி அவர்கள் வரும்பொழுது கருப்புக் கொடி காட்டவேண்டும் என்றும், அதிலும் அவர் வருகின்ற சமயத்தில் விமான நிலையத்தில் மட்டுமல்ல, எந்தெந்த இடங்களில் எல்லாம் பிரதம மந்திரி அவர்கள் கலந்து கொள்கிறார்களோ அங்கெல்லாம் இரண்டு நாட்களும் கருப்புக் கொடி காட்டவேண்டுமென்று முடிவு செய்திருந்தார்கள் திராவிட முன்னேற்ற கழகத்தினர். இந்த முடிவின் விளைவாகத்தான் பல நிகழ்ச்சிகளும் நடந்தன, என்பதை தெளிவாக சொல்ல விரும்புகிறேன். இந்த மாதிரி கருப்புக் கொடி காட்டுவது அரசாங்கத்திற்கு ஒன்றும் புதியதல்ல. இதை தடுக்க வேண்டும் என்ற எண்ணமும் அரசாங்கத்திற்கு கிடையாது.

12th February 1958] [Sri M. Bhaktavatsalam]

இரண்டாவது கூட்டம் தடை செய்யப்பட்டது என்று புகார் சொல்லப்பட்டது. அதற்கு கனம் அங்கத்தினர் சர்தார் வேதரத்தினம் பிள்ளை அவர்கள் நன்ருக விளக்கிஞர்கள். இந்த கூட்டத்தை தடுப்பதற்காக தடை உத்தரவு போடவில்லை. ஏற்கெனவே சென்னையில் தடையுத்தரவு இருந்து வந்தது. போலீஸாரின் அனுமதியின்றி கூட்டங்கள் நடத்தக் கூடாது என்ற உத்தரவு சென்னை நகரில் இருந்து வந்தது. அதே சமயத்தில் இவர்களும் கூட்டத்திற்கு அனுமதி கோரிஞர்கள். அந்த அனுமதிதான் மறுக்கப்பட்டது. இவ்விதம் தான் அனுமதி மறுக்கப்பட்டது என்று திராவிட முன்னேற்ற கழகத்தினர் ஒப்புக் கொள்ளப் போவதில்லை. இருந்தும் இதை மீறி நடத்துவதற்கு முற்பட்டார்கள். அது கூட மூன்ரும் தேதி மாலை நடத்தப் போகிற கூட்டத்திற்கு தடை உத்தரவு போட்டிருப்பதை முன்கூட்டியே மக்கள் எல்லோருக்கும் சொல்லி யிருக்கலாமே என்றும் அவ்விதம் செய்திருந்தால் மக்கள் அன்று மாலை சேர்ந்து வந்திருக்க மாட்டார்களே என்றும் சொன்ஞர்கள். கூட்டத்திற்கு அனுமதி மறுக்கப்பட்டிருக்கிறது என்றுள்ள விபரம் இரண்டு நாட்களுக்கு முன்னமேயே அவர்களுக்கு தெரிவிக்கப்பட்டது. அவர்களுடைய திராவிட முன்னேற்ற கழகப் பத்திரிகையில் இதை வெளிபடுத்தி யிருந்தார்கள். அதில் என்ன சொல்லி யிருந்தார்கள் என்ருல் இவ்விதமாக போலீஸார் கூட்டத்திற்கு அனுமதி தர மறுத்து விட்டார்கள். நாங்கள் அதை மீறி கூட்டமும் நடத்தப் போகிறேரும், அந்த கூட்டத்திற்கு எல்லோரும் வாருங்கள் என்று அந்த பத்திரிகையில் விளம்பரப்படுத்தி யிருக்கிருர்கள். ஆகவே கூட்டத்திற்கு தடையிருப்பதைப்பற்றி மக்களுக்கு தெரிவிக்கவில்லை என்ற புகாருக்கு ஆதாரம் இல்லை என்பதை இந்த சமயத்தில் சொல்ல விரும்புகிறேன். இரண்டாவதாக இவர்கள் ஒரு நாள் மாத்திரம் கூட்டத்திற்கு அனுமதி கேட்கவில்லை, தொடர்ந்தாற்போல் மூன்று நாட்களுக்கும் அதாவது மூன்று நான்கு, ஐந்து இம்மூன்று நாட்களுக்கும் சென்னையில் பல பகுதிகளிலும் கூட்டம் போடப் போகிறேரும், அதற்கு அனுமதி வேண்டுமென்று கேட்டார்கள். அதற்கு அனுமதி மறுக்கப்பட்டது. இப்போது முதலில் கூட்டம் எதற்காகப் போடப்பட்டது, ஏன் அனுமதி மறுக்கப்பட்டது என்பதை தெளிவாக்க விரும்புகிறேன். ஏதோ பிரதம மந்திரி அவர்கள் யாரையோ குறைவாக பேசிஞர்கள், அது தவறு என்றும் அதை கண்டிக்க வேண்டும் என்றும் சொன்ஞர்கள். அது வேறு விஷயம். பிரதம மந்திரி அவர்களை கண்டிப்பதற்கு தான் கூட்டம் போடப் போகிறேரும் என்றிருந்தால் கூட்டத்திற்கு அனுமதி கொடுத்திருப்பார்கள் என்பதை இப்பொழுது சொல்ல விரும்புகிறேன். இந்த கூட்டத்தை கூட்டுவிக்காமல் தடை செய்ய வேண்டுமென்ற நோக்கம் அதிகாரிகளுக்கு கிடையாது. கூட்டம் போட வேண்டியதின் நோக்கம் பிரதம மந்திரி அவர்களுக்கு எதிராக கருப்புக் கொடி காட்ட முடிவு செய்திருக்கிறேரும், அதை விளக்குவதற்காக, அந்த இயக்கத்தை வளர்த்துவதற்காக கூட்டம் போட வேண்டியிருக்கிறது என்று சொன்ஞர்கள். கருப்புக் கொடி காட்டுவது என்றிருந்தால் கருப்புக்கொடி காட்டின பிறகு மக்களுக்கு எடுத்து விளக்கலாம். இதை அவ்விதம் எடுத்துக்கொள்வதற்கில்லை. ஏதோ ஆள் சேர்ப்பதற்குதான் கூட்டம், அதில் எத்தனை பேர்கள் வேண்டுமாஞலும் சேர்ந்து கொள்ளட்டும். கருப்புக் கொடி காட்டுவது மட்டுமல்ல நடப்பது. கருப்புக்கொடி காட்டிய பிறகு ஏற்பட்ட சம்பவங்களை நாம் பார்த்தோம். கருப்புக் கொடி காட்ட வேண்டுமென்ருல் இவ்விதமான சம்பவங்கள் எல்லாம் நடைபெற வேண்டும் என்ற ஒரு நோக்கம்தான் அவர்களுக்கு இருந்தது. அந்த நோக்கத்தை இன்று வேண்டுமாஞல் அவர்கள் மறுக்கலாம். அதிகாரிகள் கூட்டத்திற்கு அனுமதி தர மறுத்ததற்கு காரணம் கருப்புக் கொடி காட்ட முற்பட்டால் அது பலாத்காரத்தில் கொண்டுபோய்விடும், இதை மூன்று இடங்களில் கூட்டம் போட்டு சொல்லுவதாஞல் மேலும் பலாத்கார சம்பவங்கள் நடக்கக்கூடும் என்று கருதிதான் அதிகாரிகள் அனுமதி தர மறுத்தார்கள். அதுவும் அமைதியான முறையில் இருக்கவேண்டும் என்று ஏற்கெனவே தடையிருக்கின்ற சமயத்தில் இந்த கூட்டங்களுக்கு அனுமதி கொடுப்பது கூடாது என்றுதான் மறுக்கப்பட்டது. இப்போது பல அங்கத்தினர்கள் பேசுகிருர்கள், ஜனநாயகத்தைப்பற்றி பேசுகிருர்கள், மனித உரிமை, பேச்சுரிமை இவைகளைப் பற்றி யெல்லாம் பேசுகிருர்கள். நான் கேட்கிறேன், ஜனநாயகம் என்ருல் என்ன வேண்டுமாஞலும் செய்யலாம்

[Sri M. Bhaktavatsalam] [12th February 1958

என்பதுதான் ஜனநாயகமா ? மனித உரிமை என்றால் கல்லெறிவதும் மனித உரிமை தானா ? பலாத்காரத்திற்கு தூண்டிவிடுவது எல்லாம் உரிமை தானா ? பேச்சுரிமை என்றால் என்ன வேண்டுமானாலும் எவ்வித மும் பேசலாம் என்று சொல்லப்படவில்லை..........

**Sri K. ANBAZHAGAN :** Sir, on a point of order, பலாத்காரத் தையும் கல்லெறிவதையும் நாங்கள் தான் தூண்டிவிட்டோம் என்ற கருத் தில் அமைச்சர் அவர்கள் கூறுகிறார்கள். இது ஒழுங்கு தானா என்பதை கேட்க விரும்புகிறேன்.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** இதில் பாயிண்ட் ஆப் ஆர்டர் ஒன்றுமில்லை என்பதை முதலில் கனம் அங்கத்தினர் அவர்களுக்கு தெரிவித்துக் கொள்கிறேன். நான் குறிப்பிட்டது கருப்புக் கொடி காட்டு வது என்றால் அது பலாத்காரத்திற்கு தயாராய் இருப்பது போல்தான் ஆகும். அதாவது கருப்புக் கொடி காட்டுவது என்றால் பலாத்காரத்திற்கும் தயாராய் இருக்கவேண்டும். திராவிட முன்னேற்றக் கழகத்திலுள்ள கனம் அங்கத்தினர் ஒருவர் சொன்னார்கள், நாங்கள் முனையவில்லை, நாங் கள் முனைந்திருந்தால் நேரு திரும்பி போயிருக்க மாட்டார் என்று குறிப் பிட்டார்கள். இந்த மனப்பான்மையைத்தான் இங்கு இருக்கின்ற அங்கத் தினர்கள் அனைவரும் கொஞ்சம் சிந்தித்து பார்க்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

SOME MEMBERS rose.

**Sri M. P. SARATHI :** ஸார் பாயிண்ட் ஆப் ஆர்டர், நான்தான் அதை குறிப்பிட்டேன். அமைச்சர் அவர்கள் நினைப்பதுபோன்று நாங்கள் இல்லை. அவ்விதம் அமைச்சர் அவர்கள் நினைத்திருந்தால் நாங்கள் அவ்விதம் செய்வோம் என்று அமைச்சர் அவர்கள் நினைப்பது தவறு என் பதைத்தான் நான் குறிப்பிட்டேன்.

**Mr. SPEAKER :** கனம் அங்கத்தினர்கள் அடிக்கடி அவசிய மில்லாமல் பாயிண்ட் ஆப் ஆர்டர் எழுப்பக்கூடாது என்று கேட்டுக் கொள்கிறேன். அவ்விதம் அடிக்கடி குறுக்கிடுவது நல்லது அல்ல என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** அவர்களுடைய கருத்து எது வாயிருந்தாலும் அவர்களின் உள் மனப்பான்மை எவ்விதம் இருக்கின்றது என்பதை தான் பார்க்கும்படி வேண்டுகிறேன். ஏதோ நாங்கள் முனைந் திருந்தால் கொன்றிப்போம், நாங்கள் முனைந்திருந்தால் அவர்களை போக விட்டிருக்க மாட்டோம் என்று சொல்லுவது அவர்களுடைய உள் எண் ணத்தை, அவர்களுடைய மனப்பான்மையை தெளிவாக காட்டுகிறது. . .

**Sri K. ANBAZHAGAN :** ஸர், பாயிண்ட் ஆப் ஆர்டர், உள் எண்ணம் கற்பித்து இந்த சபையில் அங்கத்தினர்கள் பேசுவது கூடாது என்று தலைவர் அவர்களே, நீங்கள் முன்பு கூறியிருக்கிறீர்கள். அவ்விதமிருக் கும்போது இப்போது உள் எண்ணம் கற்பித்து அமைச்சர் அவர்கள் பேசு வதை நீங்கள் அனுமதிக்கிறீர்களா என்பதை தங்களிடம் கேட்க ஆசைப்படு கிறேன்.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** உள் எண்ணத்தை எடுத்துச் சொல்வதில் தவறு ஒன்றும் இல்லை என்பதை எடுத்துச் சொல்ல விரும்பு கிறேன். இந்த மாதிரி ஒரு மனப்பான்மை இருக்கிறது. என்பதை கனம் அங்கத்தினர்கள் எல்லோரும் கவனித்துப் பார்க்கவேண்டும் என்றுதான் இதை சொல்லுகிறேன். ஆகவேதான் கருப்புக் கொடி காட்டுவது என்பது நிச்சயமாக பலாத்காரத்தில் கொண்டுபோய்விடும் என்று நினைத்தோம். மற்றொன்றும் சொன்னார்கள், எங்கள் கட்சி தலைவர்களை கைது செய்யாமல் இருந்திருந்தால், எங்கள் கூட்டத்தை தடை செய்யாமல் இருந்திருந்தால் இவ் விதமெல்லாம் நடந்திருக்காது என்று சொன்னார்கள். பஸ் கொளுத்தப்பட் டது, கல் வீசப்பட்டது, மக்கள் பல இன்னல்களுக்குள்ளானார்கள். எங்கள்

12th February 1958] [Sri M. Bhaktavatsalam]

கூட்டத்திற்கு தடை விதிக்காமல் இருந்திருந்தால் வேண்டாம் என்று சொல்லியிருப்போம் என்று சொன்ஞர்கள். இதிலிருந்து இப்போது நடந்தவைகளுக்கு எல்லாம் நீங்கள் வேண்டாம் என்று சொல்லவில்லை என்று தெரிகிறது. உங்களுக்கு நிச்சயமாக இதில் ஏதோ தொடர்பு இருக்கிறது என்பது வெளியாகிறது. இதை அவர்களே, திராவிட முன் னேற்ற கழகத்தினரே ஒப்புக்கொள்கிருர்கள். கல்லெறிந்தவர்கள் காலி கள், அக்கிரமங்கள் செய்தவர்கள் எல்லாம் காலிகள் என்று இவர்கள் சொன்ஞர்கள். அறிஞர் அண்ணு அவர்கள் சிறையில் வைத்து இந்த செய்தியைக் கேட்டபோது கண்ணீர் விட்டதாக அறிந்தேன். அதை நான் பாராட்டுகிறேன். ஆனல் நாங்கள் வெளியில் இருந்தால் இவைகள் எல் லாம் நடந்திருக்காது என்று சொன்ஞல் இவர்களுக்கும் இந்த சம்பவங் களுக்கும் ஏதோ தொடர்பு அல்லது சொந்தம் இருக்கிறது என்பது தெரி கிறது. அவர்களை அறியாமலே அவர்கள் இதை ஒத்துக்கொள்கிருர்கள்.

SRI C. N. ANNADURAI : 'ஆன் எ பாயிண்ட் ஆப் பர்ஸனல் எக்ஸ் பளனேஷன்,' நாங்கள் கைது செய்யப்படாமல் இருந்தால் இப்படிப்பட்ட அசம்பாவிதங்கள் நடைபெற்றிருக்காது என்று சொன்னதிலிருந்து, ஏதோ எங்களுக்கும் அவர்களுக்கும் தொடர்பு இருக்கிறது என்பதை நாங்கள் ஒப் புக் கொண்டதாகச் சொன்ஞர்கள். அவர்களும் மனித உள்ளம் படைத் தவர்கள்தான். நாங்கள் கைது செய்யப்படாமலிருந்திருந்தால் அவர் களுக்கு இந்த மாதிரியான மிருக உணர்ச்சி வந்திருக்காது என்பதை மனதில் வைத்துக் கொண்டுதான் சொன்னேம்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அரசியல் இயக்கத்திலே ஈடுபட்டிருக்கிறவர்கள், அதுவும் எதிர் கட்சியில் இருப்பவர்கள் கைது செய்யப் படுவதற்கும் தயாராக இருக்க வேண்டும். காங்கிரஸ் கட்சியில் இருப்பவர்களும் தயாராயிருக்க வேண்டியவர்கள்தான் என்பதை எடுத்துக்காட்ட விரும்பு கிறேன்.

SOME MEMBERS rose.

MR. SPEAKER : இங்கே இப்படி குறுக்கே பேசுவது கூடாது. உங்கள் சான்ஸ் வரும்போது நீங்களோ, உங்கள் தலைவர்களோ பேசலாம்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மற்ருெரு—கடைசியாகப் பேசிய—அங்கத்தினர்கள் அவர்கள் குறிப்பிட்டார். அவர்கள் குறிப்பிட்டது நான் சொன்ன சில கருத்துக்களைப் பற்றியது. திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர்கள் விடுதலையான பிறகு ஹாஸ்பிடலில் போய்ப் பார்த்தார்கள். அவர்கள் அடிப்பட்டவர்களைப் போய்ப்பார்ப்பதில் யாருக்கும் ஆட்சேபணையில்லை. என்ருலும், அக்கட்சியைச் சேர்ந்தவர்கள் ஒரு சிலர் கலவரங்களில் கலந்து கொண்டிருக்கவேண்டுமென்று சொன்னேன். மனித உள்ளம் படைத் தவர்கள் போய்ப் பார்த்ததில் ஆச்சரியப்படவில்லை. பார்ப்பதை வேண்டா மென்று சொல்லவில்லை. அடிப்பட்டவர்களைப் போய்ப் பார்க்க வேண்டும். அவர்களுக்கு வைத்தியம் செய்யவேண்டும். அரசாங்கமும் அவர்களுக்குச் சிகிச்சை செய்தது. ஆனல், ராமநாதபுரம் கலவரம் நடந்ததே, அதில் பலர் கஷ்டப்பட்டார்களே, இன்னும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிருர்களே, இந்த திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர்கள் யாராவது போய்ப் பார்த்து ஆறுதல் சொன்ஞர்களா. . . . . . . .

SRI C. N. ANNADURAI : நமது மாநில முதலமைச்சர் அவர்களே அங்கு போகாமல் இருக்கும்போது நாங்கள் எப்படிப் போவது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மனித இதயம் என்று சொன்ஞர்கள். திராவிட முன்னேற்றக்கட்சித் தலைவர்களுக்கு மனித இதயம் உண்டு, அந்தக் காரணத்தால் ஹாஸ்பிடலில் போய்ப் பார்த்தார்கள் என்று சொன்ஞர்கள். அது மாத்திரமல்ல. குற்றம் சாட்டப்பட்டு சிறைபட்டவர் களுக்கு ஜாமீன் விடுதலைவாங்க ஏற்பாடு செய்துகொண்டிருக்கிருர்கள். இந்தக் கலவரத்தில் அவதிப்பட்டவர்கள், குற்றம் சாட்டப்பட்டு சிறை பட்டவர்களில் ஒரு சிலர் அந்தக் கட்சிக்காரர்கள் இருக்கிருர்களென்பதனல்தானே பெயில் வாங்க ஏற்பாடு செய்கிருர்கள். * * *

[12th February 1958

**SRI C. N. ANNADURAI** : குற்றம் சாட்டப்பட்டவர்கள் கோர்ட்டில் நிரூபிக்கப்படுவதற்கு முன்னால் அவர்கள் அதற்குச் சம்பந்தப்பட்டவர்க ளல்ல என்று நிரூபிக்கும் பொறுப்பு யாருக்கும் உண்டு. அந்த வகை யிலே யாரும் செய்யலாம்.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : போலீஸ் கோர்ட்டில் யாரையாவது சார்ஜ் பண்ணி நடவடிக்கை எடுப்பதற்கு ஏற்பாடு செய்யலாம். அவர்கள் குற்றவாளிகளாக இருக்கலாம். அல்லது இல்லாமல் இருக்கலாம். அதை பற்றி கோர்ட் முடிவு செய்யும் வரைஒன்றும் சொல்ல முடியாது. வழக்கு வரப்போகிறதற்கு முன்னால் பெயில் வாங்கிக் கொடுக்கப் போகிறார்க ளென்றால் ஒவ்வொரு கோர்ட்டுகளிலும் எந்தெந்த நிரபராதிகள்மீது குற்றம் சாட்டியிருக்கிறார்கள் என்பதை ஆராய்ந்து பார்த்து அவர்களுக்கு உதவி செய் வதற்காக அவர்கள் கட்சியில் ஏதாவது ஒரு நிரந்தர கமிட்டி வைத்திருக்கிறார் களா என்று கேட்கிறேன். ஒரு சிலர் தங்களைச் சேர்ந்தவர்கள், அவர்களுக்குப் பாதுகாப்புக் கொடுக்கவேண்டும், உதவி செய்யவேண்டும் என்ற நோக்கத் தோடு போனார்கள். அந்த நோக்கத்தோடு போனார்களே தவிர எல்லோ ருக்கும் உதவி செய்யவேண்டுமென்ற நோக்கத்தோடு போகவில்லை. அந் தக் கருத்திலே சொன்னேன்.

**SRI K. ANBAZHAGAN** : தலைவர் அவர்களே, பெயில் தருவதற்காகச் சென்றதைப் பற்றி மந்திரி அவர்கள் குறிப்பிட்டார்கள். இந்த வழக்கு களில் சம்பந்தப்படுத்தப்பட்டவர்கள் கலகம் நடந்த இடத்திலே யாரும் பிடிக்கப்படவில்லை. கலகம் நடந்த பிறகுதான் பிடிக்கப்பட்டார்கள் என்ப பதை இங்கே சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

**MR. SPEAKER** : **I cannot understand how hon. Members can discuss like this while the Hon. Minister is speaking. The hon. Member can raise all his points in his address as the leader of his group can raise them. I cannot allow hon. Members to speak while the Hon. Minister is speaking. This is my ruling.**

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : திராவிடக் கழகத் தலை வர்கள் அன்று 3-ம் தேதி கைது செய்யப்பட்டதைப் பற்றிச் சொன்னார்கள். சட்டத்தை மீறி விட்டதாகக்கூறி தலைவர்களைக் கைது செய்து விட்டார்கள் என்று கேள்விப் பட்டவுடனே, அதனால்தான் ஆத்திரம் ஏற்பட்டு இப்பேர்ப்பட்ட அசம்பாவிதங்கள் நடந்தன என்ற முறையில் சொன்னார்கள். நான் சொல்ல விரும்புகிறேன், திருவல்லிக்கேணியில் திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர்கள் கைது செய்யப்படும் முன்பே தெருவில் கல் பிரயோகம் ஆரம்பிக்கப்பட்டது. அங்கே கூட்டம் நடத்தப் போகிறோம் என்று சொன்ன தால் மக்கள் வந்திருந்தார்கள். அதற்காக வந்திருந்தது கூட்டம். ஆனால் அவர்கள் கடற்கரையில் அனுமதிக்கப்படவில்லை. பெரும்பாலும் திருவல்லிக்கேணி பைக்கிராப்ட்ஸ் ரோடில் நின்றிருந்தார்கள். கூட்டம் இல்லை என்று சொன்னதும் கல் போட ஆரம்பித்தார்கள். அவர்கள் கற் களைக் கொண்டு வந்திருந்தார்கள். பைக்கிராப்ட்ஸ் ரோடில் கல் கொட்டி வைக்கப்படவில்லை. துணிப் பையில் போட்டு கட்டிக் கொண்டு அந்தக் கற்களை எறிந்தார்கள். திராவிட முன்னேற்றக் கட்சித் தலைவர்கள் தடை செய்யப்பட்ட நிகழ்ச்சி முறையைப் பற்றிக் குறிப்பிட விரும்புகிறேன். இவ் வாறு அந்த பலாத்காரம் 3-ம் தேதியே தொடங்கின. 3-ம் தேதியே பஸ்களில் கற்களைப் போட்டார்கள். 3-ம் தேதியே ஹோட்டல்கள் மேல் கற்களை போட்டார்கள். கடைகள் மேல் கற்கள் போடப்பட்டு நாசம் விளை விக்கப்பட்டது. அம்மாதிரி வந்தவர்கள் தயாராக கற்களை எடுத்துக் கொண்டு வந்திருந்தார்கள்.

அதே மாதிரி மீனம்பாக்கம் விமான நிலையத்திலும் கருப்புக் கொடி காட்ட வந்தார்கள். லட்சோப லட்சம் அல்ல. சில ஆயிரம் பேர்கள் இருக் கலாம். பத்திரிகைகள் வேண்டுமானால் லட்சோப லட்சம் என்று எழுதலாம். எங்கள் மதிப்பீடு 3,000 பேர்கள் (ஒரு குரல் : எண்ணிப் பார்த்தீர்

12th February 1958] [Sri M. Bhaktavatsalam]

களா ?) நீங்கள் எண்ணிப் பார்த்திருக்கலாம் லட்சம் என்று. இவ்வாறு வந்தவர்கள் நின்றுகொண்டிருந்தார்கள். பிரதமர் கார் போயிற்று. போனதும் கருப்புக் கொடியை எடுத்துக் காட்டினுர்கள். பின் என்ன நடந்தது. கருப்புக் கொடி காட்டியபோது ஒன்றும் நடக்கவில்லை. லத்தி சார்ஜும் நடக்கவில்லை. கல்லை வீசி எறிந்தார்கள். பிரதமர் கார் போனதும் அதன்மீது வீச வேண்டுமென்ற நோக்கத்தோடு வைத்திருந்தவர்கள். அப்போது முடியவில்லை. பின்னுல் நடந்தது. செங்கல்பட்டு டி.எஸ்.பி. கார் போய்க் கொண்டிருந்தது. அதில் அவரே இருந்தார். செயிண்ட் தாமஸ் மவுண்ட் ஆஸ்பத்திரி பக்கம் கல் வீசத் தொடங்கினுர்கள். இன்னும் பல பேருக்கு அடி பட்டது. கற்களைத் தயாராக வைத்திருந்தார்கள். கற்களை எறிந்தவர்கள் வேறு, கருப்புக் கொடி காட்டியவர்கள் வேறு என்றுல் அதைக் கோர்ட்டில் நிரூபிக்க முடியும். கருப்புக் கொடி காட்டுவதும் கல் விழுவதும் சேர்ந்து நடந்தது. கருப்புக் கொடி காட்டிவிட்டுப் போகவில்லை. கருப்புக் கொடி காட்ட ஆரம்பித்தால் அது பலாத்காரத்தில் கொண்டுவிடும் என்று எங்களுக்குத் தெரியும். அதற்காகத்தான் கூட்டம் கூடுவதற்கு அனுமதிக்கவில்லை. ஏதோ தீர்மானம் போட்டுவிட்டோம் என்று சொன்னுர்கள். நாகர்கோவிலில் தீர்மானம் போட்டுவிட்டோம் என்று சொன்னுர்கள். தீர்மானம் போட்டதால் நடத்தவேண்டுமென்று சொன்னுர்கள். பெரியார் இயக்கம் ஆரம்பித்து 3,000 பேர் சிறைக்குப் போய்விட்டார்கள். நாமும் ஏதாவது செய்யவேண்டுமென்றுதான் இந்த கருப்புக் கொடி காட்டுவதற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். வேறு ஒன்றுமில்லை. அதனுல்தான் இந்த விளைவெல்லாம் ஏற்பட்டது என்பது என்னுடைய கருத்து. என்னுடைய கருத்து மட்டுமல்ல, பெரும்பாலோருடைய கருத்தும் அதுவே. இந்த மன்றத்திற்கு அப்பாலுள்ள பொதுமக்களும் அதை ஒப்புக்கொள்ளுவார்கள். தி. மு. கழகத்தினர்களுக்கு ஆத்திரம் வந்தது எதனுல் என்பதை சற்று ஆராயவேண்டும். என்ன தவறு செய்யப்பட்டது ? யாரையோ நேருஜி குறை கூறினுர்களாம். ஆடு நனைகிறது என்று ஓநாய் கண்ணீர் விட்டதாக ஒரு அங்கத்தினர் சொன்னுர்கள். பனைமரத்தில் தேள் கொட்டியதைப் பார்த்துக்கொண்டிருப்பவருக்கு நெறி கட்டியதாம். ஒப்பற்ற தென்னுட்டுத் தலைவர்களை நேரு அவர்கள் குறை கூறிவிட்டாராம். என்ன குறை கூறினுர் ? அவர் சொன்னது என்ன ? கனம் அங்கத்தினர்கள் கொஞ்சம் கவனிக்கவேண்டுமென்று நான் அவர்களை கேட்டுக்கொள்ளுகிறேன். பிரதம மந்திரி அவர்கள் சொன்னது இதுதான். **"Eminent people whom I respect and whose advice I take, were becoming frightfully excited and hysterical."** தென் இந்தியர்களைப் பற்றி எனக்கு அதிக மதிப்புண்டு. அவர்களுடைய யோசனையை கேட்கிறேன். அவர்கள் இப்பொழுது ஆத்திரப்படுகிறுர்கள். **hysterical excited** என்று சொன்னுர். அவர் மற்றென்றும் சொன்னுர் : **It was utter nonsense to imagine that the Hindi speaking North is bearing upon the South. The people who imagine this are like Don Quixote.**

Sri C. N. ANNADURAI : "டான் க்விக்ஸாட்" என்பது ஆங்கிலத்திலே இருக்கிறது. அது ஒரு இலக்கிய கதையிலே வருகிற பெயர். அது எதைக் குறிப்பிடுகிறது என்பதை அமைச்சர் அவர்கள் விளக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

The Hon. Sri M. BHAKTAVATSALAM : தி.மு.க. தலைவர் அவர்களுக்குத் தெரியும். மற்றும் அநேகம் பேர்களுக்கும் தெரியும். மற்றவர்களுக்கு அறிவு இல்லை என்பதை நான் ஒப்புக்கொள்ளமுடியாது. இதற்காக ஆத்திரப்பட்டு கருப்புக்கொடி காட்டி அவரை திரும்பிப்போ என்று கோஷமிடுவது சரியல்ல. நான் மட்டும் இதைச் சொல்லவில்லை. தி.மு.க. அங்கத்தினர்கள் சட்ட சபையில் பேசுவதைப்பற்றி நான் சொல்லவில்லை. ஏனென்றுல் சட்ட சபையில் சபாநாயகர் ஜாக்கிரதையாக பார்த்துக்கொள்ளுவார். ஆனுல் அவர்கள் வெளியிலே மிகவும் கீழ்த்தரமாக பேசுவது எனக்குத் தெரியாதது அல்ல. (குறுக்கீடு.)

[12th February 1958

MR. SPEAKER : Order, Order, let the Hon. Minister continue.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அந்தப் பத்திரிகைகளெல்லாம் அவர்களுக்கு துணைபோகின்ற பத்திரிகைகள். நான் இந்த சந்தர்ப்பத்தில் அந்தப்பத்திரிகைகளைப்பற்றி சொல்ல விரும்புகிறேன். நான் மதுரைக் கூட்டத்தில் சொன்னது " கார் மீது கல்லை போட்டார்கள். கல்லைப் போடுவது காலித்தனம். காலித்தனத்தை வைத்து ஒரு கட்சி கட்டினால் அந்த கட்சி நிலைக்காது. கல்லைப் போட்டவர்கள் அரசாங்கம் ஒழியவேண்டும், அரசாங்கம் விழவேண்டும் என்று நினைப்பவர்கள். காலிகளுக்கு எந்த அரசாங்கம்தான் பிடிக்கும்? திருடர்களுக்கும் கொள்ளைக்காரர்களுக்கும் போலீஸைக் கண்டால் பிடிக்காது. போலீஸ் ஒழிய வேண்டும்மென்று அவர்கள் சொல்லுகிறார்கள். அதேசமயத்தில் போலீஸ் ஸ்டேஷனை அதிகமாக ஏற்படுத்தவேண்டுமென்று என்னிடம் மக்கள் கேட்கிறார்கள். கல்லைப்போடுவது மிகவும் சுலபம். சிறுகுழந்தைகள் கூட வேடிக்கையாக காரின்மீது கல்லைப்போடலாம்." நான் இம்மாதிரி கல்லைப்போட்டவர்களை குறிப்பிட்டுச் சொன்னேன். ஆனால் அதைத் திரித்து அந்தப் பத்திரிகைகள். '**He characterised the opposition lunatics, decoits and hooligan.**' என்று நான் சொன்னதாக எழுதியிருந்தன. நான் அவர்களுக்கு இந்தப் பத்திரிகைகளை நம்பவேண்டாம் என்று சொல்ல விரும்புகிறேன். அந்தப் பத்திரிகைகளை நம்பினால் அவர்கள் போற்றப்படுவார்கள். இவ்வாறு தி.மு.க. தலைவர்கள் வெளியிலே பேசுகிற பேச்சு தெரியாதது அல்ல.

SRI K. ANBAZHAGAN : இப்படி பேசுவதை பத்திரிகைகளில் பார்த்தீர்களா அல்லது நேரில் கேட்டீர்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எங்களுக்கு அதிகார பூர்வமாக வருகிறது. இல்லையென்று சொன்னால் திருத்திக்கொள்ளுகிறேன். இனிமேலாவது திருத்திக்கொள்ளவேண்டும். உயர்ந்த தரத்தில் பேசவேண்டுமென்று தி.மு.க. அங்கத்தினர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். எதைவேண்டுமானாலும் வாய்க்கு வந்ததை பேசிவிடலாம். அது சுலபம். ஆனால் அப்படி கீழ்த்தரமாகப் பேசுவது ஒரு கட்சிக்கு அழகு அல்ல என்பதை நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். தி.மு.க. தலைவர்களும், அங்கத்தினர்களும், அவர்கள் பத்திரிகைகளும் ராஜாஜியைப்பற்றி எழுதியதை மறந்திருக்க முடியுமா ? ராஜாஜியும் மறந்துவிடமுடியுமா ? (குறுக்கீடு.) நான் முன்பு எழுதியதைச் சொல்லுகிறேன். பிரதம மந்திரி என்ன தவறுதலாக சொல்லிவிட்டார்கள் ? ஆத்திரம் கொள்ளுவதற்கு காரணம் என்ன ? ராஜாஜியைப்பற்றி எழுதியதற்காக யாரும் அப்பொழுது ஆத்திரம் கொள்ளவில்லை ? அரசியலில் வந்தால் இம்மாதிரி திட்டுக்கு தயாராகத்தான் இருக்கவேண்டும். நான்கு ஆண்டுகளுக்கு முன்பு ஹைதராபாத்தில் காங்கிரஸ் மகாசபை நடந்தது. அப்பொழுது ஆந்திரப் பிரிவினை வரப்போகும் சமயம். மொழிவாரிப் பிரிவினையைப்பற்றி விவாதம் நடந்தது. அப்பொழுது ராஜாஜி அவர்கள் துணிந்து அது " டிரைபல் ஐடியா " என்று சொன்னார்கள். தமிழில் " காட்டு மிராண்டித் தனம் " என்று அதை மொழிபெயர்த்தார்களாம். அவர் கருத்தை பலமாகச் சொன்னார். அதனால் யாரும் வீரிட்டு எழுந்து ஆத்திரம் கொள்ளவில்லை. அதற்காக கருப்புக் கொடி காட்டவில்லை. ஒரு இயக்கத்தை ஆரம்பிக்கவில்லை.

SRI C. N. ANNADURAI : ராஜாஜி அவர்கள் அந்தக் காலத்தில் மொழிவாரியாக ராஜ்யங்களைப் பிரிப்பது " டிரைபல் ஐடியா " என்று சொன்னதற்காக அவர் ஆந்திராவிற்குச் சென்றபொழுது அவருக்கு பலமான எதிர்ப்புகளும் கருப்புக் கொடியும் காட்டப்பட்டன.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஆந்திராவைப்பற்றி நான் சொல்லவில்லை. ராஜாஜி அவர்கள் அவ்வாறு " டிரைபல் ஐடியா " என்று சொன்னபோது தி.மு.க.வினர் ஆத்திரம் கொள்ளவில்லை. அவர்கள் அதை ஒப்புக்கொண்டார்கள். நம்மூரில் நமக்குள்ளே

12th February 1958] [Sri M. Bhaktavatsalam]

எதுவேண்டுமானாலும் கேட்டுக் கொள்ளலாம், பேசிக் கொள்ளலாம், வட நாட்டிலிருந்து வரும் ஒருவர் பேசுவது கூடாது என்ற கருத்து ஆபாசமான கருத்து.

நேருஜி அவர்கள் பெரியாரைப்பற்றி சொன்னதைப் படிக்கிறேன் : **" This language of murder is a language which will lead one either to the prison or to the lunatic asylum because society cannot tolerate that language. No civilised State will put up with deliberate insults to its flag and its Constitution. If anyone as the leader of the Diravida Khazhagam or its followers do not like our flag or the Constitution they are welcome to Back up and go out of India to any country they like."**

நான் இது விஷயமாக என்னுடைய கருத்தைச் சொல்லுகிறேன். என் கட்சியின் சார்பாகவும் சொல்லக்கூடும். அரசாங்கத்தின் சார்பாகவும் சொல்லக்கூடும். (குறுக்கீடு.)

MR. SPEAKER : Order, Order, let the Hon. Minister continue.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஜாதியை ஒழிப்பதற்காக பிராமணர்களைக் கொல்லவேண்டுமென்று சொன்னது தவறுதல் இல்லை என்று தி.மு.க. தலைவர்கள் நினைக்கிறார்களா ? அவர்களுக்கு ஏன் ஆத்திரம் வரவேண்டும் ?

SRI C. N. ANNADURAI : எங்களுக்கு ஆத்திரம் வருவதற்குக் காரணம் பிராமணர்களைக் கொல்லவேண்டுமென்று பெரியார் சொன்னதை நேரு அவர்கள் ஆமோதிக்கவில்லை என்பதல்ல. பிராமணர்களைக் கொல்ல வேண்டுமென்று அவர் பிரசாரம் நடத்திக்கொண்டிருக்கும்பொழுது அவரோடு நல்ல பழக்கம் கொண்டிருக்கிற மாநில அரசாங்கம் ஜாதி ஒழிப்பு முறையைப்பற்றி அவரோடு ஏன் கலந்து பேசக்கூடாது என்பதுதான். அப்படியில்லாமல் வடநாட்டிலிருந்து வந்த பண்டித நேரு அவர்கள் தாறுமாறாகத் திட்டுவது மீண்டும் கிலேசத்தைத்தானே உண்டாக்கும் ? அவர் அந்தப் பிரசாரத்தை நடத்தவேண்டுமென்பதற்காக ஆத்திரம் வரவில்லை.

SRI K. VINAYAKAM : On a point of order. Sir, I believe we are carrying on a discussion on the Governor's Address. I do not know how we could reduce this House into an ordinary debating society allowing the Members of this House to almost indulge in altercation. This only reduces the prestige of this House.

MR. SPEAKER : I have permitted it. The prestige is there. The Hon. Minister may continue.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : திருச்சிக் கூட்டத்திலே ஜாதிகளை கட்டாயம் ஒழிக்கவேண்டும், ஜாதி ஒழிப்பிற்காக நாம் எல்லோரும் பாடுபடவேண்டுமென்று பிரதம மந்திரி சொல்லியிருக்கிறார்கள். ஜாதி ஒழிப்பிற்காக பிராமணர்களைக் கொல்லுவது என்று சொல்லுவது மிகவும் தவறு என்று பிரதம மந்திரி கண்டித்தார். அதை அவர் பலமாக கண்டித்தார். அந்தக் கண்டனம் நியாயம்தான் என்பது என்னுடைய கருத்து. ஆனால் தி.மு.க. தலைவர்களுக்கு அவ்வாறு அவர் கண்டித்திருக்கக்கூடாது என்று தோன்றியிருக்கிறது. அந்த மனப்பான்மையுடன்கூட பிரதம மந்திரிக்கு கருப்புக் கொடி காட்டுவது என்று முடிவு செய்தார்கள் அவர்கள். ஆகவே அவர்களுக்கு இதெல்லாம் ஒன்றும் பிரமாதமில்லை என்று தோன்றுவது சகஜம்தான். அவர்களிடம் குலாவுகிற சிலர் இதைக் கவனிக்கவேண்டும்மென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். பிரதம மந்திரி அவர்கள் ஏதோ தவறுதலாகப் பேசினார்கள் என்றே வைத்துக் கொள்வோம். தவறுதல் செய்தால் வழியில்லையா ? இன்று நம் நாட்டில் ஜனநாயகம் நடைபெறுகிறது. நாம் எல்லோரும் ஜனநாயகத்தைக் கடைப் பிடிக்கிறோம். ஒரு நாட்டின் பிரதம மந்திரி தவறுதல் செய்கிறார், அவர்

பேசுவதோ, செய்வதோ சிலருக்குப் பிடிக்கவில்லை, ஆத்திரம்தான் ஏற்படுகிறது என்று வைத்துக்கொள்ளுங்கள். ஜனநாயகத்தில் இதற்கு முறையில்லையா ? மற்ற நாடுகள் எல்லாம் எவ்வாறு நடந்துகொள்ளு கின்றன ? இங்கிலாந்து தேசத்தின் நடைமுறையை கொஞ்சம் கவனித்துப் பார்க்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அமெரிக்கா தேசம் ஜனநாயகத்திற்கு பேர்போனது. அமெரிக்காவின் நடைமுறையைக் கவ னித்துப் பார்க்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். தேர்தல் காலங்களில் உருப்படியான எதிர்க் கட்சிகள் இயங்குகின்றன. பலமாகப் போட்டி போடுகின்றன. தாட்சண்யம் இல்லாமல் தேர்தல் போராட்டம் நடைபெறுகிறது. கடைசியிலே, பெரும்பாலான மக்களின் வாக்குகளைப் பெற்ற கட்சி அரசாங்கத்தை அமைக்கிறது. அரசாங்கம் அமைந்த பிறகும் அந்தந்தப் பாராளுமன்றத்தில் எவ்வளவோ கண்டித்துப் பேசுகிறார்கள். நாம் இந்த சட்ட மன்றத்தில் பேசுவதைவிட பலமாகப் பேசுகிறார்கள். சில வார்த்தைகளை இங்கே "Unparliamentary" என்று சபாநாயகர் அவர்கள் சொல்லுகிறார்கள். நாம் அதை ஏற்றுக்கொள்கிறோம். வெளி யிலே நடக்கிற நடவடிக்கைகளைப் பார்த்தால்—கனம் சபாநாயகர் அவர்களே, தவறுதலாய் இருந்தால் மன்னிக்கவேண்டும்—இங்கே எதை "Unparliamentary" என்று சொல்லுகிறோமோ, அதெல்லாம் அங்கே "Parliamentary" ஆகக் கருதி அனுமதிக்கப்படுகிறது. பலமாக ஒருவரையொருவர் தாக்குகிறார்கள். நேற்றைய தினம் சபாநாயகர் அவர்கள் "பித்தலாட்டம்" என்ற வார்த்தை Unparliamentary அல்ல என்று சொன்னதை வரவேற்கிறேன்.

**Mr. SPEAKER** : அப்புறம் திருப்பினேன். அது "Unparliamentary" என்று சொன்னேன்.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : அவ்வாறு பலமாகத் தாக்கிக்கொள்கிறார்கள். ஒரு பிரதமர் பிடிக்கவில்லையென்றால்—ஸ்ரீ மாக் மில்லன் அல்லது ஸ்ரீ ஐஸனோவர் பிடிக்கவில்லை யென்றால்—அந்த தேசத்திலுள்ள யாருக்காவது கருப்புக் கொடி காட்டக்கூடிய எண்ணம் வருமா ? யாராவது அங்கு காட்டுவார்களா ? அல்லது காட்டி யிருக்கிறார்களா ? யாரைப் பார்த்து "நீ போ" என்று சொல்லுவது ? நம் நாட்டின் பிரதம மந்திரியைப் பார்த்தா ? மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்டு சட்ட பூர்வமாக அரசாங்கத்தின் தலைவராக விளங்குகிற—உலகில் அவருக்கு இருக்கிற பெருமையைப்பற்றி நான் சொல்லவில்லை—மக்களின் பிரதிநிதியைப் பார்த்தா இவ்வாறு சொல்லுவது ? ஜனநாயக முறைப்படி ஏற்பட்ட இந்த நாட்டின் பிரதம மந்திரியையா "நீ போ" என்று சொல்லுவது. இது எத்தகைய மனப்பான்மையைக் காட்டுகிறது ? அது போதாது என்று அவரை ஒரு அந்நியர் என்று சொல்லுகிறார்கள். "அந்நியர்" என்ற வார்த்தை எவ்வாறு வருகிறது ? "நாங்கள் திராவிடர்கள், நாங்கள் தனி நாடு கேட்கிறோம்" என்று சொல்லுகிறார்கள். திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர்களை அவர்கள் எடுத்துக்கொண்ட விசுவாசப் பிரமாணத்தைப் படித்துப் பார்க்கும்படிக் கேட்டுக்கொள்கிறேன். பிரமாணத்தில் "சட்டபூர்வமாக அமைக்கப்பட்ட அந்த அரசியல் அமைப்புக்கு நாங்கள் விசுவாசமாக நடந்துகொள்கிறோம்" என்று இருக்கிறது. நம் நாட்டின் பிரதமரை "வெளியே போ". என்று சொல்லுவது என்ன அர்த்தம் ?

**Sri C. N. ANNADURAI** : பிரிட்டிஷார் ஏற்படுத்திய 1935-ம் வருடத்திய சட்டத்தை மாற்றியமைப்பதற்காக அரசை ஏற்றுக்கொள்கிறோம் என்று சொல்லி அப்பொழுது காங்கிரஸ் அமைச்சு ஏற்பட்டது. அது போலவே, இப்பொழுது இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தை மாற்றி யமைப்பதற்காக நாங்கள் பாடுபட்டு வருகிறோம். ஆகவே நேரு அவர்களை "அந்நியர்" என்று எடுத்துச் சொல்லுவதிலே பொருத்தமற்ற வாதம் எதுவுமிருப்பதாகத் தோன்றவில்லை.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : அரசியலமைப்புச் சட்டத்தை மாற்றியமைப்பது வேறு விஷயம். மாற்றப்பட்டும் வருகிறது. ஆனால், அரசியல் சட்டத்தின் அடிப்படையை ஒப்புக்கொள்ளாதவகையில், அதற்கு நேர்மாறாக, சட்டபூர்வமாக மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதமர்

12th February 1958] [Sri M. Bhaktavatsalam]

ஒருவரை "அந்நியர்" என்று சொல்வது சரியா என்பதை அவர்கள் மேலும் சிந்தித்துப் பார்க்கவேண்டும். அவர்கள் எடுத்துக்கொண்ட பிரமாணத்திற்கு இது உகந்ததா என்பதையும் யோசித்துப் பார்க்கவேண்டும்.

**Sri C. N. ANNADURAI** : நாங்கள் எடுத்துக்கொண்ட பிரமாணம் நேரு பண்டிதருக்கு அல்ல. எங்களுடைய அரசியல் கருத்துப்படி அவர் "அந்நியர்" தான்.

**Sri A. VEDARATNAM** : **On a point of order, Sir,** இப்படி சபையில் ஒருவருக்கொருவர் குறுக்கே பேசிக்கொள்வது நமது சபையின் கௌரவத்திற்கு உகந்ததா, நன்ருகயிருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.

**Mr. SPEAKER** : நான் நன்ருக இல்லையென்றுதான் சொன்னேன். கடைசியில் என்ன நடக்கிறது? ஸ்ரீ பக்தவத்சலம் அவர்கள் பேசும்போது ஸ்ரீ அண்ணுத்துரை அவர்கள் குறுக்கே பேசினுர்கள். கனம் மந்திரி அவர்கள் பேசும்பொழுது குறுக்கே பேசுவது சரி அல்ல. மந்திரி அவர்கள் விட்டுக்கொடுத்தால், சபாநாயகருக்கு ஆட்சேபம் இருக்காது. குறுக்கே பேசுவது நல்லதல்ல. ஸ்ரீ அண்ணுத்துரை அவர்களுக்கும் பேசுவதற்கு சந்தர்ப்பம் கிடைக்கும்.

**Sri C. N. ANNADURAI** : நான் குறுக்கிட்டுப் பேசவேண்டுமென்று உண்மையில் விரும்பவில்லை. மந்திரி அவர்கள் பெருந்தன்மையுடன் இடம் அளிப்பதால்தான் பேசுகிறேன்.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : இங்கே அவர்கள் எடுத்துக்கொண்ட விசுவாசப் பிரமாணம் இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்திற்குத்தான் என்று ஞாபகப்படுத்த விரும்புகிறேன். ஆனுல், அதற்குப் பதிலாக சமாதானம் சொல்லுவது இன்னும் விந்தையாக இருக்கிறது. "ஸைமன் கமிஷனுக்கு" கருப்புக் கொடி காட்டவில்லையா, டாக்டர் கிரஹாமுக்குக் கருப்புக் கொடி காட்டவில்லையா என்று கேட்கிருர்கள். இந்திய மக்களின் சுயராஜ்ஜிய தகுதியை ஒரு அந்நிய நாட்டுக் குழு நிர்ணயிப்பதை நாங்கள் ஒப்புக்கொள்ளவில்லை. ஆகவே கருப்புக் கொடி காட்டினேம். டாக்டர் கிரஹாம் காஷ்மீர் பிரச்னையைத் தீர்ப்பார் என்பதை சிலர் நம்பவில்லை. இவ்விரண்டையும், நமது பிரதமரைத் "திரும்பிப் போ" என்று சொல்லி கருப்புக் கொடி காட்டுவதற்கு ஒப்பிடுவது நிலைமையைச் சரியாகப் புரிந்துகொள்ளாததுதான் என்று சொல்லிக் கொள்ளுகிறேன். இது ஆட்சேபகரமான விஷயம். யாரும் ஒப்புக்கொள்ள முடியாத விஷயம். "**Primitive**" என்று சொன்னுர்களே, இந்த விஷயம் "**Primitive**" லும் **Primitive**. நாட்டின் பிரதமருக்குக் கருப்புக் கொடி காட்டுவதென்பது "**Primitive**" தான். ஆனுல், நாங்கள் அதைத் தடுக்கவில்லை. தடையுத்தரவு ஒன்றும் போடவில்லை. அதற்கு ஆள் சேர்ப்பதற்காக ஒரு கூட்டம் கூட்டினுர்களே, அதற்குத்தான் தடை விதிக்கப்பட்டது. மற்ருென்று கனம் ஆசைத்தம்பி அவர்கள் சொன்னுர்கள். ரொம்ப ஆசைப் பட்டுத்தான் சொன்னுர்கள். நமது தமிழ் நாட்டு முதலமைச்சரைப்பற்றிக் கூட யாராவது இழிவாகப் பேசினுலும் "ஒரு கை பார்த்துக் கொள்கிருேம்" என்று சொன்னுர்கள். நமது முதலமைச்சருக்குத் திராவிட முன்னேற்றக் கழகத்தினரின் உதவி வேண்டாம். அவர்களுடைய வசவுகளைக் கேட்டுக் கேட்டு அவருக்கு உரம் எறியிருக்கிறது. திட்டுதல்களை யெல்லாம் கேட்டு ஊறிப்போய்விட்டது. (சிரிப்பு.) சேர நாட்டு மன்னன் ஒருவனை வட நாட்டு மன்னன் ஒருவன் அவமதித்தான் என்பதற்காக, அவனை வென்று, அவன் தலைமேல் கல்லை வைத்துக்கொண்டு வந்து, கண்ணகிக்குக் கோயில் கட்டினுன் என்று கதை சொன்னுர்கள். இது ரொம்பவும் **primitive idea** என்றுதான் சொல்லவேண்டும். (சிரிப்பு.) சிலப்பதிகாரத்தை பூராவும் படித்திருந்தால் நிலைமை புரிந்திருக்கும். என்னதான் அவமதித்திருந்தாலும் ஒருவன் தலையின்மீது கல்லை வைத்துக் கொண்டு பழி வாங்குவது அந்தக் காலத்து மன்னனுக்கே இது பிடித்திருக்காது.

[Sri M. Bhaktavatsalam] [12th February 1958

பண்டைத் தமிழ் நாட்டைப்பற்றிப் பெருமைப் படுபவர்களில் நானும் ஒருவன்தான். ஆனால் ஒன்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். தமிழ் மக்கள் உயர்ந்த பண்புடையவர்களெனினும் பண்டைக் காலத்து மன்னர்கள் எல்லோரும் உயர்ந்த பண்பாடுடையவர்கள் அல்ல. கீழ்த் தரமான பண்பாடு உடையவர்களை நாம் பின்பற்றுவது அவ்வளவு சரி அல்ல.

அடுத்தபடியாக, கைது செய்யப்பட்ட அங்கத்தினர்கள் பெரிய தலை வர்கள், அந்தஸ்து உடையவர்கள், அவர்கள் அந்தஸ்துக்கு ஏற்றவாறு நடத்தப்படவில்லை, தவறுதலாகவே நடத்தப்பட்டார்கள் என்று சொல்லப் பட்டது. அடையாறு "லாக்கப்பிலே" அவர்கள் ஒரு நாள் இருக்க வேண்டியிருந்தது என்று சொல்லப்பட்டது. சென்னை மத்திய சிறை விதி ஒன்று இருக்கிறது. அதாவது ஒரு குறிப்பிட்ட நேரத்திற்குப் பின்னர் கைதி களை எடுத்துக்கொள்வதில்லை யென்பது. திருவல்லிக்கேணியிலும் மற்ற இடங்களிலும் அன்று கொந்தளிப்பு இருந்தது. வேறு ஒரு இடத்திற்கும் கொண்டுபோக முடியாததால் அவர்கள் அடையாறு சிறையில் வைக்கப்பட் டார்கள். அதிலே அசௌகரியமிருக்கிறது என்று அவர்கள் சொல்லித் தெரிந்து கொள்ள வேண்டியதில்லை. நான் ஒரு இரவு நுங்கம்பாக்கம் போலீஸ் லாக்கப்பில் வைக்கப்பட்டேன். என்னுடைய சகா கனம் தொழில் அமைச்சர் ஒரு இரவு மைலாப்பூர் லாக்கப்பில் வைக்கப்பட்டார். அடையாறு நல்ல காற்றோட்டம் உள்ள இடம். ஆனால் சின்ன இடம். சிறிய அரை தான். தவிர்க்க முடியாத காரணங்களினால், மாலைப் பொழுதில் அவர் களைப் பெரிய சிறைக்குக் கொண்டு போக முடியாததால், அங்கு அவர்கள் வைக்கப்பட்டார்கள்.

அவர்களை அவமதிக்க வேண்டும் என்பதற்காக அப்படிச் செய்யவில்லை. அப்படிப்பட்ட எண்ணமும் எங்களுக்குக் கிடையாது. அதைப்பற்றி கனம் அங்கத்தினர்கள் எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். சிறையில் நடத்தப் படுவதைப்பற்றி நான் கட்சி வேற்றுமை பாராட்டுவது இல்லை. எல்லோ ரையும் கண்யமாக நடத்த வேண்டும் என்பதும் எவ்வளவு வசதி செய்து கொடுக்க வேண்டுமோ அவ்வளவு வசதிகளையும் கொடுக்க வேண்டும் என்பதும்தான் என்னுடைய கருத்து. அந்த வகையில்தான் நானும் கவனம் செலுத்திக்கொண்டு வருகிறேன். ஆகவே ஆதாரமில்லாமல் புகார்கள் சொல்லுவதில் பலன் இல்லை.

இரண்டு பேர்கள் கொலை செய்யப்பட்டார்கள் என்று சொல்லப் படுகிறது. எங்கே யார் கொலை செய்தார்கள் என்று பொறுப்பு இல்லாமல் பேசுவதில் சரியல்ல என்பதை நான் சொல்லிக்கொள்ள விரும்பு கிறேன். ரவுண்டு டாணாவில் கூட்டம் அதிகமாக இருந்தது. அங்கே 12 வரிசை நெருக்கமான கூட்டம் இருந்தது. நேரு வருவார் என்றும், அப் பொழுது அவர் மீது கல்லைப் போடலாம் என்றும் அங்குள்ளவர்கள் கற்களை வைத்துக்கொண்டிருந்தார்கள். ஆனால் அங்கு ரவுண்ட் டாணா வில் கற்களே கிடையாது. அந்த நிலைமையில் அங்குள்ளவர்களுக்கு கற்கள் ஏது ? நேரு வரும்போது அவர்மீது கற்களைப் போடலாம் என்று கூட்டம் கூடி இருந்தது. அதனால் அங்கு நேரு வரவில்லை. அதனால் அங்குள்ளவர்கள் போலீஸ் வான் மீதும், அங்குள்ள வண்டிகளின் மீதும் கற்களை வீச ஆரம்பித்தார்கள். அங்குள்ள காலிகள் போலீஸ்காரர்கள் மீதும் கற்களை வீச ஆரம்பித்தார்கள். அதனால் அங்குள்ள போலீஸ்காரர்கள் அவர்கள் மீது கண்ணீர்புகை குண்டை வீசினார்கள். அதனால் அங்குள்ள ஜனங்கள் கலைய வேண்டியதாக இருந்தது. அப்படி கூட்டம் கலைந்ததனால் ஒருவர் மீது ஒருவர் மோதிக்கொண்டு இறந்தவர்கள் "ஸ்டாம்பீட்" ஆகி அந்தக் கூட்டத்தில் அடிபட்டு இறந்தார்கள். அதற்கு போலீஸ் ஜவாப்பா ? காலிக் கூட்டம் தான் அதற்கு ஜவாப். இதற்காகவா அவர்களுக்குப் பரிந்து பேசு கிறார்கள். அதற்காகவா அவர்களுக்கு வகாலத்து வாங்கிப் பேசுகிறார்கள். காலிகள்தான் செய்தார்கள் என்று அல்ல. எல்லோரும் சேர்ந்துதான் அப்படிச் செய்தார்கள். அங்கு குழப்பம் ஏற்பட்டதால்தான் போலீஸ் காரர்கள் நடவடிக்கை எடுத்துக்கொண்டார்கள். அதனால் லத்தி சார்ஜ் செய்ய வேண்டியதாயிற்று. லத்தி சார்ஜ் நடக்கவில்லை என்று நான் சொல்லவில்லை. லத்தி சார்ஜ் செய்வதற்கு எவ்வளவு அவசியம் ஏற்

12th February 1958] [Sri M. Bhaktavatsalam]

பட்டதோ அவ்வளவுக்குத்தான் நடவடிக்கை எடுத்தார்கள். அப்படி எடுக்காமல் இருந்திருந்தால் இன்னும் அதிகப்படியான சேதமும் நஷ்டமும் ஏற்பட்டிருக்கும். இன்னும் அதிகப்படியான பேர்கள் உயிர் இழக்க வேண்டியதாக இருந்திருக்கும். பொதுமக்களுடைய பாதுகாப்புக்குத்தான் அப்படி நடவடிக்கை எடுத்துக்கொண்டார்கள். அவர்கள் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகள் அவசியமாக ஏற்பட்டது. எந்த அளவிற்கு பலாத்காரத்தை அவர்கள் உபயோகப்படுத்த வேண்டுமோ அந்த அளவிற்குத்தான் அவர்கள் உபயோகப்படுத்தி இருக்கிறார்கள். அவர்கள் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளுக்கு நானே பொறுப்பு ஏற்றுக்கொள்ளுகிறேன்.

சிந்தாதிரிபேட்டையில் நடந்த சம்பவங்களைப்பற்றி சொன்னார்கள். அங்கு நடந்த சம்பவங்களையொட்டி 119 பேர்களின் மீது சார்ஜ் ஷீட் போடப்பட்டிருந்தது. அதில் 65 பேர்கள் குற்றத்தை ஒப்புக்கொண்டார்கள். குற்றத்தை ஒப்புக்கொண்டவர்களுக்கு குறைந்த தண்டனை கொடுக்கப்பட்டு அவர்களும் விடுதலை செய்யப்பட்டிருக்கிறார்கள். அம்மாதிரி விடுதலை செய்யப்படாதவர்கள் மீது குற்றம் இல்லை என்றால் கோர்ட்டார் அவர்களை விடுதலை செய்து விடுவார்கள். காலித்தனம் செய்தவர்களைத்தான் பிடித்தார்கள். அவர்களில் சிலர் குற்றவாளிகளாக இல்லாமல் இருக்கலாம். அவர்களை கோர்ட் விடுதலை செய்து விடுவார்கள். என் லத்தி சார்ஜ் செய்தார்கள் என்றால் இன்னும் அதிகமான சேதம் ஏற்படாமல் தடுப்பதற்காகவே அப்படிச் செய்தார்கள். மற்றும் இரண்டு பேர்கள் இறந்ததைப் பற்றி பிரேத விசாரணை நடந்தது. அந்தப் பிரேத விசாரணையில் டாக்டர்கள் போஸ்ட் மார்ட்டம் செய்து பார்த்ததில் அந்தப் பிரேதங்கள் கூட்டத்தில் விழுந்து அடிபட்டு இறந்துவிட்டதாகத் தீர்ப்புக் கூறியிருக்கிறார்கள். அப்படி அந்தப் பிரேதங்களை பரிசீலனை செய்த பிறகுதான் ஒரு முடிவுக்கு வந்து அதன் பிறகு பிரேதங்கள் அவரவர்களுடைய சொந்தக்காரர்களிடம் கொடுக்கப்பட்டன. நிலைமை இப்படி இருக்கும்போது அவர்கள் கொலை செய்யப்பட்டார்கள் என்று சொல்வது முற்றிலும் தவறு என்பதை இந்த சந்தர்ப்பத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இங்கு திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர்களால் கொடுக்கப்பட்டிருக்கிற திருத்தப் பிரேரணைகளில் அதிகமாக போலீஸ்காரர்கள் பலாத்காரத்தில் இறங்கினார்கள் என்றும், கைது செய்யப்பட்டவர்கள் சரிவர நடத்தப்படவில்லை என்றும் அவைகளை யெல்லாம் விசாரிக்க நீதிமன்ற விசாரணைக்கு விடவேண்டும் என்றும் குறிப்பிட்டிருக்கிறார்கள். மற்றொன்று கம்யூனிஸ்ட் கட்சி தலைவர்கள் கொடுத்திருக்கிற திருத்தப் பிரேரணை. அதில் சையன்ஸ் காங்கிரஸ் நடந்தபோது கண்யமான முறையில் நடந்து கொள்ள இந்த அரசாங்கம் தவறிவிட்டது என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். நான் சொல்லுகிறேன், வேண்டுமென்றே காலிகள் கலாட்டா செய்ய வேண்டும் என்று திட்டம் போட்டு, பிரதமர் வரும்போது அவரை அவமதிக்க வேண்டும் என்றும் கீழ்தரமான எண்ணம் கொண்டும், சிலர் சையன்ஸ் மகாநாட்டிற்குள்ளேயே சென்று அந்நிய விஞ்ஞானிகள் முன்னிலையிலேயே அவரை அவமானப்படுத்த வேண்டும் என்றும் திட்டம் போட்டிருப்பதாக தெரிந்து அதை நிறைவேற்ற முடியாமல் செய்வதற்காகவே போலீஸ் தக்க நடவடிக்கை எடுத்துக்கொண்டது. அப்படிச் செய்வதற்கு போலீஸ் இடம் கொடுக்கவில்லை. அந்த இடத்திலும் போலீஸ் எந்த அளவுக்கு பலாத்காரத்தை உபயோகப்படுத்த வேண்டுமோ அந்த அளவுக்குத்தான் உபயோகப்படுத்தியிருக்கிறார்கள். எவ்விதமான சம்பவங்களும் நடைபெறுமல் சிறந்த முறையில் போலீஸ்காரர்கள் நல்ல முறையில் நடந்து கொண்டதற்கு அவர்களை நான் மிகவும் இந்த சமயத்தில் பாராட்டுகிறேன். நிலைமையை சரியானபடி சமாளித்ததைக் கண்டு அவர்களை நான் பாராட்டுகிறேன். இந்த சம்பவங்களைப் பொறுத்தவரையிலும் போலீஸ்காரர்கள் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளை நான் பாராட்டுகிறேன். அவர்களைப்பற்றி குறை கூறுவதற்கு நான் தயாராக இல்லை. இதற்கு விசாரணை மன்றம் அமைக்க வேண்டும் என்றால் அதை ஒத்துக்கொள்ள முடியாது. ஒரு தேசத்தின் தலைவருக்கு கருப்புக்கொடி காட்டுவதும், அவரைத் திரும்பிப்போ என்றும் சொல்வதும் சரியா என்பதை திராவிட முன்னேற்றக் கட்சித் தலைவரைச் சிந்தித்துப் பார்க்கும்படியாக கேட்டுக்கொள்ளுகிறேன். எந்த நாட்டிலும் இதை அனுமதிக்கமாட்டார்கள். இதற்கு விசாரணை

[Sri M. Bhaktavatsalam] [12th February 1958

வேண்டுமா என்று கேட்கிறேன். திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர்களுக்கு ஒன்று நான் சொல்லிக்கொள்ளுகிறேன், இது அரசியல் முறை அல்ல. அவர்களுக்கு நல்ல எண்ணம் இருக்கலாம், தீவிரமான போக்கு இருக்கலாம். அவர்கள் அரசியல் கட்சியாக இருந்துகொண்டு சட்டசபையில் வீற்றிருக்கிறார்கள். அரசியல் கட்சியாக இருக்கக்கூடியவர்கள் தங்களுடைய கொள்கைகளை மாற்றிக்கொள்ள வேண்டும். அவர்கள் எதிர் கட்சியாக இருப்பதால் பல திட்டங்களை உருவாக்கி அவைகளை சட்டசபையில் கொண்டு வருவதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். அரசியல் கட்சியாக இருந்து கொண்டு குற்றம் கூறிக்கொண்டே இருக்கக்கூடாது, அப்படி குற்றம் சொல்வது சுலபம். திட்டங்களை உருவாக்கக்கூடியவகையில் அவர்கள் பாடுபட வேண்டும். இனிமேலாவது அவர்கள் தங்களுடைய மனதை மாற்றிக் கொள்ள வேண்டும். அப்படி அவர்கள் மாற்றிக்கொள்ளுவார்கள் என்று நான் நம்ப முடியாது. ஏதோ ராஜாஜியை குறை கூறிவிட்டார் அதற்காக நாங்கள் ஒரு போராட்டத்தை நடத்துகிறோம் என்று சொல்லுகின்ற திராவிட முன்னேற்றக்கழகத் தலைவர்களுக்கு நன்கு தெரியும், ராஜாஜியைப்பற்றி எப்படிப் பேசினார் என்பதும் அதன் பிறகு ராஜாஜிக்கும் பிரதமருக்கும் எவ்வளவு அந்நியோன்யமாக கடிதப் போக்குவரத்து நடந்துகொண்டு வருகிறது என்பதும் திராவிடக் கட்சி தலைவருக்கும் நன்கு தெரிந்திருக்கும். ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய மனதை இவ்வளவு சீக்கிரத்தில் மாற்றிக்கொள்ள முடியும் என்று நம்பக்கூடிய அவ்வளவு அரசியல் ஞான சூன்யன் நான் அல்ல. இதற்கு பொது மக்கள் இடம் கொடுத்தால் அது நெருப்புடன் விளையாடுவதாகும். அப்படி நெருப்புடன் விளையாடுகிறவர்களுக்கு ஆபத்து. அது குழந்தைகளுக்குத் தெரியாது. நெருப்பின் குணம் குழந்தைகளுக்குத் தெரியாது. குழந்தைகள் தானே நெருப்பினிடம் போகும். அப்படி நெருப்பினிடம் போக விடக்கூடாது. அப்படிப் போக விடாமல் குழந்தைகளைக் காப்பாற்ற வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என்னுடைய வார்த்தையை முடித்துக்கொள்ளுகிறேன்.

Sri A. V. P. ASAITHAMBI : சிலப்பதிகாரத்தைப்பற்றி நான் குறிப்பிடும்போது அதை நன்றாக நான் படிக்காமல் குறிப்பிடவில்லை. அதில் வருகிற படையெடுப்பைப்பற்றிதான் சொன்னேன். சேரன் தமிழ் இனப்பற்று என்ற ஒரே காரணத்திற்காகத்தான் படையெடுத்தான். அதேபோல் ராஜாஜியோ அல்லது பெரியாரோ என்ன கருத்துக் கொண்டிருந்தாலும், நமது முதல் அமைச்சர் காமராசர் என்ன கருத்துக் கொண்டிருந்தாலும் அதைப்பற்றி எங்களுக்குக் கவலை இல்லை. வடநாடு தென்னாட்டை இழிவாக நடத்தக்கூடிய அவ்வளவு தூரம் நாங்கள் சும்மா இருக்க மாட்டோம். இனப்பற்றுக் கொண்டவர்கள் இல்லை என்ற அடிப்படையில் சொன்னேனே தவிர மற்றப்படி சிலப்பதிகாரத்தை அறியாமல் சொல்லவில்லை என்பதை மட்டும் சொல்லிக்கொள்ளுகிறேன்.

Mr. SPEAKER : சபை இப்பொழுது கலைந்து மீண்டும் பிற்பகல் 3 மணிக்கு கூடும்.

**(After lunch—3 p.m.)**

**(Deputy Speaker in the Chair.)**

Sri V. K. KOTHANDARAMAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, மேன்மைதங்கிய கவர்னர் அவர்களின் உரையின்பேரில் பலர் பேசியுள்ளார்கள். கவர்னர் பெருமானின் உரையின்பேரில் பேசியவர்களும் இருக்கிறார்கள், அந்த உரையினின்றும் அப்பாற்பட்ட விஷயங்களைப்பற்றியும் பலவிதமான அபிப்பிராயங்களைக் கூறியவர்களும் இருக்கிறார்கள். இந்த சந்தர்ப்பத்தில் நான் ஒன்று கூற ஆசைப்படுகிறேன். இந்த சபையில் நாம் எதாவது பேச வேண்டுமேயானால் சட்டசபையில் பேசுகிறோம் என்பதை உணர்ந்து பொறுப்புடன் கண்ணியமான முறையில் பேசவேண்டும். எதற்காக இப்படிக் கூறுகிறேன் என்றால், இன்று காலையில் கனம் அங்கத்தினர் ஸ்ரீ சன்னாசி பொறுப்பற்ற முறையில் சில விஷயங்களைக் கூறினார்.

12th February 1958] [Sri V. K. Kothandaraman]

அவருடைய தொகுதியாகிய முசிரியில் விவசாயிகளின் போராட்டம் நடந்த போது விவசாய சங்கத் தலைவர்கள், கம்யூனிஸ்டுகள், அங்கே சில புருஷர்கள் முன்னிலையில் அவர்களுடைய மனைவிமார்களைக் கற்பழித்ததாக பொறுப்பற்ற தன்மையிலும் உண்மையை மறைக்கக்கூடிய தன்மையிலும் அவர் பேசியிருக்கிறார். இது எவ்வளவு கேவலமான போக்கு என்பதை எடுத்துக்காட்ட ஆசைப்படுகிறேன். அங்கே அப்படிப்பட்ட காரியத்தைச் செய்திருக்கக்கூடியவர்கள் கம்யூனிஸ்டுகளோ, அல்லது காங்கிரஸ்காரர்களோ, யாராயிருந்தாலும் அது வேறு விஷயம். இருந்தாலும், அங்கே அப்படிப்பட்ட காரியத்தைச் செய்தது கம்யூனிஸ்டுகளாக இருந்தால், அதற்கு எவ்வளவு கடுமையாக தண்டனை கொடுக்கப்பட்டாலும் கண்டிப்பாக அதை ஏற்றுக்கொள்வதற்கு நாங்கள் தயார் என்று சொல்லிக்கொள்கிறேன். ஆனால் நடக்காததை நடந்ததாகக் கற்பனை செய்துகொண்டு இங்கே பேசுவதும் அப்படிப் பேசப்படுவதை கனம் அமைச்சர்கள் கேட்டுக்கொண்டிருக்பதும் சரியல்ல. காலையில் பேசும்போது கனம் போலீஸ் அமைச்சர் அவர்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தவர்களுக்கு புத்தி கூறினார்கள். ஸ்ரீ சன்னாசி எவ்வளவு கண்ணியமான முறையில் பேசியிருக்கிறார் என்பதையும் காங்கிரஸ்காரர்கள் எவ்வளவு பொறுப்புணர்ச்சியுடன் பேசுகிறார்கள் என்பதையும் கனம் அமைச்சருக்கு எடுத்துக்காட்ட வேண்டும் என்பது தான் என் விருப்பம். இனிமேல் இப்படிப்பட்ட பொறுப்பற்ற பேச்சுக்கள் நிகழ்த்தப்படக்கூடாது என்று விரும்புகிறேன். கனம் அங்கத்தினர் ஸ்ரீ சன்னாசி குறிப்பிட்டதுபோன்ற காரியங்கள் நடந்திருக்குமேயானால் அரசாங்கத்தாரின் போலீஸ்காரர்கள் இருக்கிறார்கள். அப்படிப்பட்ட காரியங்கள் செய்பவர்களை "சுடுங்கள்" என்று அரசாங்கத்தார் சொன்னால் அவர்களைச் சுடுவதற்குப் போலீசார் தயாராயிருக்கிறார்கள்; "அடியுங்கள்" என்றாலும் அடித்து மண்டையைப் பிளப்பதற்கும் அவர்கள் தயாராயிருக்கிறார்கள். போலீசாரிடம் சொன்னால் உடனே நடவடிக்கை எடுப்பார்கள். வேண்டிய நடவடிக்கைகளை எடுப்பதற்குக் கோர்ட்டுகளும் இருக்கின்றன. அப்படியிருக்கும்போது, பத்திரிகைகளில் வராத செய்தியை, நடக்காத விஷயத்தை, இங்கே சொல்வது ரொம்பவும் வருந்தத்தக்கது. இதுபோன்று பேசுவதற்கு எங்கள் கட்சியினருக்கும் தெரியும். "அந்தக் காரியத்தை ஸ்ரீ சன்னாசி செய்தார். அந்த உண்மையை மறைப்பதற்காகத்தான் அவர் இப்படிப் பேசியிருக்கிறார்" என்று நாங்கள் சொல்ல முடியும். அமைச்சர்களும் இப்படிப்பட்ட காரியங்களைச் செய்தார்கள் என்றும் நாங்கள் சொல்ல முடியும். அதாவது, எங்களுக்கும் அப்படிப் பேசத் தெரியும். ஆனால் அப்படி பொறுப்பற்ற முறையில் பேச நாங்கள் விரும்பவில்லை; நாங்கள் அப்படிப் பேசமாட்டோம். இந்த சபையில் இனிமேல் அப்படிப் பொறுப்பற்ற முறையில் கனம் அங்கத்தினர்கள் பேசக் கூடாது என்று எச்சரிக்கை செய்ய விரும்புகிறேன்.

கைத்தறி நெசவுத் தொழில் சம்பந்தமாக பலர் பலவிதமாகப் பேசியிருக்கிறார்கள். இந்த நாட்டிலுள்ள மக்களில் 80 சதவிகிதத்தினர் விவசாயிகள் என்றும், அடுத்த பெரும்பான்மையினர் கைத்தறி நெசவுத் தொழிலாளர்கள் என்றும் கனம் அமைச்சர் சொன்னார். தமிழ்நாட்டில் மட்டும் 5 லட்சம் கைத்தறி நெசவுத் தொழிலாளர்கள் இருக்கிறார்கள். இந்த 5 லட்சம் பேர்களை நம்பி வாழ்பவர்கள் 30–40 லட்சம் பேர்கள். இந்தத் தொழில் இப்போது க்ஷீணித்திருப்பதற்குக் காரணம், கைத்தறித் துணிகளுக்குக் கொடுக்கப்பட்டுவந்த ரிபேட் தொகை குறைக்கப்பட்டதுமட்டுமின்றி, அந்தத் துணிகள் அயல்நாடுகளுக்கு ஏற்றுமதியாவதன் அளவு குறைந்திருப்பதும் ஆகும். அவர்களுக்குக் கொடுக்கப்படும் நூல் குறைந்த விலையில் கொடுக்கப்பட்டால்தான் அதை அவர்கள் வாங்கமுடியும். கைத்தறி நெசவுத் தொழிலாளர்களுக்கு உதவி செய்ய வேண்டுமானால், முதலில் கைத்தறித்துணிகள் அயல் நாடுகளுக்கு அதிகமாக ஏற்றுமதியாவதற்கு வகைசெய்யவேண்டும். அவர்களுக்குக் கொடுக்கப்படும் நூல் குறைந்த விலையில் கொடுக்கப்படுவதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். மேலும், புதிதாக ஏற்படும் தொழிற்சாலைகளில் ஏராளமான கைத்தறி நெசவுத் தொழிலாளர்களுக்கு வேலை கொடுக்கவேண்டும்; அவைகளில் எவ்வளவு கைத்தறி நெசவுத் தொழிலாளர்களுக்கு வேலை கொடுக்க முடியுமோ அவ்வளவு கைத்தறி நெசவு தொழிலாளர்களுக்கு வேலை கொடுப்பதற்கு முயற்சி செய்யவேண்டும்.

[Sri V. K. Kothandaraman] [12th February 1958

இப்போது இந்த ராஜ்யத்தில் பெரிய பெரிய் தொழிற்சாலைகளை அமைப்பதற்கான வாய்ப்புகள் இருக்கின்றன. அஸ்ஸாமிலிருந்து முதன் முதலாக இங்கே வந்திருக்கும் தற்போதைய கவர்னர் அவர்கள், அங்கே முதன் மந்திரியாக இருந்தபோது அந்த ராஜ்யத்தில் எண்ணை சுத்திகரிப்பு தொழிற்சாலை ஆரம்பிக்கப்படவில்லை என்ற காரணத்திற்காக "மந்திரிசபையே ராஜிநாமாச் செய்துவிடும்" என்று சொல்லும் அளவிற்கு போராட்டத்தைக் கிளப்பியிருந்திருக்கிறார்கள். கடைசியில் மத்திய சர்க்காரும் அந்த கோரிக்கையை ஒப்புக்கொண்டிருந்திருக்கிறது. அப்பேர்ப்பட்டவர் இந்த ராஜ்யத்திற்கு கவர்னராக வந்திருக்கிறார். இந்த ராஜ்யத்தில் சேலத்தில் இரும்புத் தொழிற்சாலையை ஆரம்பிப்பதற்கான வாய்ப்புகள் இருக்கின்றன ; அதில் கவனம் செலுத்தி அந்தத் தொழிற்சாலையை அங்கே ஆரம்பிப்பதற்கு வேண்டிய முயற்சியை அவர் எடுத்துக்கொள்வார் என்று நம்புகிறேன்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பரிபூரணமாக நிறைவேற்றுவதற்கு உதவக்கூடிய சிறுசேமிப்புத் திட்டத்தை வரவேற்கிறோம். சிறு சேமிப்பிற்காக பணம் வசூலிக்கும்போது இந்தத் திட்டத்தை ஆதரிப்பவர்கள்கூட சர்க்காருடன் ஒத்துழைப்பதில்லை என்று கனம் அமைச்சர் கூறினார். எங்கள் ஒத்துழைப்பை எந்த அளவிற்கு எங்கே எப்போது சர்க்கார் நாடியிருக்கிறார்கள் என்று கேட்க விரும்புகிறேன். மொழிப் பிரச்னையைப் பொறுத்தவரையில், எல்லாக் கட்சியினருடனும் கலந்தாலோசித்து சர்க்கார் நல்ல முடிவிற்கு வந்தார்கள். அந்த மாதிரி சர்க்கார் எல்லாப் பிரச்னைகள் சம்பந்தமாகவும் எல்லாக் கட்சியினரையும் வரவழைத்து அவர்களுடன் கலந்தாலோசித்து நல்ல முடிவுகள் எடுக்க வேண்டும். சிறு சேமிப்புத் திட்டம் சம்பந்தமாகவும் அப்படிச் செய்தால் கண்டிப்பாக ரூ. 1 கோடி அல்ல, எவ்வளவு கோடி ரூபாயும் வசூலிக்க முடியும். எல்லாக் கட்சியினருடனும் கலந்தாலோசித்தால், சிறு சேமிப்புத் திட்டத்திற்கு யாரிடத்தில் பணம் வசூலிக்க வேண்டும், யாரிடத்தில் பணம் வசூலிக்க முடியாது என்பனபோன்ற விஷயங்களைச் சீர்தூக்கிப் பார்த்து இந்தப் பிரச்னை குறித்து நல்ல முடிவிற்கு வரமுடியும்.

கவர்னர் அவர்களுடைய உரையில், நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்டுவது சம்பந்தமாக சட்டம் வரும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. தாற்காலிகமாக நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்டி, அந்த வரம்புக்கு மேற்பட்டு நிலத்தைச் சொந்தமாக்குவதைத் தடைசெய்யும் வகையில் தான் சட்டம் வரும் என்று அவருடைய உரையில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே ஒரு குறிப்பிட்ட அளவிற்கு மேற்பட்டு நிலத்தை விலைக்கு வாங்குவதைத் தடைசெய்யக்கூடிய சட்டம்தான் வரும் என்று தெரிகிறது. இப்போது நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான, ஏக்கர் நிலங்களை பலர் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். ஒரு குடும்பத்திற்கு இவ்வளவு ஏக்கர் நிலம்தான் சொந்தமாக இருக்கவேண்டுமென்று நிர்ணயிக்கும் அந்தச் சட்டம் இருக்காது என்று அறிகிறோம். இதை கவனிக்கும்போது என்ன தோன்றுகிறது ? "நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்டும் சட்டத்தை விரைவில் கொண்டுவரப்போகிறோம். நிலங்களை யார் யார் பேரில் எழுதி வைக்கலாமோ அவர்கள் பேரில் எழுதிவைத்து சரிசெய்து கொள்ளுங்கள். நாங்கள் அவகாசம் கொடுக்கிறோம்" என்று சர்க்கார் மிராசுதார்களுக்குச் சொல்வதுபோல் தோன்றுகிறது. மேலும், இங்குள்ளவர்களை ஏமாற்றுவதுடன் மட்டுமின்றி, அஸ்ஸாமில் நடந்த அகில இந்திய காங்கிரஸ் மகா நாட்டில் போட்ட தீர்மானத்தின்படி தாங்கள் நடக்காவிட்டால் அகில இந்தியக் காங்கிரஸ் தலைவராகிய ஸ்ரீ தேபருக்குக் கோபம் வந்துவிடுமோ என்று எண்ணி அவரையும் ஏமாற்றுவதற்காக இப்படிப்பட்ட சட்டத்தை சர்க்கார் கொண்டுவரவிருக்கிறார்கள் என்று நான் கருதுகிறேன். இப்போது லட்சக்கணக்கான ஏக்கர் தரிசு நிலங்கள் சர்க்காருக்குச் சொந்தமானவையாக இருக்கின்றன. நிலமில்லாத ஆயிரக்கணக்கான ஏழை விவசாயிகளுக்கு அவைகளைக் கொடுக்கலாம். நிலமில்லாத தாழ்த்தப்பட்ட மக்களுக்கு அவைகளைக் கொடுக்கலாம். "தாழ்த்தப்பட்ட மக்களை நாங்கள் தான் காப்பாற்றுகிறோம்" என்று சொல்லும் இந்த அரசாங்கத்தார் அந்த நிலங்களைச் தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் நிலமில்லாத ஏழை விவசாயிகளுக்கும் கொடுக்க முன்வந்தால், பெரிய மிராசுதார்களும் நில முதலாளிகளும், நிலப் பிரபுக்களும் அரசாங்கத்தாரைப் பின்பற்றி தங்கள்

12th February 1958] [Sri V. K. Kothandaraman]

நிலங்களை அவர்களுக்குக் கொடுக்க முன்வருவார்கள். நில உடைமைக்கு உண்மையாகவே உச்ச வரம்பு கட்டாமல் இம்மாதிரியான வகையில் சட்டத் தைக் கொண்டுவருவது சரியல்ல. இப்படிப்பட்ட சட்டத்தைக் கொண்டு வந்தால் சரியான முறையில் நிலச் சீர்திருத்தம் செய்யமுடியாது.

இன்றைக்கு தாழ்த்தப்பட்ட மக்களுக்கு சரியான பாதுகாப்புகள் இல்லை. மைனரிட்டி மொழியினருக்கு நல்ல பாதுகாப்புகள் இருக்கின்றன ; அவை களை வரவேற்கிறேம். தாழ்த்தப்பட்ட மக்களுக்கு சரியான பாதுகாப்பு இல்லை. "தீண்டாமை ஒழிப்புச் சட்டம் கொண்டுவந்திருக்கிறேம். இன்னும் எவ்வளவோ நடவடிக்கைகள் எடுத்துவருகிறேம்" என்று சர்க்கார் சொல்லக்கூடும். ஆனல், இப்போதும் தாழ்த்தப்பட்ட மக்கள் எவ்வளவு இழிவாக ஆங்காங்கே நடத்தப்படுகிறார்கள் என்பதைப்பற்றி காங்கிரஸ் உறுப்பினர்களே குறிப்பிட்டார்கள். நான் சொல்கிறேன் : தாழ்த்தப்பட்ட மக்களை இழிவாக நடத்தும் போக்கை நீக்க வேண்டுமானல் மிகக் கடுமை யான நடவடிக்கைகள் எடுக்கவேண்டும். மதுவிலக்கு சட்டத்தை வெற்றி கரமாக அமல் நடத்துவதற்காக கடுமையான சட்டத் திருத்தத்தைக் கொண்டுவரவிருப்பதைப் போல, தாழ்த்தப்பட்ட மக்கள் இழிவாக நடத்தப் படுவதைத் தடுப்பதற்கும் ஏன் கடுமையான சட்டம் கொண்டுவரக் கூடாது என்று கேட்கிறேன்.

ஆனல் அதற்கு சொல்லலாம், 'ஏற்கெனவே சட்டங்கள் இருக்கின்றன', என்று. அவைகள் நடைமுறையில் இருந்து வருகின்றன என்று கூட சொல்லலாம். ஆனல் நான் கேட்கிறேன். அவைகள் நடைமுறையில் இருக்கின்றனவா ? அவைகள் உருப்படியாக நடக்கின்றனவா ? என்று கேட் கிறேன். சன்னுசி அவர்கள் சொன்னார்கள், அது போன்று ஒரு நிலை இருந்திருக்குமானல் அங்கு உடனடி போலீஸ் ஸ்டேஷனில் கம்ப்ளெயின்ட் செய்திருந்தால் உடனே நடவடிக்கைகள் எடுத்திருப்பார்கள் அல்லவா ? ஆனல் அந்த அளவு நடவடிக்கைகள் எடுக்கப்படவில்லை என்பதில் இருந்து நாம் எதைப் பார்க்கிறேம் ? இன்று உண்மையில் சிறுபான்மை மொழி யினருக்கு பாதுகாப்பு என்பதில்லை. உதாரணமாக, இந்த ராஜ்யத்தில் இருக்கக்கூடிய முஸ்லீம்கள் டானரி தொழில் நடத்துகிறார்கள். அந்த டானரி தொழிலை நடத்தக் கூடியவர்கள் இன்றைக்கு அத்தொழிலை நடத்த கடன் கேட்கிறார்கள். கடன் கேட்டபோதும் கூட கடன் கொடுக்கப் படவில்லை. அந்த அளவு நிலைமை இருக்கிறது. அதற்குப் பதிலாக பம்பாய் ராஜ்யத்தில் இருந்து, 50 சதவிகிதம் உங்களுக்கு கிரான்ட்டாக தருகிறேம். எங்கள் ராஜ்யத்தில் டானரி தொழிலை ஆரம்பியுங்கள் என்று அவர்கள் லெட்டர் எழுதியிருக்கிறார்கள். இந்த நிலைமை உண்மையில் இருக்கு மானல் இங்கு இருக்கக்கூடியவர்கள் அங்குபோய் டானரி தொழிற்சாலை ஆரம்பிப்பார்களேயானல், இந்த ராஜ்யத்திலே அந்தத் தொழில் போய் விட்டால் இந்த ராஜ்யத்தின் வருமானம் போய்விடும். அதோடு இந்த ராஜ்யத்தில் இருக்கக்கூடியவர்கள் வேலையில்லாத் திண்டாட்டத்தால் அவதிப் படக்கூடிய ஓர் நிலைமை ஏற்படும் என்பதையும் இந்த சந்தர்ப்பத் தில் சொல்லிக் கொண்டு, நியாயவிலைக் கடைகள் கண்டிப்பாக இருக்க வேண்டும், அதேபோன்று இரிகேஷன் வொர்க்ஸ் சம்பந்தப்பட்டவரையில், மத்திய அரசாங்க மந்திரியவர்கள் இங்கு வந்திருந்தார்கள், டே அவர்கள். அவர்கள் சொன்னார்கள்..

**DEPUTY SPEAKER : The hon. Member's time is up. He should resume his seat.**

* SRIMATHI HEMALATHA DEVI : மதிப்பிற்குரிய உதவி சபாநாயகர் அவர்களே, அரசியல் அனுபவம் மிகுந்த ஒருவரை நமது ராஜ்ய பரிபாலனராக நியமித்திருப்பது குறித்து, அது நமது பாக்கியம் என்று கருதுவதோடு அவர் தனது உரையின் ஆரம்பத்திலேயே, வந்த ஒரு சில தினங்களுக்குள்ளாகவே நம் நாட்டில் இருக்கும் குழப்பங்களை நன்கு அறிந்துகொண்டு நாம் நல்ல முறையில், ஜனநாயக முறையில் நன்கு ஆட்சி செலுத்த வேண்டுமென்றல் நமக்கு ஒற்றுமை மிகவும் அவசியம் என்று எடுத்துரைத்திருக்கிறார்கள், அவரது உரையில். ஒற்றுமை தான் ஜனநாயகத்தின் அஸ்திவாரம் என்பதையும், ஒன்றுபட்டால்தான் 3-12 p.m.

[Srimathi Hemalatha Devi] [12th February 1958

உண்டு வாழ்வு என்பதையும் நன்கு தெளிவாக வலியுறுத்தியுள்ளார் அவரது உரையில். அதோடு கூட, தமிழ் திருநாள் அன்று 1,922 அலுவலகங்களில் தமிழ் மொழி ஆட்சிமொழியாக மேற்கொள்ளப்பட்டுள்ளது என்றும் மேலும் ஆட்சி மொழியின் அறிக்கைக்கு பிறகு நம் நாட்டில் குழப்பம் ஏற்பட்டுள்ளதாகவும் அவர் அறிவித்துள்ளார்கள். இக்குழப்பத்திற்குக் காரணம் நம் அரசாங்கத்தின் பேரில் நம்பிக்கை அற்றவர்கள் ஒரு சிலர் தங்களுடைய கட்சியை பலப்படுத்த வேண்டுமென்ற ஒரே நோக்கத்துடன் அரசாங்கத்தை குறை கூறிக் கொண்டேயிருக்க வேண்டுமென்ற எண்ணத்தில் பிரசாரம் செய்து வருவதாலும் தாங்கள் தலைவர்கள் என்று எண்ணம் இருப்பதாலும், அது பத்திரிகைகளில் பறைசாற்றப்பட வேண்டுமென்று எண்ணுவதும் இம்மாதிரியான குழப்பங்களுக்கு ஏதுவாகும், என்று நான் இங்கு சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அடுத்தபடியாக, தனி தமிழ்நாடு வேண்டுமென்று கூறுகிறார்கள் ஒரு சிலர். திராவிட நாடு வேண்டுமென்று கூறுகிறார்கள் ஒரு சிலர். திராவிட நாடு என்றால் ஆந்திரா, கேரளம், தமிழ் நாடு, மற்றும் கன்னடம் இந்த நான்கும் சேர்ந்தால்தான் திராவிட நாடு அமைக்க முடியும். ஆனால் தி.மு.க. அங்கத்தினர் அவர்கள் பேசும்போது கூறுகிறார்கள், இப்பொழுது சமீபத்தில் நடந்த சம்பவங்களின்போது, தமிழ்நாட்டில் போலீஸ்காரர்கள் இல்லையா ? பின் ஏன் போலீஸை கேரளத்தில் இருந்து வரவழைக்க வேண்டும் என்று கூறுகிறார்கள். இப்பேர்ப்பட்ட கருத்தை உடையவர்கள் கேரளத்தையும் சேர்த்து ஒரு திராவிட நாடு அமைக்க எப்படி முற்படுவார்கள் என்று தெரியவில்லை. அப்படி முற்பட்டாலும் இந்தமாதிரி கருத்துக்களை அவர்கள் தெரிந்துகொண்டால் அவர்கள், அதாவது கேரளம், அந்த திராவிட அமைப்பிற்கு ஒப்புக்கொள்ளவார்களா ? அவர்கள் அப்படி ஏமாந்த சோணகிரிகள் அல்ல என்பதை நான் இந்த சந்தர்ப்பத்தில் எடுத்துக் கூற ஆசைப்படுகிறேன். அடுத்தபடியாக சிறு நீர்ப்பாசனத் திட்டத்திற்காக, அதில் நமது அரசாங்கம் மிகுந்த கவனம் செலுத்தி வருவதாக குறிப்பிட்டிருப்பது கண்டு மகிழ்ச்சி அடைகிறேன். அதே சமயத்தில் சேலம் ஜில்லாவானது ஒரு வரண்ட பிரதேசமாகும். மலை நாடுமாகும். அதிலும் குறிப்பாக எனது தொகுதியில் சின்னாறு என்ற அணைத்திட்டம் இருக்கிறது. பஞ்சப்பள்ளி அணைத்திட்டம் என்று கூறுவார்கள். அந்தத் திட்டம் பல ஆண்டுகளுக்கு முன்பே நிறைவேற்றப் பட்டிருக்க வேண்டியது மிகவும் அவசியமாகும். ஆனால் காலம் கடந்து விட்டாலும்கூட இது குறித்து நமது முதல் அமைச்சர் அவர்களிடமும்; மராமத்து இலாகா அமைச்சர் அவர்களும், அவர்களிடமும் கூறியதன் பேரில் மராமத்து இலாகா அமைச்சர் அவர்கள் சிரமத்தைப் பாராமல் அங்கு வந்து அதை நேரில் பார்வையிட்டார்கள். எந்த இடத்தில் அதைக் கட்டவேண்டும் என்று மூன்று இடங்களை பார்வையிட்டு, பல ஆயிரம் ஏக்கர்களுக்கு பாயக்கூடிய திட்டமாயிருப்பதால் அது ஏற்கெனவே செய்திருக்க வேண்டியது அவசியத்திலும் அவசியம் என்றும், இந்த இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்குள்ளாகவே தர்மபுரி தாலூகா பூராவும் பயனடையும் அளவிலே அதைக் கட்டி முடிக்க திட்டம் வகுக்கவேண்டுமென்றும் அவர் தெரிவித்தார். ஆகவே, இந்த இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்திலேயே அந்த பஞ்சப் பள்ளி அணைத்திட்டத்தை கட்டுவதற்கு அரசாங்கம் ஆவன செய்ய வேண்டும், செய்யும் என்று நான் நம்புகிறேன். அதோடு சிரமத்தைப் பாராமல் அங்கு வந்து அதைப் பார்வையிட்ட மராமத்து இலாகா அமைச்சர் அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்ள நான் கடமைப் பட்டிருக்கிறேன். அடுத்தபடி இப்பொழுது கைத்தறிக்கு ரிபேட் 9 நயா பைசாவிலிருந்து 6 நயா பைசாவாக குறைக்கப்பட்டிருக்கிற காரணத்தினால் கைத்தறி துணிகள் அதிகமாக தேங்கிவிட்டதாக பலர் கூறுகிறார்கள். மேலும் பல குறைகளைப் பற்றியும் தெரிவித்தார்கள். இது சம்பந்தமாக எனக்குத் தெரிந்த ஒரு விஷயத்தைப் பற்றி நான் சொல்ல ஆசைப்படுகிறேன். கைத்தறிக்கு ஆக்கம் அளிக்க வேண்டுமென்று கூறும் இக்காலத்தில் எத்தனை பேர்கள் கைத்தறி துணி அணிகிறார்கள் என்று பார்த்தால், கைத்தறி நெசவாளர்களே கைத்தறி துணிகள் அணிவதில்லை. இது, எல்லோரும் அறிந்த உண்மையாகும். கைத்தறி துணி நெசவு செய்யும் ஒருவர் கட்டிக் கொண்டிருக்கும் துணியைப் பார்த்தால் அது மில் துணியாக இருக்கும் அல்லது அன்னிய நாட்டு துணியாக இருக்கும். நாம் வருடா

12th February 1958] [Srimathi Hemalatha Devi]

வருடம் கைத்தறி வாரம் கொண்டாடி வருகிறோம். ஏழை மக்கள் பாதிக்கிறார்கள் என்று உண்மையை அறிந்தும் பெருவாரியாக நம் நாட்டில் அன்னிய நாட்டு துணியைத்தான் பெண்களும் அணிய ஆசைப்படுகிறார்கள். ஆகவே நான் சொல்வது என்னவென்றால் அம்மாதிரியான ஆசையை கட்டுப்படுத்திக்கொண்டு கைத்தறித் துணிகளையே கட்டிக் கொள்வோம் என்று ஒரு கொள்கையை நாம் கடைப்பிடிப்போமானால் கைத்தறித்துணி தேக்கம் அடையாமல் இருக்க உதவிகரமாக இருக்கும். அடுத்தபடியாக சிறு சேமிப்பு இயக்கத்தைப் பற்றி ஒரு வார்த்தை. குதிரை கொள்ளு என்றால் வாயைத் திறக்கிறது, கடிவாளம் என்றால் வாயை மூடிக் கொள்கிறது என்பார்கள். அதேபோல் இந்த அவையில் பேசிய அங்கத்தினர்கள் பலரும் அவரவர் தொகுதியில் உள்ள குறைகளைப் பற்றி சொன்னார்கள். அப்படி நம் நாட்டிற்கு வேண்டிய அபிவிருத்திகள் செய்ய, இச்சிறு சேமிப்பு இயக்கத்தின் மூலம் ஒரு பத்து கோடி ரூபாய் திரட்டினால் இந்த இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நமது காரியங்களை நிறைவேற்றிக் கொள்ளமுடியும். அதிகாரிகள் தங்கள் அதிகாரத்தைப் பயன்படுத்தி மக்களை பயமுறுத்தி வாங்குகிறார்கள் என்று சொல்கிறார்கள். உதாரணமாக, சேல்ஸ் டாக்ஸ் ஆபீஸரை எடுத்துக் கொண்டால் அவர் போக வேண்டியதில்லை, அவரது ப்யூனை அனுப்பினால் போதும், உடனே வியாபாரிகள் பணத்தைக் கொடுத்து விடுகிறார்கள். ஏனெனில், ஆபீஸர் வந்தால் கடைக்குள் வந்து கணக்குகளை பார்த்துவிடப் போகிறாரே என்ற அச்சம் அவர்களுக்கு ஏற்படுகிறது. ஆகவே அதற்கு பயந்து அவரது ப்யூன் வந்து கேட்டாலே போதும் என்று கூறி கொடுத்துவிடுகிறார்கள். இது எதைக்குறிக்கிறது.

**Sri O. VENKATASUBBA REDDI** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நமது நாட்டில் 40 வருடங்களுக்கு முன்பு நெல் அரைக்கும் இயந்திரங்கள் வர ஆரம்பித்தது. ஆனால் அது வந்த காலத்தில் ஒரு தாலூகாவிற்கு ஒன்று அல்லது இரண்டு லைசென்ஸுகள் பெற்றுத்தான் அது துவங்க ஆரம்பித்தது. அதன்பின் 20 வருடங்களுக்குப் பிறகு ஐந்து அல்லது பத்து இயந்திரங்கள் இருந்து வந்தன. 1949-ல் நெல் மிஷின்களை குறைக்க வேண்டும், கைக்குத்தலை கொண்டு வரவேண்டும் என்று அறிக்கை வந்த உடன் ஒவ்வொரு கிராமத்திற்கும் 10 மனுக்கள் வீதம் நெல் இயந்திரங்களுக்காக மனுக்கள் கொடுக்க ஆரம்பித்து விட்டார்கள். இவ்விதமாக ஆயிரக்கணக்கான மனுக்கள் வர ஆரம்பித்தன. எதிலும் ரெஸ்ட்ரிக்‌ஷன் என்று சொன்ன உடனே ஏராளமான மனுக்கள் வருவது சகஜமாக இருந்து வருகிறது. அதுபோல் இப்போது நில உச்ச வரம்புச் சட்டத்தை கொண்டு வரப் போகிறோம். முதலில் இப்போது அதிகமான நிலம் வாங்கக்கூடாது என்கிற ஒரு சட்டம் கொண்டு வர வேண்டுமென்று சொல்லப்படுகிறது. இதற்கு முன் செய்ய வேண்டியது என்ன என்பதைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். ஒரு கிராமத்தில் ஒரு பட்டாதாருக்கு 10 எக்கர் நிலம் இருக்கிறது என்றால் அது இருபது இடங்களில் இருக்கின்றன. இதனால் அவர்களுக்கு இதில் விவசாயம் செய்து அதிக பலன் கிடைக்க மிக கஷ்டமாய் இருக்கிறது. அதை பரிவர்த்தனை மூலம் பிளாட் ப்ளாட்டாக இருக்க முதலில் வசதி செய்ய வேண்டும். இதற்கு ஒருவர் ஒத்துக்கொண்டால் மற்றவர்கள் ஒத்துக் கொள்வதில்லை. முதலாவதாக கம்பல்ஸரி எக்ஸ்சேஞ்ச் ஆக்ட் கொண்டுவர வேண்டும். அவரவர்க்கு இருக்கின்ற அல்லது இருக்க வேண்டிய நிலங்கள் ஒரே பிளாட்டாக அமைய வேண்டும். அமைந்த பிறகுதான் இது சுமுகமாக நடந்தேற முடியும். அப்போது உணவு உற்பத்தியும் பாதிக்காமல் இருக்கும் என்பது என்னுடைய கருத்து. நம்முடைய செங்கல்பட்டு, தென்னாற்காடு, வட ஆற்காடு போன்ற ஜில்லாக்களில் ஏரிகள் மூலம் நீர்ப்பாசனம் கிடைக்கிறது. சில ஏரிகளுக்கு இரண்டு மைல் ரேடியஸ் இலம் வருகிறது. சில இடங்களில் 20 மைல் ரேடியஸ் இருந்தாலும் போதுமான தண்ணீர் வரவு இருக்காது. இதற்கு அதிக வருவாயுள்ள ஏரியிலிருந்து ஜலத்தை ஜலமில்லாத ஏரிகளுக்கு திருப்பி விடுவதற்கு சட்டம் கொண்டு வரவேண்டும். அதாவது இன்ஜினியர்களுக்கும் இவ்விதம் செய்ய வருவாய் குறைவாக இருக்கிற ஏரிகளுக்கு தண்ணீரை திருப்பி விடுவதற்கு வேண்டிய அதிகாரம் அளிக்க

3-20 p.m.

[Sri O. Venkatasbuba Reddi] [12th February 1958

வேண்டும். அதன் பிறகு அதிக நிலத்தை வாங்கக்கூடாது என்று சட்டம் கொண்டு வரவேண்டும். இப்போது சட்டம் வருகிறது என்று மிராசுதார்கள் எல்லாம். அறிந்து முன்னேற்பாடுகள் செய்து வருவதாக இங்கு பல அங்கத்தினர்களால் சொல்லப்பட்டது. ஆனால் சிலர் தன்னுடைய நிலங்களை ஒன்றுபடுத்துவதற்கு ஒருவனிடமிருந்து 10 எக்கர் நிலம் வாங்க வேண்டியிருக்கும். அதே மாதிரி இதற்காக 10 எக்கர் வெளியில் கொடுக்க வேண்டியது இருக்கும். அதற்கு இது இடையூருக இருக்கும் என்பதை தெரிவித்துக்கொள்ளகிறேன். நமது நாட்டில் இன்டஸ்ட்ரீஸ் என்பது இப்போதுதான் துவங்க ஆரம்பித்து இருக்கிறது. இப்போது இண்டஸ்ட்ரீஸ்களுக்கு உபயோகிக்கப்பட்டு வரும் மெஷின்களுக்கு எல்லாம் ஆங்கில பெயர்கள்தான் உபயோகப்படுத்தப் பட்டுவருகிறது. அதே மாதிரி அதனுடைய பாகங்களுக்கும் ஆங்கிலப் பெயர்கள்தான் உபயோகப்படுத்தப்பட்டு வருகிறது. இதற்கு முன்னால் தமிழ் வந்தபோதும் இது மாதிரி பல கஷ்டங்களும் ஏற்பட்டிருக்கின்றன. செங்கல்பட்டில் ஒரு வக்கீல் இருந்தாராம். அவர் தமிழில்தான் கேஸ்கள் பூராவும் நடத்திக்கொண்டிருந்தார். பின்னால் இங்கிலீஷ் வந்த போது அவருக்கு சரியாக கேஸ் நடத்த முடியவில்லை. அதன்பின் அவர் மாப்பிளையை இங்கிலீஷ் படிக்க வைத்து கேஸ்களை நடத்தி வந்தாராம். ஆகவே திடீரென்று பாஷையை மாற்றுவது மிகக் கஷ்டம். இன்றைக்கு டாக்டர்களிடம் போனால் மிக்ஸர் என்றுதான் சொல்லுகிறார்கள். அதை தமிழில் சொல்லுவதில்லை. இது மாதிரி இன்று எல்லாம் இங்கிலீஷில்தான் இருந்துவருகிறது. ஆதலால் எது எப்படி இருந்த போதிலும் இந்த பாஷை விஷயத்தில் இண்டஸ்ட்ரீஸ் பொறுத்தவரையில் மெஷின்களில் இருக்கும் பாகங்களுக்கு பிரதேச மொழியில் அதற்கு சரியான பெயர் வருவதுவரையிலும் ஆங்கில பெயர்களே இருந்தால் சுமூகமாக இருக்கும் என்றும் அப்படி இருக்க செய்வதுதான் நல்லது என்றும் எடுத்துக்காட்ட விரும்புகிறேன். தவிர இன்று இரண்டு நாட்களாக இங்கு நடைபெறுவதைப்பார்த்தால் என்னவெல்லாமோ தோன்றுகிறது. கண்ணால் நேரில் பாராமல் பலர் பல விஷயங்களையும் கருப்புக்கொடி காட்டிய விஷயத்தைப்பற்றியும் ராமநாதபுரம் விஷயத்தைப்பற்றியும் பேசிவருகிறார்கள். நேரில் பார்த்தவர்கள்தான் பேசுகிறார்கள் என்பதே சந்தேகம். இந்த சம்பவங்கள் நடந்தபொழுது கழகத்தலைவர்கள் எல்லாம் ஜெயிலில் இருந்தார்கள். யாரும் நேரில் பார்க்கவில்லை. ஜவஹர்லால் நேரு அவர்கள் குறிப்பிட்டிருந்த சமயத்திற்கு முன்னால் வந்துவிட்டார்கள். அங்கே சுமார் இரண்டாயிரம் பேர் நின்றுகொண்டிருந்தார்கள். நான் அந்த சமயத்தில் போய் விட்டேன். எனக்கு இந்த விபரங்கள் தெரியாது. ஆனால் தெய்வாதீனமாக 4 போலீஸ் வான்கள் அங்கே வந்தன. அதன்பிறகு என்னுடைய காரை மத்தியில் போகச் சொல்லி முன்னும் பின்னும் போலீஸ் கார்கள் வந்துகொண்டிருந்தன. இந்த கல்வீச்சுக்கள் யாருடைய இன்ஸ்ட்ரக்ஷன்பேரில் நடந்தது என்று எனக்கு தெரியாது. பல்லாவரம் ஆஸ்பத்திரிக்கு பக்கத்தில் போலீஸ்கார்கள் வந்துகொண்டிருந்தபோது போலீஸ் கார்கள் மீது கல் வீசப்பட்டது. கல்லால் அடித்தார்கள். அதன் பின்னால்தான் போலீஸ்காரரர்கள் இறங்கி அடிக்க ஆரம்பித்தார்கள். அதல்லாமல் போலீஸ் கலவரங்கள் ஒன்றும் நடக்கவில்லை. ஆரம்பத்தில் ஒருவர் மேல் ஒருவர் விழுந்து ஜனங்கள் ஓட ஆரம்பித்தார்கள். இதனால் பலருக்கு காயங்கள் பட்டன. ஆனால் நேற்று இவர்கள் குறிப்பிடுகிற போது போலீஸார் வீடுகளில் போய் அடித்தார்கள் என்று சொன்னார்கள். அது தவறு. அடிபட்டவர்கள் தங்களுடைய வீடுகளுக்குப் போனபோது வீட்டிலுள்ளவர்கள் ஏன் நேருஜிக்குக் கருப்புக்கொடி காட்டினீர்கள் நையப்புடைத்தார்கள். அதை எதிர் கட்சிக்காரரர்கள் போலீஸார் அடித்ததாகச் சொல்லுகிறார்கள். இது விஷயம் பல இடங்களில் சொல்லுகிறார்கள். சாரதி அவர்கள் குறிப்பிட்டார்கள்—மூன்றும் தேதியே என் தலைவர்களை அரஸ்ட் செய்ய வேண்டுமென்று. மூன்றுந் தேதி காலையிலே அரஸ்ட் செய்திருந்தால் திருவல்லிக்கேணியில் கலாட்டா நடந்திருக்காது. நான் காங்கிரஸ் சத்தியாகிரக காலத்தில் பார்த்திருக்கிறேன். ஒருவர் முதலாவது போவார். நான்கு பேர்கள் பக்கத்தில் இருப்பார்கள். யாராவது அங்கு போனால், இது சத்தியாகிரகம் நடக்கின்ற இடம், இங்கு யாரும்

வரக்கூடாது என்றும் smooth-ஆக போக வேண்டும் என்றும் சட்டத்திற்கு உட்பட்டு நடக்க வேண்டும் என்றும் சொல்லுவார்கள். அப்படியல்ல திராவிட கழகத் தலைவர்கள் சொல்லுவது, ஏதோ ஒன்று சொல்லி விடுகிறார்கள். அப்படி வந்தால் அடிபட்டுக் கொண்டு தான் வீட்டுக்கு போக வேண்டியிருக்கிறது. நான் ஒன்று சொல்லுகிறேன். 10 வருஷங்களுக்கு முன்பு இருக்கும். ராஜாஜி அவர்கள் கவர்னர்-ஜெனரலாக இருக்கும்போது திருவண்ணாமலைக்கு விஜயம் செய்தார். அக்காலத்தில் பெரியார் கல்யாணம் ஏற்பாடாகியிருந்தது. இந்தக் கல்யாணத்திற்கு ராஜாஜி தான் காரணம் என்று சொல்லப்பட்டு வந்தது. திராவிட முன்னேற்றக் கட்சித் தலைவராக இருக்கும் ஸி. என். அண்ணாதுரை அவர்களே எத்தனையோ பொதுக்கூட்டங்களில் ராஜாஜியைப் பற்றி இழித்துப் பழித்துப் பல பெயர்கள் வைத்துப் பேசினார் என்பதை அவர் நினைவுப் படுத்திப் பார்க்கவேண்டும். இன்று ராஜாஜி அவர்கள் ஹிந்தி படிக்கக் கூடாது என்று ஒரு வார்த்தை சொன்னதற்காக, காங்கிரஸ் கட்சியிலிருந்த ராஜாஜியே இம்மாதிரி சொல்லுகிறார் என்று அதைப் பயன்படுத்துகிறார்கள். நான் சொல்லுவேன். ராஜாஜி அவர்கள் ஒரு விஷயத்தைப் பற்றி இன்று பேசினால், அதனுடைய காரணத்தை இன்றைக்கோ அல்லது ஒரு வருஷத்திலோ கண்டுபிடிக்க முடியாது. 5 வருஷங்கள் அல்லது 10 வருஷங்களுக்குப் பிறகுதான் அதனுடைய பலனைக் காணலாம். இன்றைக்கு ஹிந்தி கூடாது என்பதன் உண்மை 10 வருஷங்களுக்குப் பிறகு தான் தெரிந்துகொள்ள முடியும். அவர் இப்போது பேசியிருப்பதைத் தங்களுக்காகப் பேசி விட்டார் என்று சொல்வது மிகத் தவறு என்பதை இந்தச் சபை முன்பு எடுத்துக் காட்ட விரும்புகிறேன் . . .

SRI P. S. SANTHANAM : சட்ட மன்ற உதவித் தலைவர் அவர்களே, இப்போது கவர்னர் அவர்களின் உரையையொட்டி சில வார்த்தைகளைப் பேச முன் வந்திருக்கிறேன். 3-31 p.m.

முதலிலே மொழிப் பிரச்னையை எடுத்துக் கொள்வோமானால், இங்குள்ள அங்கத்தினர்கள் எந்த மொழியை ஆதரித்துப் பேசுகிறார்களோ அந்த மொழிப் பிறப்புக்குப் பிறந்தவர்கள்; தமிழை ஆதரித்துப் பேசக் கூடியவர்கள் தமிழருக்குப் பிறந்தவர்கள். கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தில் தோன்றியது மனிதப் பிறவி. தமிழகத்திலே தோன்றியவன் திராவிடன். இந்தத் திராவிடப் பண்பு இந்த நாட்டிலே இல்லையென்று சிலர் வாதிக்கிறார்கள். பகவத் கீதை, கர்ண பர்வம் முதலியவைகளை எடுத்துப் பார்த்தால் கர்ணனுக்கு திராவிடரும் சிங்களவரும் உதவி புரிந்ததாக இருக்கிறது. அந்த நிலையிலே திராவிட மொழி, திராவிட கலாச்சாரம், திராவிட நாகரீகத்தை கையாள வேண்டும். மற்றொரு அந்நிய மொழிக்கு அடிமைப்படக் கூடாது என்பது திராவிட முன்னேற்றக் கழகத்தின் கொள்கை. அந்தக் கொள்கையை எனது தலைவர் அவர்கள் அழுத்தம் திருத்தமாக சொல்லியிருக்கிறார். அவர்கள் ஹிந்தி மொழியை ஆதரிப்பதாக, ஹிந்தி இந்த நாட்டுக்கு உகந்தது என்று ஒத்துக் கொண்டதாக சில அமைச்சர்களும், சில அங்கத்தினர்களும் வெளியில் பிரசாரம் செய்து வருகிறார்கள். உண்மையில் எங்கள் தலைவர் கட்டளைப்படி இயங்கும் கட்சி என்றும் தனி நாடு பிரியவேண்டும், திராவிட மொழி எங்கும் உபயோகப்படவேண்டும் என்று இருக்கக் கூடிய இந்த நேரத்தில் ஹிந்தியை அவர்கள் ஒத்துக் கொள்வார்களா என்பதை உணர வேண்டும்.

நிற்க, கவர்னர் உரையிலே எல்லைப் பிரச்னையை எடுத்துக் கொள்வோமானால் நரி நாரையை விருந்துக்கு அழைத்தார் போல் இருக்கிறது. நரி நாரைக்கு ஒரு பரந்த தட்டிலே பாயசத்தை ஊற்றிச் சாப்பிடச் சொன்னது போன்ற தன்மையாயிருக்கிறது இந்த எல்லைப் பிரச்னை. உண்மையிலேயே மக்கள் எல்லைப் பிரச்னையில் சென்னைக்கு, தமிழகம் நல்லதொரு வட எல்லையை அடையவேண்டுமென்று எண்ணிக் கொண்டிருந்தார்கள். இப்போது அடைந்திருப்பதை நோக்குங்கால் வளம் பொருந்திய செங்கல்பட்டு ஜில்லாவில் சில பகுதிகள் ஆந்திராவில் சேரவும் ஆந்திராவில் உள்ளதாகப்பட்ட, கல் மேடு, பாறைகள் கொண்ட தட்டுப் போல—பிரதேசம் சென்னையோடு சேருகிறது என்றால் யார்தான் வருத்தப் பட மாட்டார்கள் என்பதை உணரவேண்டும்.

[Sri P. S. Santhanam] [12th February 1958

நிற்க, கவர்னர் உரையில் விடுமுறை நாட்களைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார்கள். அதைப் பார்த்து சந்தோஷப் படக்கூடியவர்கள் ஒரு சிலரே. இந்த நாட்டின் மக்கள் சுகாதாரமாக வாழச் செய்கிறவர்கள், மக்களுக்கு நல்லதொரு சேவை செய்யக் கூடியவர்கள், பாட்டாளி மக்கள், நகர சுத்தித் தொழிலாளர்கள். நாட்டிலே நன்றியுள்ள பிராணியாக நாயைச் சொல்லுவார்கள். நன்றாக உழைக்கக் கூடியது மாடு. அவர்கள் நாய் போல உழைத்து, மாடு போல உழைத்து வருகிறார்கள். அவர்கள் தோன்றிய நாள் முதல், அவர்கள் அந்தத் தொழிலில் சேர்ந்த நாள் முதல் விடுமுறை கிடையாது. அவர்களுடைய ஊதியத்தைப் பார்ப்போமானால் நாட்டிலுள்ள அரசாங்க சிப்பந்திகளைக் காட்டிலும் குறைவான சொற்ப ஊதியத்தை வாங்கக்கூடியவர்கள் நகர சுத்தித் தொழிலாளர்கள். ஆட்சி பீடத்தில் இருக்கும் நாம் இன்றைக்கு நகர சுத்தித் தொழிலாளர்கள் விஷயத்தில் எந்த விதமான சட்டமும் கொண்டு வரவில்லை என்பதை உற்று நோக்குங்காலத்தில், இந்தப் பாட்டாளி மக்களுக்குப் பயன்படக் கூடிய ஒரு வித நன்மையும் இல்லை என்பதைப் பார்த்து வருத்தப்படவேண்டிய நிலைமை ஏற்படுகிறது.

நிற்க, இந்த உரையிலே, இந்த நாட்டின் நல்லதொரு குணம் படைத்த பாட்டாளி மக்களாக இருக்கக் கூடிய, சுமார் 8-ல் 3 பங்கு இருக்கக் கூடிய ஹரிஜன மக்கள், காந்தியாரினாலே போற்றி வளர்க்கப்பட்ட மக்கள். ஆதித் திராவிட மக்கள் நலனைக் கருதி அவர்களுக்கு வேண்டிய நன்மைகள் செய்ய வேண்டிய திட்டங்கள் இந்த உரையிலே காணப்படவில்லை. பாவம், இங்கு இருக்கக் கூடிய ஹரிஜன மக்கள் பற்றிய நினைவு இல்லையோ, அல்லது இங்கு இருக்கக் கூடிய அமைச்சர்கள் கவர்னர் பெருமானுக்கு ஞாபகப்படுத்தவில்லையோ என்று நான் வருத்தப்படுகிறேன். உண்மையிலேயே ஏன் மறந்தார்கள் ? மறக்கக் காரணம் என்ன ? இந்தப் பத்து ஆண்டுகளில் அவர்கள் நல்ல நிலைமைக்கு, முன்னுக்கு வந்து விட்டார்கள் என்ற எண்ணமோ என்னவோ தெரியவில்லை. ஆனால் கவர்னர் பெருமான் உரையிலே அவர்கள் குறைகளைச் சேர்க்காவிட்டாலும் அமைச்சர்களும் இந்தச் சட்ட மன்ற உறுப்பினர்களும் சேர்ந்த யந்திரம் போல் உழைக்கக் கூடியவர்களுக்கு எல்லா நன்மைகளையும் செய்ய ஏற்பாடு செய்யவேண்டும். தாழ்த்தப்பட்ட மக்களுக்கு, இந்த சட்ட சபையில் உள்ளவர்கள், அந்தந்தத் தொகுதியில் நேரக் கூடிய அக்கிரமங்களையும் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ஏற்படும் இன்னல்களையும் இந்தச் சபையில் முன்பே எடுத்துக் கூறினார்கள். அந்த மாதிரியான இன்னல்கள் இடையூறுகள் ஏற்படா வண்ணம் அரசாங்கத்தார் நல்லதொரு திட்டங்களைத் தீட்டி எந்த முறையிலே மதுவிலக்குச் சட்டத்தை அமுல் நடத்தவேண்டுமென்று திட்டங்கள் போடப்படுகிறதோ அதைப் போலவே மக்களால் புறக்கணிக்கப்பட்ட இந்த தாழ்த்தப்பட்ட மக்களுக்கு இன்னல்கள், இடையூறுகள் ஏற்படா வண்ணம் பாதுகாக்க வேண்டும். முதுகுளத்தூர் மீண்டும் வராமல் பார்த்துக் கொள்ளவேண்டுமென்று சொன்னார். நான் அதைப் பாராட்டுகிறேன், ஒப்புக் கொள்ளுகிறேன். இந்த மாகாணத்தில் நமக்குள்ளாக ஜாதிப் பூசலும் ஜாதிச் சண்டையும் இல்லாமல் இருந்தால் எல்லோரும் சுகமாக வாழலாம். கூடிய சீக்கிரத்தில் திராவிட நாடு பிரிய வேண்டும், திராவிடத் தமிழ் மொழி ஆட்சி செலுத்தவேண்டும் என்று கூறி என் உரையை முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

3-40 p.m. * **SRIMATHI KAMALAMBUJA AMMAL** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நமது மேன்மை தங்கிய கவர்னர் அவர்களின் உரையின் மீது ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். முதன் முதலாக கவர்னர் பெருமான் இரு சபைகளையும் கூட்டி வைத்து உரையாற்றப் போகிறார் என்ற அந்த நாளிலே ஒரு கட்சியினர் அவர் முகத்தைக் கூட பார்க்கக்கூடாது என்ற அளவிலே ஒதுங்கி நின்றார்கள். அவர் வடநாட்டவர் என்ற காரணம் இங்கு கூறப்படுகிறது. வடநாட்டினருக்குத் தான் அப்படிச் செய்கிறார்களா என்று பார்க்கும்போது அவர்கள் கட்சிக் கொள்கையே அரசாங்கத்திற்கு விரோதமாக நடக்கவேண்டும், அரசாங்கத்திற்கு எதிராக நடக்கவேண்டுமென்பது தான் என்று உறுதிப்படுகிறது. நமது கனம் இராஜகோபாலாச்சாரி அவர்கள் கவர்னர் ஜெனரலாக தேர்ந்தெடுக்கப்பட்ட பொழுது தென் நாட்டவர் ஒருவர் வட நாடு சென்றிருக்கிறார் என்று

12th February 1958] [Srimathi Kamalambuja Ammal]

சந்தோஷப்பட்டார்களா, அல்லது மகிழ்ச்சி தெரிவித்தார்களா என்றால், தெரிவிக்கவில்லை என்றுதான் சொல்லவேண்டும். அப்பொழுது என்ன கூறினார்கள் ? ஆரியர் ஒரு தமிழருக்கு மேலோங்கி நிற்கிறார் என்று சொன்னார்கள். ஆரிய சமுதாயம் நாட்டை ஆளுகிறது என்று குறிப்பிட்டார்கள். அன்று ஆரியராக இருந்த இராஜாஜி இன்று அண்ணா அவர்களுக்கு அண்ணனாக காணப்படுகிறாரோ என்னவோ? அது தான் புதுமையாகத் தெரிகிறது.

ராஜாஜி அவர்கள் இந்தி வேண்டாம் என்று சொல்லுவதாகத் தெரியவில்லை. நேற்று கூட பத்திரிகையிலே பார்த்தேன். பள்ளிக்கூடங்களில் இந்தி படிக்கவேண்டியது அவசியம் என்று சொல்லியிருக்கிறார்கள். அவர் கருத்தைப் புரிந்து கொள்ளாத வகையிலோ என்னவோ இந்தியை அவர் எதிர்க்கிறார் என்று சொல்லுகிறார்கள். பிரதேச மொழி தமிழாக இருக்கும் வரையிலே, மத்திய அரசாங்கத்தில் ஆட்சி மொழி இந்தியாக இருப்பதில் ஆட்சேபணை என்ன இருக்கிறது என்று கேட்கிறேன். ஒரு நயா பைசா அதிகமாக கொடுத்து ஏழை ஜனங்கள் எங்கே பஸ்ஸில் பிரயாணம் செய்யப்போகிறார்கள் என்று தகராறு சொல்லக்கூடியவர்கள், நம்முடைய பிரதேசத்தில் இருப்பவர்கள், இங்கு இருக்கக்கூடிய அரசாங்கத்தைத்தான் எதிர்க்கப் போகிறார்களே தவிர, இந்தப் பிரதேசத்தை விட்டு கடந்து போய் மத்திய அரசாங்கத்தில் ஒன்றும் செய்யப் போவதில்லை. ஏழைகளுக்கு உண்மையாக நன்மை செய்யக்கூடாது என்ற எண்ணம் இருந்தால் தான், அவர்கள் இந்தி படிக்கக்கூடாது என்று மறைமுகமாக அவர்கள் முற்போக்கைக் கண்டிக்கிறார்கள் என்று சொல்லவேண்டும். மத்திய அரசாங்கத்துடன் மற்ற மாகாணங்கள் தொடர்பு கொள்வதற்காக மத்திய அரசாங்கத்தில் இந்தியை அரசாங்க மொழியாக வைத்துக்கொள்ள வேண்டுமென்று சொல்லுகிறார்களே தவிர, நம்முடைய ராஜ்ஜியத்தில் நம்முடைய பிரதேச மொழியில் தான் ஆட்சி நடைபெறுகிறது. 1,922 அரசாங்க அலுவலகங்களில் இப்பொழுது தமிழ் கொண்டுவரப்பட்டிருக்கிறது. இன்னும் கோர்ட்டுகளிலும் தமிழ் கொண்டுவரப்படும். அதுவும் அல்லாமல் இப்பொழுது ஆங்கிலம் தெரிந்தவர்கள், தமிழ் வேண்டும் என்று சொல்லக்கூடியவர்கள் தாங்கள் ஆங்கிலம் படித்த காரணத்தினால் ஆங்கிலத்திலேயே கடிதப் போக்குவரத்து வைத்துக்கொண்டிருக்கிறார்கள். மேலுக்கு வெளிக்கு மாத்திரம் தமிழ் என்று சொல்லிக்கொண்டிருப்பவர்களின் உள் நடவடிக்கையை பார்க்கும் பொழுது பூராவும் ஆங்கிலத்தில் இருக்கிறது. இந்தியை மத்திய அரசாங்கத்தின் ஆட்சிமொழியாக வைக்கவேண்டுமென்று சொல்லுவதில் ஒன்றும் தவறு இல்லை. மக்கள் மீது இந்தியை திணிக்கும் நோக்கம் அரசாங்கத்திற்கு இல்லை என்பது நன்கு புலனாகிறது. அதுவும் இல்லாமல் ராஜாஜி இந்தி வேண்டாம் என்று சொல்லுகிறார்கள் என்று இப்பொழுது சொல்லுகிறார்கள். அப்பொழுது அவர் பார்ப்பனர், கூடாது என்று சொன்னார்கள். இன்று அவர் பகலவன் போல் பக்கத்தில் நின்று வெளிச்சம் கொடுக்கிறார் போலும்! பகலவனுக்கு இரண்டு சக்தி உண்டு. ஒன்று உணவு தான்யத்தை உற்பத்தி செய்து ஆத்மாக்களை ஜீவிக்கச் செய்யும் சக்தி; மற்றொன்று கிருமிகளைக் கொன்று நசுக்கிப் பொசுக்கும் சக்தி. அந்த இரண்டு வித சக்திகளையும் படைத்தவர் ஆசாரியார் என்று அவர்கள் நினைக்கிறார்கள் போலும்! ஆசாரியார் இந்தி பள்ளிக்கூடங்களில் இருக்கவேண்டுமென்று சொல்லுவதிலிருந்து, பிற்கால சந்ததிகளாகிய பள்ளிப் பிள்ளைகள் இந்தியைக் கற்றுக் கொள்ளவேண்டுமென்று விரும்புவது புலனாகிறது. அப்படி அவர்கள் இந்தியைப் படித்துகொண்டே வந்தால் இந்தி ஆட்சி மொழி ஆகவேண்டுமென்று சொல்லவேண்டிய கட்டமில்லாமலே எல்லோரும் இந்தி கற்றுக்கொண்டவுடன், தானாகவே இந்தி ஆட்சி மொழியாகிவிடும். அவர் இந்தி இப்பொழுது ஆட்சி மொழி ஆகவேண்டாம் என்று சொல்லுவது போல் சொல்லுகிறார். ஆனால் பள்ளிக்கூடத்தில் இந்தி வரக்கூடாது என்று அவர் சொல்லவில்லை. அவர் அப்படிச் சொன்னால், அவர் இந்தியை விரும்பவில்லை என்பதை நாம் ஒத்துக்கொள்ளலாம்.

எல்லைப் பிரச்சினையைப் பற்றி கவர்னர் அவர்கள் தன்னுடைய உரையிலே குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆனால் ஏதோ இரு அரசாங்கத்தினருக்கும் தங்களுக்குள்ளே குறைபாடுகள் இருந்தாலும் கூட அதை ஓரளவு சமரஸ

முறையிலே ஒப்புக் கொண்டிருக்கிறார்கள் என்ற வகையிலே கூறியிருக்கிறார்கள். அது நம் சட்ட சபைக்கு வரும்போது அதில் ஏதாவது குறைபாடுகள் இருக்கின்றனவா, இல்லையா என்பது பற்றி ஆராய்ந்துக்கொள்ளலாம் என்று இப்பொழுது விட்டுவிடுகிறேன்.

தென் வட்டாரக் குழுவில் நீர்ப்பாசனத் திட்டங்கள் சம்பந்தமாக நம் அரசாங்கம் கூர்ந்து கவனிக்கவேண்டியிருக்கிறது. நம்மிடம் ஆறுகள் இல்லை என்று ஒரு நண்பர் சொன்னபோது, ஆறுகள் தான் இல்லையென்றால் அருவிகள் கூடவா இல்லை என்று எதிர்க்கட்சிக்காரர் ஒருவர் சொன்னார். வடநாட்டினரைவிட நாம் அறிவில் சிறந்தவர்கள் என்பதில் சந்தேகம் இல்லை. நம்முடைய நாட்டிலே ஆறுகள் இல்லையென்றாலும், அமைச்சர் குழுவிலே அறிஞர்கள் இருக்கிறார்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது. அவர்கள் கட்டாயம் இந்த வட்டாரக் குழுவில் நம் பிரதேசத்திற்கு வேண்டிய நீர்ப்பாசனத் திட்டங்களை வகுப்பார்கள். அவர்கள் கட்டாயம் இதற்கு வேண்டிய வழிவகைகள் செய்வார்கள் என்ற நம்பிக்கையோடு அதையும் நான் வரவேற்கிறேன்.

பெண் தொழிலாளர்களுக்கு மருத்துவ வசதி கொடுக்கப்படுவது மிகவும் போற்றத் தக்கது. மகப்பேறு காலம் பெண்களுக்கு ஒரு புனர் ஜன்மம் எடுக்கும் காலம் போன்றது. பணவசதி உள்ளவர்கள் தங்களுக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொள்ளமுடியும். ஆனால் தொழிலாளர்கள் குடும்பத்திலே அவர்கள் சாப்பாட்டிற்கே கஷ்டப்படும் நிலையில், அரசாங்கம் அவர்கள் பக்கத்தில் துணையாக இருந்து மருத்துவத்திற்கு உதவி செய்யாவிட்டால் பெரிய கஷ்டத்தை விளைவிக்கும். ஆகையால் அப்படிப்பட்ட நிலையான உதவி செய்வதற்கு சட்டம் வகுக்கப்படும் என்று கவர்னர் உரையில் கண்டிருப்பது பற்றி நான் மிகவும் பெருமைப்படுகிறேன்.

சிறு சேமிப்பு திட்ட இயக்கத்தினால் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தை நிறைவேற்றமுடியும் என்று இப்பொழுது அதை ஆரம்பித்திருக்கிறோம். சிறு சேமிப்பு திட்டத்திற்கு சட்டசபை அங்கத்தினர்களாகிய நாம் தான் ஒரு பிரசார குழுவாக அமையவேண்டும். கலெக்டர், தாசில்தார், ரெவின்யூ இன்ஸ்பெக்டர் இவர்கள் எல்லாம் சிறு சேமிப்பு திட்டத்தின் முக்கியத்துவத்தை பற்றி விரிவாகச் சொல்லுகிறார்கள். ஒரு சிலர் குறிப்பிட்டபடி அவர்கள் கட்டாயப்படுத்தி வாங்குவதை நான் பார்க்கவில்லை. என்னுடைய தொகுதியில் நான் கூட போயிருந்தேன். மக்களுக்கு இதைப்பற்றி என்ன செய்யவேண்டுமென்று விரிவாக எடுத்துச் சொன்னால், மக்களே வந்து உதவி செய்வதற்கு முன்வருவார்கள். ஐந்து ரூபாயும் அதற்கு அப்பாற்பட்ட பெரும் தொகையும் கொடுக்கலாம் என்ற வகையிலே பணம் வசூலிக்கப்படுகிறது. இந்தத் திட்டம் பணக்காரர்களுக்கு மட்டுமல்ல. ஏழைகளுக்கும் அரசாங்கத்தின் பங்கு உண்டு, அரசாங்கத் திட்டங்களிலும் பங்கு உண்டு. பணம் இல்லாத ஏழைகள் முதல் கொண்டு பெரிய பணக்காரர்கள் வரை எல்லோரும் இந்தத் திட்டத்திற்கு உதவி புரிந்து நம்முடைய அரசாங்கம் அநேக திட்டங்களை நிறைவேற்றுவதற்கு சாதகமாக இருக்க வேண்டும். எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் சரி, அவரவர்கள் தொகுதியில் அரசாங்க அதிகாரிகளோடு இருந்து இந்தத் திட்டத்தை நல்ல முறையில் வெற்றிகரமாக நிறைவேற்றவேண்டும் என்று இந்தச் சபையிலே கேட்டுக் கொள்ளுகிறேன்.

கவர்னர் பெருமான் உரையிலே ஒரு பெருந்தன்மை காணப்படுகிறது. நம்முடைய கிண்டி தொழில் எஸ்டேட் பற்றி குறிப்பிடும் போது நேருஜி வருகையின் போது நடந்த காலித்தனத்தைப் பற்றி ஒன்றும் குறிப்பிடாமல் பெருந்தன்மையோடு விட்டிருக்கிறார். நேருஜி அவர்கள் வந்தபொழுது தமிழ் நாட்டுப் பண்புக்கு விரோதமாக நடந்த அத்தனை செயல்களையும் குறிப்பிட்டால், தமிழர் என்று சொல்லிக்கொள்ளுவதே பாதிக்கப்படும், அப்படிப்பட்ட காரியங்களை குறிப்பிடக்கூடாது என்று பெருந்தன்மையோடு விட்டுவைத்திருக்கிறார். அவருடைய பெருந்தன்மைக்காக நான் அவரைப் பாராட்டுகிறேன்.

மின்சார வசதியைப் பற்றி இன்னும் அது ஆயிரம் கிராமங்களுக்கு மேல் விஸ்தரிக்கப்படப் போவதாக சொல்லப்பட்டிருக்கிறது. என்னுடைய தொகுதி ஆந்திரப் பிரிவினைக்குட்பட்ட பிரதேசமாக இருந்ததால் அங்கே

இரண்டு வருஷங்களாக மின்சார வசதி விஸ்தரிக்கப்படாமல் இருக்கிறது. இனிமேலாவது அந்த இடங்களில் மின்சார வசதியை விஸ்தரிப்பதற்கு வேண்டிய முயற்சிகளை எடுத்துக் கொள்ளவேண்டுமென்று நான் அமைச்சர் அவர்களை கேட்டுக்கொள்ளுகிறேன். இதற்கு முன்னாலேயே நான் அவரிடம் இதுபற்றி தகவல் சொல்லியிருக்கிறேன். அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்து கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

**Sri S. A. M. ANNAMALAI ODAYAR :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, சட்ட சபையிலே மேன்மை தங்கிய கவர்னர் அவர்கள் ஆற்றிய உரையின் மீது ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். 3-50 p.m.

எங்கள் தென் ஆற்காடு ஜில்லாவிலே, ஐந்தாண்டுத் திட்டத்திலே சாத்தனூர் திட்டம் நிறைவேற்றப்பட்டு விட்டதால், மூன்று தாலூக்காக்கள், அதாவது விழுப்புரம், திருக்கோயிலூர், கடலூர் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கின்றன. 1946-லிருந்து 1952 வரை, மழை இல்லாமல் இருந்தும் கூட பெண்ணை ஆற்றிலே வரும் ஜலத்தைக் கொண்டு, பாசன வசதி கிடைக்கக்கூடிய நிலங்கள் நல்ல நிலைமையில் எந்தவிதமான குந்தகமும் இல்லாமல் சாகுபடியாய்க்கொண்டு வந்தன. தென் ஆற்காடு, வட ஆற்காடு ஜில்லாக்களிலே மொத்தம் 20,000 ஏக்கர் நீர்ப்பாசனத்திற்காக இந்தத் திட்டத்தைத் தீட்டினார்கள். இந்தத் திட்டத்தினால் மேலே குறிப்பிட்ட 3 தாலூக்காக்களில் 40,000 நஞ்சை நிலங்கள் பாதிக்கப்பட்டிருக்கின்றன. இந்தத் திட்டத்தைத் தீட்டியதற்காக நான் சர்க்காரைக் குறை கூறவில்லை. இருந்தாலும் கூட, பெண்ணையாற்றின் கீழ் ஏற்கனவே உள்ள பாசன வசதியை பாதிக்காமல், அவர்களுக்கு வேண்டிய தண்ணீரை விட்டு விட்டு மேற்கொண்டு வரும் தண்ணீரைத் தேக்கி, பாசன வசதி செய்து கொடுத்தால் அனுகூலமாக இருக்கும் என்பதைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். இதை அவர்கள் உடனடியாகச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இந்தத் திட்டத்தைப்பற்றி நான் ஏதாவது சொன்னால், எதிர்க் கட்சியில் இருக்கிறேன் என்பதற்காகக் குறை சொல்லுகிறேன் என்று நினைக்கக்கூடும். இதற்காக ஒரு கமிஷனை நியமித்து பாதிக்கப்பட்ட பிரதேசங்களைப் பார்வையிட்டால் உண்மை விளங்கும். இதைத்தான் முன்னாள் முதலமைச்சர் ஸ்ரீ ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் அவர்கள் இந்த சாத்தனூர் திட்டம் நிறைவேற்றப்பட்டால், தென் ஆற்காடு ஜில்லாவில் இருக்கக்கூடிய நிலங்கள் எல்லாம் பாதிக்கப்படுமென்று தெரிவித்து இருக்கிறார்கள். இதை அமைச்சர் குழுவினரும், சர்க்காரும் பரிசீலனை செய்து ஒரு முடிவுக்கு வரவேண்டுமென்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, நமது சர்க்காரால் கொண்டுவரப்பட்டிருக்கும் சிறு சேமிப்புத் திட்டமானது சட்டாய சேமிப்புத் திட்டமாக மாறாமல், ஜனங்கள் அவர்களாக மனமுவந்து கொடுப்பதைப் பெற்றுக் கொள்ளவேண்டும். இவ்விதம் செய்தால் என்னுடைய கட்சியான ஜனநாயகக் காங்கிரஸுக்கு எந்தவிதமான ஆட்சேபணையும் கிடையாது. மக்களிடத்தில் சென்று கட்டாயப்படுத்தி வாங்க வேண்டாமென்றுதான் சொல்லுகிறோம். இதை கவனத்தில் கொண்டு, இனிமேலாவது சர்க்கார் அதிகாரிகள் மக்கள் மனமுவந்து கொடுப்பதை வாங்கிக்கொண்டு, திட்டத்தை நிறைவேற்றுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

மேலும், கவர்னர் பெருமான் நிலவுடமைக்கு வரம்பு கட்டுவதைப் பற்றிப் பேசியிருக்கிறார்கள். இனிமேல் எந்த மிராசுதாரும் நிலத்தை விரும்பி மேற்கொண்டுவாங்கப் போவதில்லை. கிராமங்களிலுள்ள நிலங்களை விற்றுவிட்டு, நகரப்புரங்களுக்குச் சென்று அங்கே வீடுகள் வாங்கியோ ஏதாவது வியாபாரம் செய்தோ பிழைப்புக்கு வழி தேடவேண்டிய நிலையில்தான் வரும். மேலும் நிலத்தை அதிகமாக வாங்க ஒருவரும் விரும்ப மாட்டார்கள். நிலவுடமைக்கு வரம்பு கட்டி, அதிகமாக நிலம் வைத்திருக்கக்கூடியவர்களிடமிருந்து நிலத்தைப் பெற்று நிலம் இல்லாதவர்களுக்கு விநியோகம் செய்வதற்கு சட்டமியற்றவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

[Sri S. A. M. Annamalai Odayar] [12th February 1958

இப்பொழுது விவசாய உபயோகத்திற்கு மின்சார சப்ளை செய்துகொண்டு வருகிறார்கள். மின்சாரத்தை பகல் நேரங்களில் சப்ளை செய்தால்தான் விவசாய உபயோகத்திற்கு நன்றாக இருக்கும். இரவு நேரங்களில் மின் சார சப்ளை செய்தால், கேழ்வரகு, நெல் முதலிய பயிர்களுக்கு எவ்வாறு பயன்படுமென்பது அங்கத்தினர்கள் அனைவருக்கும் தெரியும். இதைப் பற்றி காங்கிரஸ் கட்சியிலுள்ள அங்கத்தினர்கள் கூட நன்றாக எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். பகல் நேரத்தில் காலை 6 மணியிலிருந்து மாலை 6 மணி வரை மின்சார சப்ளை செய்து, இரவு நேரங்களில் சப்ளை செய்யாமல் இருந்தால் கூட நன்றாக இருக்கும். இதை உடனடியாகக் மின்சார இலாகா அமைச்சர் அவர்களும், விவசாய இலாகா அமைச்சர் அவர்களும் கவனித்து, ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

விவசாயத்திற்கு மின்சார சப்ளை செய்யும்பொழுது, விவசாயிகளிட மிருந்து "மினிமம் சார்ஜ்" வாங்குகிறார்கள். ஒரு குதிரை ஓட்டத்திற்கு, ஒரு வருடத்திற்கு ரூ. 50 வாங்குகிறார்கள். ஐந்து குதிரை ஓட்டமுள்ள மோட்டார் பம்பு செட்டுக்கு ரூ. 250, மின்சாரத்தை உபயோகித்தாலும் உபயோகிக்காவிட்டாலும் வாங்குகிறார்கள். பருவமழை தவறினால், கிணற் றிலே தண்ணீர் இருக்காது. மின்சாரத்தை உபயோகிக்காவிட்டால், முழுத் தொகையும் வாங்காமல், குறைவாக மின்சாரத்தை உபயோகித்திருந்தால் கூட அதற்கேற்றவாறு தள்ளுபடி செய்து கொடுப்பதற்கும் வழிவகை செய்து கொடுக்குமாறு கேட்டுக்கொள்கிறேன். பாதிக்கப்பட்ட பிரதேசங் களில் இந்த மாதிரி "மினிமம் காரண்டி" வாங்கக்கூடாது. ஒரு குதிரை ஓட்டத்திற்கு ரூ. 50 வைத்திருப்பதைக்கூடக் குறைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். நமது விவசாய அமைச்சர் அவர்கள் விழுப்புரம் தாலூகாவில் நன்றாகச் சுற்றுப் பிரயாணம் செய்தார்கள். வளவனூர் பகுதிக்கு வந்திருந்தபொழுது, அங்குள்ள விவசாயிகள் சாத்தனூர் திட்டம் வந்த பிறகு பெண்ணையாற்றில் ஜலம் வரவில்லை என்பதைத் தெளிவாக எடுத்துச் சொன்னார்கள். தென் ஆற்காடு ஜில்லாவிலே பாதிக்கப்பட்ட பிரதேசங்களைப் பற்றி கனம் விவசாய அமைச்சர் அவர்களுக்குத் தெரி யும். இதைப்பற்றி நன்றாக ஆலோசனை செய்து நல்லதோர் முடிவு காண்பார்கள் என்று நினைக்கிறேன்.

மேலும் ஒரு நாளைக்கு 400 கன அடி ஜலம் வீதம் 8 நாட்களுக்கு விட்டுக்கொண்டிருந்தார்கள். இரண்டாயிரம் கன அடி ஆக விட்டிருந் தால், 40,000 ஏக்கர் பாதிக்கப்பட்டிருக்காது என்று சொல்லிக்கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன்.

3-59 p.m. * **Sri K. P. PALANISWAMI** : உதவி சபா நாயகர் அவர்களே, மேன்மை தங்கிய கவர்னர் ஆற்றிய உரையின் மீது ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். ஆட்சிமொழிக் குழுவின் அறிக்கை வெளியான திலிருந்து ஆட்சி மொழிப் பிரச்னையில் பல சிக்கல்கள் ஏற்பட்டு, இன்று பொதுமக்கள் கருத்துக்களில் ஒருவகைக் குழப்பம் ஏற்பட்டிருக்கிறதை கவர்னர் அவர்கள் சுட்டிக்காட்டியிருக்கிறார்கள். நம்முடைய ராஜயத்தின் ஆட்சிமொழியைப் பொறுத்தவரை, தமிழ் ஆட்சி மொழியாக மேற் கொள்ளப்பட்டு, பொங்கல் தினத்தன்று 1,922 அலுவலகங்களில் தமிழ் ஆட்சிமொழியாக நடைபெறுகிறது என்பதைக்கேட்டு மிகவும் சந்தோஷப் படுகிறோம். எல்லைப்புறச் சீரமைப்புப் பற்றியவரை ஸ்ரீ படாஸ்கரின் தீர்ப்பை ஏற்றுக்கொண்டதை வரவேற்று, உண்மையிலேயே இது இரு ராஜ்யங்களுக்குமிடையே ஒற்றுமையை வளர்க்கும் என்று கூற விரும்பு கிறேன். பரம்பிக்குளம் பகுதியிலே மேற்கு நோக்கிப்பாயும் ஆறுகளின் தண்ணீரை கேரள ராஜ்யமும் சென்னை ராஜ்யமும் பங்கிடுவது குறித்து சீக்கிரத்திலேயே ஒரு உடன்பாடு ஏற்படுமென்பதை வரவேற்கிறேன். விவசா யிகளுக்கு பாதுகாப்பு அளிக்கவேண்டுமென்ற நோக்கத்துடன் நில உட மைக்கு வரம்பு கட்டப்படும் என்று சொல்லியிருப்பது வரவேற்கத்தக்கது. ஒரு தனிப்பட்ட நபர் இவ்வளவு தான் நிலத்தை வைத்திருக்கவேண்டும் என்று சட்டம் கொண்டு வருவதில் பல சிக்கல்கள் இருப்பதனால், ஒருவர் இவ்வளவு பூமிக்கு மேல் வாங்கக்கூடாது என்று முதலிலே நடைமுறை யில் கொண்டுவரவேண்டும்.

12th February 1958] [Sri K. P. Palaniswami]

நாம் எந்தச் சட்டத்தைப் போட்டாலும் அதைப் புரிந்து கொண்டு மக்கள் அதன் மூலம் நடப்பது இல்லை. மக்களிடத்தில் இப்பொழுது மனமாற்றம் ஏற்பட்டிருப்பதால் பல பிரச்னைகள் எழுகின்றன. மக்கள் அவைகளை சரிவர ஏற்றுக்கொள்வதாக இல்லை. அதனால் சட்டங்களை இயற்றும்போது அவைகளை நல்ல முறையில் மக்கள் பயன் அடையும் வகையில் இயற்றவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அத்துடன் சிறு சேமிப்பு விஷயமாக, எல்லோரும் அதில் ஆர்வம் காட்டி வருகிறார்கள். ஆர்வத்துடன் அதில் இறங்கி இருக்கிறார்கள். ஆனால் பல எதிர்க்கட்சிக்காரர்கள் இதற்கு உதவியாக இருக்கவில்லை என்று தெரிகிறது. இருந்தாலும் பணக்காரர்கள் மட்டும் இதற்குப் பணம் கொடுக்க வேண்டும் என்று சொல்லுகிறார்கள் என்று நினைக்கிறேன். பணக்காரர்கள் மட்டும் இதில் பணம் கொடுத்துவிட்டு அப்படி கொடுத்ததாக நினைத்து தங்களுக்கு ஏதோ கௌரவம் வந்துவிட்டது என்றும், சர்க்காருக்கு உதவி செய்து வருகிறோம் என்றும் நினைத்துக்கொள்ளுகிறார்கள். அப்படி இல்லாமல் ஏழைகளும் அதில் பணம் போட்டு நாட்டில் நடக்கக் கூடிய பல திட்டங்களில் அவர்களுக்கும் பங்கு இருக்கச் செய்யவேண்டும். அதனால் பணக்காரர்களிடம் மட்டும் பணத்தை வாங்காமல் ஏழைகளிடத்திலிருந்தும் பணத்தை வாங்குவதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். பணக்காரர்கள் தாங்கள்தான் பணம் கொடுக்கிறோம் என்ற ஒரு உயர்ந்த எண்ணத்தை அவர்களுக்கு அளிக்காமல் ஏழை விவசாயிகளும் அதில் பங்கு எடுத்துக்கொள்ளும் அளவில் பணத்தை சிறு சேமிப்பு மூலமாக வசூலிக்க வேண்டும். போடப்படும் திட்டங்களில் ஏழைகளுக்கும் பங்கு இருக்கிறது என்ற உணர்ச்சி அவர்களுக்கு வரவேண்டும். ஏதோ காங்கிரஸ் ஸ்தாபனம் இப்படி பணம் வசூலிக்கிறார்கள், அதற்கு நாம் என் பணம் கொடுக்க வேண்டும் என்று சொல்லுகிறார்கள். அப்படி நினைத்தால் அது சரியல்ல. போடப்படும் திட்டங்களுக்கு உதவியாக இல்லாமல் இருந்தால் திட்டங்களை ஊக்குவிக்க முடியாது. ஆகவே இவைகளில் எல்லா கட்சிகளும் பங்கெடுத்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

மதுவிலக்குச் சட்டம் முதலில் 1937-ம் வருஷம் கொண்டுவரப்பட்டது. அது அமுலுக்கு வந்த பிறகு அதனால் பல விவசாயி மக்களும் ஏழை ஹரிஜனங்களும் நல்ல பயனடைந்திருக்கிறார்கள். இன்னும் பல நன்மைகளை அவர்களுக்கு அளிக்க முடியாமல் அந்தச் சட்டத்தில் பல சிக்கல்கள் இருக்கின்றன. அந்தச் சட்டத்தை நல்ல முறையில் அமுல் நடத்த வேண்டும் என்றும் அதன் மூலம் மக்களுக்கு பல நன்மைகளைச் செய்யவேண்டும் என்றும் அந்தச் சட்டத்திற்கு திருத்தம் கொண்டு வரப்போவதாகச் சொல்லியிருக்கிறார்கள். அது ரொம்பவும் வரவேற்கத்தக்க விஷயம்தான்.

சமீபத்தில் கிண்டியில் நமது பிரதம மந்திரி அவர்கள் கைத்தொழில் பண்ணையை ஆரம்பித்து வைத்திருக்கிறார்கள். அதனால் விவசாயிகளுக்கு நல்ல பலனளிக்கும் என்பதில் சந்தேகம் இல்லை. அங்கு ஏற்படக்கூடிய 90 கூடங்களில் 52 கூடங்கள் நிறைவேறியிருக்கிறது. அதனால் நம் நாட்டின் விவசாயிகளுக்கு நல்ல பலன் கிடைக்கும் என்பதில் சந்தேகமில்லை. நம்முடைய நாட்டிலுள்ள விவசாய பூமியை அதிகரிக்கப்போவதில்லை. அதனால் தொழில் அபிவிருத்தி அடைய வேண்டியது அவசியமாக இருக்கிறது. அதற்கு இந்த ஸ்தாபனம் நல்ல உதவி அளிக்கும். அதை நல்ல முறையில் நடத்தி வந்தால் நாட்டின் மக்களுக்கு நன்மைகள் ஏற்பட்டு நல்ல முறையில் வாழ்வதற்கு வசதியாக இருக்கும். நாட்டில் அபிவிருத்தி நல்ல முறையிலும் ஏற்படும்.

அநேகம் மக்கள் நாட்டின் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள். மைனர் இர்ரிகேஷன் என்ற விஷயத்தைப்பற்றி கவர்னர் அவர்கள் தன்னுடைய உரையில் குறிப்பிட்டிருக்கிறார். இது விஷயமாக முக்கியமாக ஏழை விவசாயிகளும் ஏழை ஹரிஜன மக்களும்தான் ஈடுபட்டிருக்கிறார்கள். ஆனால் உரையில் ஹரிஜனங்களைப்பற்றி குறிப்பிடவில்லை என்று சொல்லுகிறார்கள். இந்த மாதிரியான சிறு நீர்ப்பாசன விஷயங்களில் அரசாங்கம் கவனம் செலுத்துவதால் ஏழை விவசாய மக்க

ளுடையவும் ஹரிஜன மக்களுடையவும் வாழ்க்கைத்தரம் நல்ல முறையில் அபிவிருத்தி அடையும் என்பதில் சந்தேகமில்லை. ஹரிஜனங்களைப்பற்றி தனியாக குறிப்பிடாவிட்டாலும் இது அவர்களுக்குத்தான் என்று நாம் தெரிந்துகொள்ளலாம். மக்கள் எல்லோரும் நல்ல முறையில் வாழ்வதற்கும் தங்களுடைய வெள்ளாமையைப் பெருக்கிக்கொள்வதற்கும் இது உபயோகமாக இருக்கும். அதற்கு ஏற்றாற்போல் இப்பொழுது இருக்கக்கூடிய புரம்போக்கு நிலங்களை அவர்களுக்குக் கொடுத்து அவர்களும் அதில் விவசாயம் செய்து வருகிறார்கள். அதனால் அவர்களுடைய வாழ்க்கைத்தரம் உயர்வதற்கு வசதியாக இருக்கிறது. இன்னும் எவ்வளவோ நிலங்கள் இருக்கின்றன. அவைகளைக் கொடுப்பதற்கு எவ்வளவோ கஷ்டங்கள் இருந்தாலும் அதை மறந்துவிட்டு அவர்களுக்கு அதைக் கொடுத்து நீர்ப்பாசன வசதி செய்து கொடுத்தால் அவர்கள் நல்ல முறையில் வாழ்வதற்கு வசதியாக இருக்கும். இதை அரசாங்கம் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

மேலும் தொழிற்சாலைகளில் வேலை செய்யும் பெண்களுக்கு மருத்துவ சௌகர்யங்களுடன் இன்னும் மற்ற சௌகர்யங்களையும் பெறுவதற்கு சட்டம் கொண்டுவரப்போவதாக சொல்லப்பட்டிருக்கிறது. அது ரொம்பவும் வரவேற்கத்தக்க விஷயம்தான். அவர்களுக்கு இன்னும் பல சலுகைகளைக் கொடுக்கப்போவதாகச் சொல்லுகிறார்கள். அவைகளும் வரவேற்க வேண்டியதாக இருக்கிறது. வாழ்க்கைத்தரத்தை உயர்த்தவேண்டுமென்ற நோக்கத்துடன் தொழிற்சாலைகளில் வேலை செய்யக்கூடிய தொழிலாளர்களுக்கு தேசீய நாட்களிலும் மற்றும் திருவிழாக் காலங்களிலும் சம்பளத்துடன் லீவு கொடுக்கவேண்டுமென்ற சட்டத்தையும் கொண்டுவரப்போகிறார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதுவும் வரவேற்கக்கூடிய விஷயமாக இருக்கிறது என்பதையும் சொல்லிக்கொண்டு பல நன்மைகளை இந்த அரசாங்கம் செய்ய உத்தேசித்திருப்பதை பாராட்டி என்னுடைய சிற்றுரையை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

4-5 p.m. SRIMATHI A. SUARES: Mr. Deputy Speaker, Sir, in the Address delivered by his Excellency the Governor, it is stated that inter-State Committees have been set up for the safeguards necessary for the linguistic minorities. The Anglo-Indian Community is one of the linguistic minorities having English as their mother tongue. The leader of this community made a representation in the Lok Sabha when the States Reorganization Bill was discussed and the Union Home Minister made a specific proposal that the Constitution 7th Amendment Act of 1956 to IV Schedule should provide for a Special Officer for the linguistic minorities whose report to the President of India should be discussed in Parliament periodically. This proposal has been given effect to and the first Commissioner appointed by the President visited Madras State last month. The linguistic minorities are grateful to the Government for this great privilege.

The first safeguard that our minority requires is an assurance that the medium of instruction in Anglo-Indian Schools will continue even after the year 1960 to be English which is the mother tongue of that community. Anglo-Indian Schools provide High School education in English not only to Anglo-Indians but also for all other linguistic minorities.

In Articles 29 and 30 of the Constitution we have the right to conserve our language script and culture and to establish and administer educational institutions of our choice. Recently this question was questioned in connexion with a school in Bombay

12th February 1958] [Srimathi A. Suares]

State and the matter was referred to the Bombay High Court and later to the Supreme Court. The decision of the Supreme Court upheld the right given to the Anglo-Indians in Articles 29 and 30. I ask for an assurance because our protection period ends in 1960.

As a corollary to this safeguard, we will need the same medium of instruction in colleges. If it is decided to introduce the regional language as the medium of instruction in all colleges, we only ask that a few colleges in the city of Madras and in the mufassal should be permitted to teach through the medium of English to provide for the linguistic minorities. I ask this on behalf of all linguistic minorities in the Madras State.

The standard of Tamil in Anglo-Indian Schools has been gradually raised during the past ten years. This year the Fifth Form Reader in Tamil has been prescribed as a text-book for Anglo-Indian High School Examinations. In another year or two the S.S.L.C. standard will be followed for the public examination. But it will take a few more years for Anglo-Indian pupils to study all the subjects in Tamil in Colleges. If all the colleges change their medium of instruction from English to the regional language, it will be impossible for the linguistic minorities to pursue higher education. We ask this as one of the safeguards.

The Madras Government has ruled that future entrants to the Madras State service should pass a test in Tamil equivalent to the S.S.L.C. standard. Tamil has been introduced in 1,922 offices with effect from the 14th of January of this year. Linguistic minorities will require another safeguard in this respect until they acquire the high proficiency in Tamil that is required to do all their work in Tamil.

Even some of those whose mother tongue is Tamil and who have been used to thinking in English and working in English all their life-time will find it difficult to change over entirely to Tamil and they may need a dictionary or a glossary to give the exact technical terms in Tamil. How much more will it be difficult for the linguistic minorities to attain this standard? Many avenues of employment in various departments, for example, Agriculture, Education, Electricity, Food Production. Forests, Industries and Commerce, Labour, Medical, Public Works, Registration and Revenue, will be closed to the linguistic minorities if they have not achieved the standard required to do their work in Tamil. May I request the Madras Government to go slow in implementing the second stage in their programme of changing over from English to Tamil, to give a chance to the linguistic minorities to acquire the standard of the S.S.L.C. in Tamil. It is a very difficult task and some people find it very hard to master a language within a short time. Just as the Tamil-speaking people find it difficult to study Hindi, the non-Tamil speaking people will find it difficult to study Tamil. But the linguistic minorities will have to study Tamil if they want to serve in the Tamil State and that is why we ask for time, sufficient

[Srimathi A. Suares] [12th February 1958

time in which to learn the language. I am sure, the Government will be sympathetic and tolerant towards the linguistic minorities and give them safeguards for a sufficiently long period.

4-13 p.m. SRI K. ANBAZHAGAN : சட்டமன்றத் துணைத் தலைவர் அவர்களே, இந்த ஆண்டில் கவர்னர் பெருந்தகை அவர்கள் நிகழ்த்திய உரையின்போது சபைக் கூட்டத்தில் நாங்கள் கலந்துகொள்ளவில்லை என்பதை நல்லமுறையில் நாங்கள் அறிவித்திருந்தும், பலர் அதைச் செம்மையாக உணராததற்காக நான் வருந்துகிறேன். கவர்னர் அவர்கள் வடநாட்டிலிருந்து இங்கே நியமிக்கப்பட்டவர்கள். இந்த நாட்டிற்குரிய தலைவர்கள் வட நாட்டிலிருந்து நியமிக்கப்படுவதை நாங்கள் ஏற்றுக்கொள்ளவில்லை என்பதைக் காட்டுவதற்காகத்தான், அவர் உரையாற்றிய கூட்டத்தில் நாங்கள் கலந்துகொள்ளவில்லையே தவிர, கவர்னர் அவர்களிடம் தனிப்பட்ட பகைமையுணர்சியோ, அவமதிப்பு நோக்கமோ எங்களுக்கு இல்லை என்பதை எங்கள் தலைவர் தெரிவித்திருக்கிறார்கள். அப்படிக்கூறியதனாலேயே, நாங்கள் கவர்னரோடு ஒத்துழைக்கவேண்டுமென்று சிலர் கேட்பதும், அவரோடு ஒத்துழைப்பதாக நாங்கள் உறுதிகூறிவிட்டோம் என்று சிலர் பேசுவதும், எங்கள் தலைவர் கொடுத்த அறிக்கையை சரிவரப் புரிந்துகொள்ளாததன் விளைவுகளே தவிர வேறு அல்ல என்று கூற விரும்புகிறேன். ஆனால் சட்டமன்றத்தில் நாங்கள் அதற்குரியதாக ஆற்றவேண்டிய கடமையை ஏற்றுக்கொள்ளத் தயாராயிருக்கிறோம். எங்கள் பொறுப்பைத் தட்டிக் கழித்துவிடமாட்டோம். நாங்கள் கவர்னர் அவர்களோடு கைகுலுக்கிப் பழகாவிட்டாலும், அவ்வாறு பழகும் அளவிற்கு, அவர்களுடன் நெருங்கிப் பழகும் கொள்கையுடன்கூடிய மனப்பான்மையை ஏற்க இயலாவிட்டாலும், அதே நேரத்தில் கடமையுணர்ச்சியில் நாங்கள் குன்றிவிடமாட்டோம் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். அடுத்து இந்த விவாதத்தின்போது எங்கள் கட்சியின் சார்பில் ஒரு ஒத்திவைப்புத் தீர்மானம் பிரேரேபணை கொண்டுவரப்பட்டது. ஏற்றுக்கொள்வதற்குச் சட்டம் இடம் தராத காரணத்தினாலே அதைத் தலைவர் அவர்கள் அனுமதிக்கவில்லை. அதற்காக நாங்கள் வருந்தவில்லையென்றாலும், அதையொட்டிய கருத்துக்களை இந்த விவாதத்தின்போது எடுத்துச்சொல்ல வேண்டிய பொறுப்புடையவர்களாக நாங்கள் இருக்கிறோம்.

"பண்டித நேரு சென்னை வரும் நேரத்தில் அவருக்கு கருப்புக்கொடி காட்டவேண்டும்" என்று திராவிட முன்னேற்ற கழகத்தார் தீர்மானித்தது ஜனநாயகத்திற்கு விரோதமானது என்ற வியக்கத்தக்க கருத்தை இந்த ஆட்சியாளரிடத்திலிருந்து நான் கேட்டேன். கருப்புக்கொடி காட்டுவதுதான், ஜனநாயக முறையில், ஒரு கட்சியினருக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் மிகச் சிறந்த கண்டன முறை என்பதை நாம் அறிவோம். ஜனநாயக முறையில் கண்டனத்தைக் காட்டுவதற்கு அதைத் தவிர வேறு சிறந்த வழி இல்லை. வேண்டுமானால், தனிப்பட்டோர் தங்கள் மாறுபட்ட கருத்தை நேரிடையாகத் தெரிவித்துக்கொள்ளமுடியுமே தவிர, ஒரு இயக்கமோ, ஒரு கட்சியோ, ஒரு கொள்கையைச் சார்ந்த மக்களோ ஒரு மாபெரும் தலைவருக்கு தங்கள் மாறுபட்ட கருத்தை—கண்டனத்தைத்—தெரிவிப்பதற்குரிய முறை கறுப்புக்கொடி காட்டுவதே ஆகும். அதை உணர்ந்த காரணத்தினால்தான் போலும், ஒரு அமைச்சர் அவர்கள் "கறுப்புக் கொடி காட்டுவதால் பண்டித நேருவிற்கு அவமானம் இல்லை. கறுப்புக்கொடி காட்டுவது சாதாரணமான காரியம்தான். அது கறுப்புக்கொடி காட்டியவர்களுக்குத்தான் அவமானம்" என்று நிகழ்ச்சிக்கும் பின்னர் சொல்லி இருக்கிறார்கள். கறுப்புக் கொடிகாட்டுபவர்களுக்கு அவமானம் என்றாலும் நாங்கள் அந்தக் கடமையை மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொள்வோம் என்று கூறுவேன். கறுப்புக்கொடி காட்டப்படுவதால் நேருவிற்கு அவமானம் ஏற்படவில்லை என்று கனம் அமைச்சர் அவர்களே கூறியிருந்தும், கறுப்புக்கொடி காட்டும் கொள்கையை மக்களிடம் விளக்குவதற்கான கூட்டத்தை ஆட்சிபீடம் அனுமதிக்கவில்லை என்பதையும் ஒப்புக்கொண்டு அமைச்சர் குறிப்பிட்டார். அந்தக் கூட்டத்தை அனுமதித்திருந்தால் ஏராளமான மக்கள் கூடியிருந்திருப்பார்

12th February 1958] [Sri K. Anbazhagan]

கள் என்றும் அதனால் மக்களுக்குத் துன்பம், தொல்லை. ஏற்பட்டிருந்திருக்கும் என்றும் கூறி அதன் காரணமாக அக்கூட்டம் அனுமதிக்கப்படவில்லை என்றும் அவர் தெரிவித்தார். அந்தக் கூட்டத்தை அனுமதித்திருந்தால் பண்டித நேருவிற்குக் கறுப்புக்கொடி காட்டும் செயல் மிகவும் அமைதியாக நடந்திருக்கும். ஆகவே அந்தக் கூட்டத்தை அரசினர், அனுமதித்திருக்கவேண்டும். "கறுப்புக்கொடி நிகழ்ச்சியில் மக்கள் ஏராளமாகக் கூடிவிடுவார்களே என்பதால் கறுப்புக்கொடி காட்டுவதை விளக்குவதற்கான கூட்டத்திற்கு அனுமதிதர மறுத்தோமே தவிர கறுப்புக் கொடி காட்டுவதை நாங்கள் தடைசெய்யவில்லை, அதற்குத் தடையுத்தரவு பிறப்பிக்கவில்லை" என்று கனம் அமைச்சர் கூறினார். அப்படியானால், கூட்டத்திற்கு அனுமதிதான் தரவில்லையேதவிர' தடை உத்தரவு பிறப்பிக்கவில்லை என்று கூறும் அமைச்சர், தடை உத்தரவும், அனுமதி மறுப்பும் வேறு, வேறு என்று கூறத்தான் முயற்சித்துள்ளார். ஆனால் ஒரே கருத்தைத்தான், வெவ்வேறு சொற்களைக்கொண்டு சொல்வதன்மூலம், இரண்டு வித நிலையாக்கி காட்ட, விரும்புகிறார் அமைச்சர். அந்தக் கூட்டத்திற்கு அனுமதி தந்திருந்தால், நிச்சயமாக பலாத்கார உணர்ச்சிக்கு இடம் தராமல் நடத்தியிருந்திருப்போம். அந்தக் கூட்டத்திற்கு அனுமதி தந்து எங்கள் கருத்தை மக்களிடம் தெரிவிக்க வாய்ப்புக் கொடுத்திருந்தால், பண்டித நேருவின் முன்பு ஒரு சிறு கல் கூட விழாதபடி நாங்கள் நடத்திக்காட்டியிருக்க முடியும். நேரு வந்தபோது எங்களால்தான் கல் விழுந்தது என்று காங்கிரஸ் உறுப்பினர்கள் இங்கு பேசியிருக்கிறார்கள். தேனியில் நடைபெற்ற கலவரத்திலிருந்து இன்றுவரை நடைபெற்றுள்ள பலப்பல கலவரங்கள் வரையிலும் எந்தக் கலவரத்தையும் திராவிட முன்னேற்றக் கழகம் நடத்தியதில்லை. திராவிட முன்னேற்றக் கழகத்தாரின்மீது வீண் பழியைச் சுமத்திடும் கட்சியினரால் எத்தனை படுகொலைகள் நடந்திருக்கின்றன ? அப்படிச் சொல்லிக்கொண்டே எத்தனை பேர் இதுவரை படுகொலை செய்யப்பட்டிருக்கிறார்கள் ? கூட்டம் கூடினால் கூட்டத்தில் அமைதியைப் பாதுகாக்கவேண்டியது அரசாங்கத்தினுடைய பொறுப்பு. அறிஞர் அண்ணா பேசினால் ஏராளமாக மக்கள் கூடுவார்கள் என்றும், கூடிய மக்கள் கருப்புக் கொடி காட்டத் திரள்வார்கள் என்றும், மக்கள் திரண்டால், தொல்லையும் துன்பமும் ஏற்படும் என்றும் கூறும் கனம் அமைச்சர், பண்டித நேரு இங்கே வரும்போது கறுப்புக்கொடி காட்டப்படும் என்ற செய்தியை அறிந்திருந்த நிலையில், பண்டித நேரு தமிழ் நாடு வரும்போது மக்கள் ஏராளமாகத் திரள்வார்கள் என்பதையும், அவர்கள் அப்படித் திரளும்போது கூட்டமிகுதியாலேயே மிதிபட்டுச் சாகவும் கூடும் என்பதையும் எண்ணி, அவரிடம் அதை எடுத்துக்கூறி "உங்கள் பயணத்தை ஒத்திப்போடுங்கள்" என்று ஏன் சொல்லியிருக்கக் கூடாது என்று கேட்கிறேன். நேரு இங்கே வரும்போது மக்கள் திரள்வதன் விளைவாகச் சில தமிழர்கள் இறக்க நேரிட்டாலும் பாவாயில்லையாம் ! ஆனால் அறிஞர் அண்ணாவின் கூட்டத்திற்கு மட்டும் அனுமதி கிடையாதாம் ! அறிஞர் அண்ணாவைவிட உயர்ந்தவராக நேருவை நான் கருதவில்லை. இருவரையும் சமமாகவே நான் கருதுகிறேன். நேரு வருவதால் ஓரிரண்டு தமிழர்கள் மிதிபட்டுச் செத்தால் பரவாயில்லை என்று இந்த அரசாங்கம் கருதுவதானால், நாம் டெல்லியிலிருப்பவர்களுக்கு அடிமைகளாக இங்கே ஆட்சி நடத்துகிறோமே தவிர, இந்த நாட்டு மக்களைக் காப்பதற்காக ஆட்சி நடத்தவில்லை என்று கூறுவேன். இந்த நாட்டு மக்களான தமிழர்களின், பெருமையை நிலை நாட்டுவதற்காக ஆட்சி நடத்தவில்லை என்று கூறுவேன். பண்டித நேரு அவர்கள் பெருமைமிக்கவராக இருக்கலாம். உத்தமர் காந்தி அடிகள் அவரைவிட மாபெரும் தலைவராக இருந்தார்கள். இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் உத்தமர் காந்தி அடிகள் வாழ்ந்திருந்து தமிழ் நாட்டில் இப்படிப்பட்ட ஓர் எதிர்ப்பு இருக்கிறது என்பதை அவர்கள் அறிந்திருந்தால் அவர்கள் வேறுவிதமாக நடந்துகொண்டிருப்பார்கள் ; "நீங்கள் இங்கே வந்தால் மக்கள் ஏராளமாகத் திரள்வார்கள் ; அதனால் மக்கள் பலர் மிக மிகத் துன்புறும் நிலை உண்டாகும்" என்று அவரிடம் எவரேனும் சொல்லியிருந்தால் அவர்தான் "வரவில்லை" என்று சொல்லியிருந்திருப்பார் ; அல்லது வந்தாலும், தானே மக்களை நேரில் சந்தித்து நல்லதொரு

சூழ்நிலையை ஏற்படுத்தியிருந்திருப்பார். பண்டித நேரு சென்னை நகருக்கு வந்தபோது, அவரைக் காணுவதற்காகக் கூடியிருந்த மக்கள் கூட்டம் நின்ற மவுண்ட்ரோடு பக்கமாகப் போகாமல் போடப்பட்டிருந்த திட்டப்படி, "ப்ரோக்ராம்" படி போகாமல் வேறு வழியாக, மற்றொரு பக்கமாகப் போனார் என்ற செய்தியையும் கேள்விப்பட்டேன்; மிகவும் வருத்தப்படுகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: ப்ரோக்ராம் போட்டபடி போகாமல் நேருஜீ வேறு வழியாகப் போனார் என்று சொல்வது தவறு. ப்ரோக்ராம் போட்டபடியேதான் அவர் போனார். கனம் அங்கத்தினர் அவர்கள் தாமாக ஏதோ நினைத்துக்கொண்டு அவர்கள் கஷ்டப்படுவதற்கு சந்தர்ப்பமில்லை என்று சொல்வது தவறு.

SRI K. ANBAZHAGAN: கனம் அமைச்சர் அவர்கள், தவறை விளக்கியதற்கு நன்றி. நேரு வகுத்த ப்ரோக்ராம் பொதுமக்களுக்குத் தெரியாததாகத்தான் இருந்தது என்று சொல்லிக்கொள்கிறேன். அவர் எந்த வழியாகப் போனார் என்பதுகுறித்து நான் கவலைப்படவில்லை. பண்டித நேரு வந்தபோது திராவிட முன்னேற்றக் கழகத்தார் பைகளிலே கற்கள் கொண்டுவந்ததாகவும், வெங்காயம் கொண்டுவந்ததாகவும், கேழ்வரகு கொண்டுவந்ததாகவும் மாற்றுக் கட்சியினரால் தெரிவிக்கப்பட்டது. திராவிட முன்னேற்றக் கழகத்தாரின் பைகளுக்குள்ளேகூட காங்கிரஸ்காரர்களின் கைகள் சென்றிருப்பதை உணர்கிறேன். இன்னொன்றுகூடச் சொல்வேன். போலீசார் கூட்டம் கூடாமல் கலைப்பதற்காக ஏற்பாடு செய்யும் முறையில், ஆந்திராவிலிருந்து முதுகுளத்தூருக்குச் சென்று பணிசெய்து திரும்பிகொண்டிருந்த போலீஸ்காரர்களை சென்னையில் நிறுத்திவைத்தார்களாம். அந்தப் போலீசார் கலவரம் நடந்தது என்று நிரூபித்துப்பின் கொடுமையாகத் தாக்கி, மக்களை அடக்கும் தன்மையுடையவர்களாம். அவர்கள் வந்த லாரிகளில் செங்கற்கள் வைக்கப்பட்டிருந்தன என்றும், துப்பாக்கியை உபயோகிப்பதற்குக் காரணமில்லாத இடங்களில் நிலையை மோசமாக்க அவைகளை உபயோகித்தார்கள் என்றும் கேள்விப்படுகிறேன். இந்தச் செய்தி முற்றும் உண்மையா அல்லது பொய்யா என்பது எனக்குத் தெரியாது. அது, உரிமையான, அல்லவா என்பதுபற்றி விசாரிக்கத்தான் நீதி மன்ற விசாரணை தேவை என்று நாங்கள் கேட்கிறோம். முதுகுளத்தூர் பிரச்னை ஏற்பட்ட நேரத்திலும் நீதி மன்ற விசாரணை தேவை என்று திராவிட முன்னேற்ற கழகத்தினராகிய நாங்கள் எடுத்து கூறினோம். நல்ல நடுநிலைமையான நோக்கத்தோடு, உயர்ந்த முறையில் பொது நீதி விசாரணை நடைபெற்றால்தான் பொதுமக்கள் தெளிவு பெறுவார்கள் என்று எடுத்துச் சொல்லியும்கூட இந்த அரசாங்கம் எவ்வித நடவடிக்கையும் எடுக்காமல் விட்டுவிட்டது. அந்தப் பொறுப்பை கை நழுவ விட்டுவிட்டது. அதேபோன்று இந்த அக்கிரமங்கள் நடைபெற்றிருக்கும் இத்தருணத்தில் ஒரு நீதிமன்ற விசாரணை வேண்டுமென்று கேட்கிறோம். ஆனால் அரசாங்கம் தனது தவறுகளை விசாரணைக்கு உட்படுத்த விரும்புகின்றதோ இல்லையோ: ஆனால் நீதிமன்ற விசாரணை நடத்தினால்தான் தவறு செய்தவர்கள் யார் என்று புலப்படும். நடைபெற்ற நிகழ்ச்சியில் இரண்டு பேர் மாண்டு போனார்கள். அரசாங்கத்தாரால் கூட்டத்தில் சிக்குண்டு நசுங்கி மாண்டார்கள் என்று சொல்லப்படுகிறது. காஸினோ தியேட்டருக்குமுன் கூடியிருந்த மக்கள் கூட்டம் ஒரு பக்கமாகவும் கலைந்துபோக முடியாமல், இரண்டு பக்கத்தில் இருந்தும் போலீஸாரால் அடித்து விரட்டப்பட்டு ஒரு வழியாகவும் போகமுடியாமல் மக்கள் திண்டாடியதில் இருவர் கீழே விழுந்து இறந்திருக்கிறார்கள். மக்களை அடிப்பதாலும், ஒரு பக்கத்தில் இருந்து விரட்டி அடிக்காமல் இரண்டு பக்கங்களில் இருந்தும் அடிக்கப்பட்டதால், போவதற்கு வழியில்லாமல் அடிபட்டுக் கீழே விழுந்து கூட்டத்தில் சிக்குண்டு நசுங்கிப் போய் இறந்திருக்கிறார்கள். சின்னப்பா என்பவரும் கோவிந்த ராவ் என்பவரும். அந்த அளவு போலீஸார் தங்களது கோபத்தையும், ஆத்திரத்தையும் காண்பித்து மக்களைப் பலியிட்டிருக்கிறார்கள். மேலும் கலவரத்தில் பஸ்கள் கொளுத்தப்பட்டுள்ளன. பஸ்களைக் கொளுத்தினார்கள் என்று சொல்லும்போது

12th February 1958] [Sri K. Anbazhagan]

அச்சமயத்தில் அந்த இடத்தில் வைத்துக் கையும் களவுமாக, அப்படிச் செய்தவர்களைப் பிடித்திருந்தால், பத்தல்ல, நூறல்ல, இருநூறு பேர்களைப் பிடித்திருந்தாலும் அதற்காக நான் அரசாங்கத்தை, போலீஸார் திறத்தைப் பாராட்டியிருப்போம். ஆனால் அந்த இடத்தில் மக்களை எப்படியோ அடித்து விரட்டி நிலைமையைச் சமாளித்து விட்டுப் பின்னர் இரவு நேரத்தில், கொள்ளைக் கூட்டத்தைப் போல் சென்று சிந்தாதிரிப்பேட்டை காக்னேரி என்ற பகுதியில் காசினோ தியேட்டரின் பின் பக்கத்தில் உள்ள ஒரு முஸ்லீம் பெயரில் உள்ள சேரி பகுதியிலும், வரதராஜபுரம் என்ற சேரியிலும், ஒரு சப்-இன்ஸ்பெக்டரும் 20, 30 போலீஸ்காரர்களுமாகச் சென்று நள்ளிரவு ஒரு மணி அளவில் அச்சேரிகளில் உள்ள சில தெருக்களில் நுழைந்து ஒரு வீடு கூடத் தவறாமல், முதல் வீடு, இரண்டாவது வீடு, மூன்றாவது வீடு என்று ஒவ்வொரு வீடாகப் புகுந்து சுமார் 30, 40 வீடுகளில் தூங்கிக்கொண்டிருந்த ஏழைமக்களை அடித்துத் துன்புறுத்தியிருக்கிறார்கள். தாய்மார்களை அடித்திருக்கிறார்கள், குழந்தைகளை இழுத்தெறிந்து கீழே தள்ளி இருக்கிறார்கள், இளைஞர்களாய், வாலிபர்களாய் இருந்தவர்களைக் கண்டபடி எல்லாம் தாக்கி அடித்திருக்கிறார்கள், அவர்களை மின்சாரக் கம்பிகளால் அடித்து அடித்து அவர்களது உடம்பெல்லாம் புண்ணாக்கியிருக்கிறார்கள். நாங்கள் 8-ந்தேதி வெளிவந்தவுடன் அறிந்தோம் சுமார் 200 பேர்களுக்கு மேல் சிறைபிடிக்கப்பட்டு அழைத்துச் செல்லப்பட்டிருக்கிறார்கள் என்று. அவர்கள் எல்லாம் 6-ம் தேதி நள்ளிரவில் பிடிக்கப்பட்டவர்கள். 6-ம் தேதி இரவுதான் பிடித்தார்கள் என்பதற்குச் சான்றுகள் இருக்கின்றன. அவர்களை அடித்ததற்கும் சான்றுகள் ஏராளமாக இருக்கின்றன. அதைப்பற்றி போலீஸ் இலாகா தலைவருக்கும் நான் அறிவித்திருந்தேன். ஏழை மக்களின் வீடுகளில் புகுந்து அவர்களது வீட்டுக் கதவுகளை உடைத்திருக்கிறார்கள். செல்வர்களின் வீட்டுக் கதவல்ல அவைகள் கனமாக இருப்பதற்கு. ஏழைகளின் குடிசைக் கதவுகளாகும். அவர்களில் பெரும்பாலோர், ஆதிதிராவிட மக்களாவார்கள். அவர்கள் தான் குற்றவாளிகள் என்று தெரிந்துதான் போலீஸ்காரர்கள் அவர்களைத் தாக்கினார்களா? குற்றவாளிகள் சேரிகளிலிருந்துதான் புறப்பட்டார்களா? எம்போன்றார் குடியிருக்கும் வேளாளர் தெருவிலிருந்து புறப்பட்டிருக்மாட்டார்களா? ஏன், குற்றவாளிகள் அக்கிரகாரங்களில் இருந்து புறப்பட்டிருக்கமாட்டார்களா? எந்த உயர்ந்த ஜாதிக்காரர்கள் இருக்கும் இடங்களில் இருந்து குற்றவாளிகள் புறப்பட்டிருக்க மாட்டார்களா? அன்பழகனுக்கு ஓட்டுப் போட்டார்களே, இப்பொழுது அவனை வந்து உங்களைக் காப்பாற்றச் சொல்லுங்கள் பார்க்கலாம் என்று கேட்டுக் கேட்டு அடித்திருக்கிறார்கள். என்னால் அவர்களைக் காப்பாற்ற முடிந்தாலும், முடியாவிட்டாலும் நான் எப்பொழுதும் அவர்கள் பக்கத்தில் இருந்து அவர்களுக்காகச் சாகவும் தயார் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். நள்ளிரவில் வீடுகளில் புகுந்து அட்டூழியங்கள் புரிந்த போலிஸ் அதிகாரிகளின் பேரில் இவ்வரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது? எந்தவித விசாரணை நடத்தி இருக்கிறது? என்று கேட்கிறேன். உண்மைக் குற்றவாளிகளைக் கண்டுபிடிப்பதற்குப் பதில் குற்றவாளிகளை தயாரிக்க, உண்டாக்க இந்த அரசாங்கம் ஆசைப்படுகிறதா? கூட்டத்தைக் கலைப்பது என்பது வேறு, வீடுகளில் புகுந்து உறங்கும் மக்களை அடிப்பது வேறு. காங்கிரஸ் அரசாங்கத்திற்கு இதை விட வெட்கப்படத்தக்க காரியம் வேறு எதுவும் இருக்கமுடியாது. ஆகவே, நடைபெற்ற அட்டூழியங்கள்பற்றி நீங்கள் ஒரு பொது நீதிமன்ற விசாரணை ஏற்படுத்தவேண்டும். அதில், பொதுமக்கள் சாட்சி சொல்லவருவார்கள். மக்கள் பட்ட அடியை ஏற்பட்ட காயத்தைக் காட்டுவார்கள். அவர்கள் போலீஸ் அடிபட்டு பதிந்திருக்கும் தழும்புகளைக் காட்டுவார்கள். போலீசாரின் தாக்குதலால் ஒரு ஏழை அன்னையின் கை முறிந்து புத்தூர் வைத்தியரிடம் மருத்துவம் செய்து கட்டுப் போடப்பட்டுள்ளது. அதேபோல் 30 வயதுடைய ஒரு மாதின் கால் எலும்பு பிசகியுள்ளது. இன்னொருவருக்குக் கம்பியினால் அடித்ததால் உடல் முழுதும் சதை பிய்ந்து குழி விழுந்திருக்கிறது. நான் சொல்கிறேன், அடிப்பது தான் எங்கள் கொள்கை என்று அரசாங்கம் வெளிப்படையாகச் சொல்லிவிடட்டும். அடியைத் தாங்கிக்கொள்வதற்கு தயாராக இருப்பவர்கள் தான் கருப்புக்கொடி காட்டலாம் என்றும், அடியையும் கெடுபிடியையும்

[Sri K. Anbazhagan] [12th February 1958

ஏற்றுக்கொள்கிறவர்கள்தான் தேர்தலுக்கு நிற்கலாம் என்றும் சொல்லுங்கள். அப்படி இந்த அரசாங்கம் சொல்லிவிடட்டும். பின்னர் நாங்கள் அந்தச் சவாலே ஏற்றுக்கொள்ள தயாரா இல்லேயா என்பதைச் சொல்கிறோம். அஹிம்சையின் பெயரால், உத்தமர் காந்திஜீயின் பெயரால் அரசாங்கத்தை நடத்திக்கொண்டிருக்கிறோம் என்று சொல்லும் நீங்கள், இன்று அகில இந்தியாவிலும் நமக்கு ஆதரவு இருக்கிறது, இவர்கள் இத்துணைக் கண்டத்தின் தென்கோடியில் இருக்கும் ஒரு சுதந்திர இயக்கத்தைச் சேர்ந்தவர்கள்தானே, இவர்களே இந்த நாடு அறியாது என்ற கருத்தில் இந்த அரசாங்கம் இம்மாதிரி அடக்கு முறைகளே கொடிய முறைகளேக் கையாண்டு வருமானுல் அதைப் பொதுமக்கள் பொறுத்துக் கொண்டிருக்கமாட்டார்கள். அடுத்து, ஒன்றைக் குறிப்பிட விரும்புகிறேன். இந்தியா அகண்ட பாரதம். இந்த அகண்ட பாரதத்தின் ஒற்றுமைக்காக தென்னுட்டு மக்களின் நிலே தாழ்ந்திருப்பினும் ஒன்றுபட்டுத்தான் இருக்க வேண்டுமென்று சொல்வதை நான் ஏற்றுக்கொள்ளமாட்டேன். இன்று தமிழ் நாட்டு மக்கள் தொழில் துறையில் பின் தங்கிக் கிடக்கிறார்கள் என்று நிதியமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் சென்ற முறை இங்கு பேசுகையில் குறிப்பிட்டார்கள். இங்குள்ள மக்களின் சராசரி வருமானம்பற்றிய புள்ளிவிவரங்களேப் பார்த்தால் இந்தியாவில் உள்ள மற்ற மாநிலங்களில் உள்ளதை விடத் தமிழ் நாட்டு மக்களின் சராசரி வருமானந்தான் மிகக் குறைவாகும் என்று அமைச்சர் குறிப்பிட்டார். அவர் சொன்ன புள்ளி விவரம் சரியா தவரு என்பதுபற்றி எனக்குக் கவலேயில்லே. அதை மறுக்கின்ற முறையில் சில காங்கிரஸ்காரர்கள் தமிழ் நாட்டில் வளம் இருக்கிறது, தமிழ்நாடு முன்னேறிவிட்டது, தமிழ் நாட்டில் எல்லாம் இருக்கிறது என்றும் வடநாட்டில்தான் எதும் இல்லேயென்றும் சொல்கிறதைப் பார்த்தால், அவர்கள் எதோ வட நாட்டிற்கு சென்று வாழவேண்டியவர்கள் போல் பேசுவதாகத் தோன்றுகிறது. தமிழ் நாட்டில் வாழ்பவர்களேப்போல் அவர்கள் பேசவில்லே. தண்ணீர் பிரச்னேயை எடுத்துக் கொண்டாலே பாலாறு கன்னடத்தின் கன்னடப் பகுதியில் தோன்றுகின்றது, பெண்ணுறு திட்டம், தமிழ் நாட்டில் இருந்த அந்த திட்டம்—ஆந்திராவிடம் ஒப்படைக்கப்பட்டுவிட்டது. பரம்பிக்குளம் திட்டம், சூழ்நிலேயால் கேரளத்திற்குப் போய், தண்ணீரும் அவர்களிடம் கேட்டுப் பெற்றுக்கொள்ளவேண்டிய ஒரு நிலேயை நமக்கு ஏற்படுத்தியுள்ளது. கேரள அரசாங்கத்திடம் கன்னட, ஆந்திர அரசுகளிடமும் தண்ணீர் கேட்கும் நிலேயில் இருக்கிறோம், நாம். ஆகவே, இயல்பாக அமைந்துள்ள இந்த வட்டாரங்களின் தொடர்பை வைத்துக்கொண்டு பார்க்கும் போது இப்பகுதிகள் எல்லாம் சேர்ந்து ஒரு கூட்டாட்சி ஏற்படவேண்டும், ஏற்படுத்தவேண்டும் என்று கருதித்தான் திராவிட நாடு அமையவேண்டும் என்று திராவிட முன்னேற்றக் கழகம் கேட்கிறது. திராவிட நாடு ஏற்பட்டால்தான் தமிழ் நாடு முழு அளவிற்கு வாழ வழி இருக்கும். தமிழ் நாட்டின் ஆட்சி மொழி தமிழாகத் தான் இருக்கும். ஆந்திர தேசத்தின் மொழி தெலுங்காகத் தான் இருக்கும், கன்னட ராஜ்யத்தின் மொழி கன்னடமாகத் தான் இருக்கும், கேரளத்தின் மொழி மலேயாளமாகத் தான் இருக்கும். மாகாணங்களுக்கும் மத்திய அரசாங்கத்திற்கும் இடையே உள்ள தொடர்பு மொழி ஆங்கிலமாக இருக்கவேண்டும் என்று நம் நிதியமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் வேண்டுகோள் விடும் இக்கட்டத்தில் அந்த ஆங்கில மொழியையே திராவிட நாட்டில் உள்ள பல மொழி பேசும் பிரிவுகளிடையேயுள்ள தொடர்பு மொழியாக வைத்துக் கொள்ளலாம். ஆங்கிலத்தையே தொடர்பு ஆட்சி மொழியாகப் பயன்படுத்திக்கொள்ளலாம். அதனுல் திராவிடக் கலாசாரம் பாதிக்கப்பட மாட்டாது. நேர்மாறாக திராவிட கலாசாரம் வளரத்தான் செய்யும். அது வளர்க்கப்படும். நமது நிதியமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் கூட வெளிநாட்டு தூதுவர்களிடம் இந்நாட்டின் பெருமையைப் பற்றிச் சொல்லும் போது 'எங்கள் திராவிட கலாசாரம் எங்கும் பரவியிருக்கிறது' என்று பெருமையுடன் சொல்கிறார்கள். நான் சொல்லுகிறேன் திராவிட நாடு அமைந்தால்தான் அக்கலாசாரம் நன்கு பாதுகாக்கப்படும். அப்பொழுதுதான் திராவிட மக்களுக்கு உரிய பெருமை கிடைக்கும். அப்பொழுது தான் தமிழ் மறை வகுத்த திருவள்ளுவரின் நெறி இந்த வட்டாரத்தில் தழைத்தோங்கும். அப்பொழுதுதான் தமிழ் மொழி அகில உலக அரங்கில், அரசு புரிய

12th February 1958] [Sri K. Anbazhagan]

இயலும். திராவிட நாட்டுக் கொள்கையைப் புரிந்துகொள்ளாமல், அதை உணராத நிலையில் அதை மறுத்துப் பேசுவதை விட்டு விட்டு, வேண்டுமானால் இந்தக் கொள்கை எனக்குப் பிடிக்கவில்லை என்று சொல்லுங்கள். தேசீயம் என்பது, கூட்டாக வாழ்ந்து கொண்டிருக்கும் மக்களின் உள்ளத்து உணர்ச்சியைக் குறிக்கும். அவ்வுணர்ச்சி பஞ்சாப்பில் சீக்கிய மக்களிடம் இருக்கிறது, அஸ்ஸாமில் ஆஸாமியர்களிடம் இருக்கிறது, பீஹாரில் பீஹார் மக்களிடம் இருக்கிறது, ஆந்திராவில் தெலுங்கரிடம் இருக்கிறது, தமிழ் நாட்டிலும் அத்தேசீய உணர்ச்சி நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டு வருகிறது. அந்த உணர்ச்சியைப் புரிந்துகொள்ளுங்கள்! அது இயற்கையில் ஆற்றல், அது கடல் அலையின் எழுச்சி, அது தென்றலின் குளிர்ச்சி. அதை எதிர்க்காதீர்கள், அதை எதிர்த்தால் வெற்றி பெற முடியாது, வீழ்ச்சியுறத்தான் நேரும். ஆகவே அந்த இயற்கை உணர்ச்சியை எதிர்த்து வீழ்ச்சியுற ஆசைப்படாதீர்கள் என்று கூறிக்கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன்.

SRI VEDARATHNAM PILLAI : அன்பழகன் அவர்கள் கூறுகிற அந்த திராவிட நாடு அமைப்பதற்கு ஆந்திரக்காரர்களும், கன்னடம் பேசுபவர்களும், மலையாளிகளும் விரும்புகிறார்களா, அதை அவர்கள் ஏற்றுக்கொள்ளுகிறார்களா என்பதை அவர்கள் மூலமே அறிய விரும்புகிறேன்.

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, இன்பர்மேஷன் என்று கேட்டதற்காக சொல்லுகின்றேன். தமிழ்நாட்டிலுள்ள அமைச்சர்கள் இவற்றை ஏற்றுக்கொண்ட பிறகு ஆந்திர நாட்டிலுள்ளவர்கள் ஏற்றுக்கொள்வார்கள் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI R. KANDASAMI : கனம் உதவி தலைவர் அவர்களே, கவர்னர் பெருமான் அவர்களது பிரசங்கத்தை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். கவர்னர் பெருமான் அவர்களுடைய பிரசங்கத்தில் பல நல்ல அம்சங்களும் பொருந்தியிருப்பதோடு ஹரிஜனங்களுக்கும் பிற்பட்ட இனத்தவர்களுக்கும் வசதி அளிக்கும்படியான முறையில் பிரசங்கம் அமைக்கப்பட்டிருக்கிறது என்பதற்கு பெருமைப்படுகிறேன். உண்மையாக என்னுடைய தொகுதியில் நீர்ப்பாசனத்தைப்பற்றி எடுத்துக் கொண்டால் என்னுடைய தொகுதியாகிய திருச்செங்கோடு டவுனில் சுமார் 32 ஆயிரம் பேர்கள் இருக்கிறார்கள். அங்கு அர்த்தநாரீசுவரன் குன்று பரவி இருப்பதால் அங்கு கிணறுகள் ஒன்றும் வெட்ட முடியாத நிலையில இருந்துகொண்டிருக்கிறது. இதை நிவர்த்திக்க திருச்செங்கோடு டவுன் கொக்கராயன்பேட்டையிலிருந்து ஒன்பது மைல் தூரத்தில் காவேரி நதி ஓடுகிறது. அதிலிருந்து குடி தண்ணீர் குழாயின் மூலம் கொண்டு வருவதற்கு வசதி செய்து தரவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அடுத்தபடியாக ஹரிஜனங்கள் கல்வி, பொருளாதாரம், தீண்டாமை என்ற மூன்றிலும் முன்னேற வேண்டியிருக்கிறது. கல்வியைப்பற்றி எடுத்துக்கொண்டால் இன்றைக்கு ஹரிஜனங்கள் எவ்வளவோ முன்னேறியிருக்கிறார்கள். இன்றைக்கு 54 ஹரிஜன ஹாஸ்டல்கள் சர்க்காரால் நடத்தப்பட்டு வருகின்றன. இவற்றுறுக்காக ஸ்காலர்ஷிப்பும் மற்றும் பல கிராண்டுகளும் கொடுக்கப்படுகிறது. இதன் மூலம் ஆயிரக்கணக்கான மக்கள் பயின்று முன்னேற்றம் அடைந்து வருகிறார்கள் என்பது அடியேனுக்கு நேரடியாக தெரியும். இப்போது ஹரிஜனங்களிலிருந்து கலெக்டர்களாக வருகிறார்கள். டெப்யூட்டி சூப்பரின்டென்டெண்டு இம்மாதிரி பல பதவிகளும் அடைந்து வருகிறார்கள். மேலும்இவைபோன்ற முன்னேற்றங்களுக்காக வேண்டிய திட்டங்களை சேர்த்து வேலை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இப்போது நடைபெறுவது திருப்திகரமாக இருந்தபோதிலும் ஹரிஜனங்களுக்கு பஸ் ரூட்டுகள் மூலமாகவும், மலைப் பிரதேசங்களில் கூப்பு கூட்டுறவு பண்ணைகள் போன்றவை கொடுத்து பொருளாதாரத்திலும் முன்னேறவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். தீண்டாமையைப் பொறுத்தவரையில் இன்னும் பல இடங்களில் முதுகுளத்தூராகவே இருந்து வருகிறது என்பதை குறிப்பிட விரும்புகிறேன். உதாரணமாக இன்றைக்கு எதிர்க்கட்சியிலுள்ளவர்கள் சொன்னது மாதிரி கவர்னர் அவர்களுடைய 4-30 p.m.

[Sri R. Kandasami] [12th February 1958

பிரசங்கத்தில் இதைப்பற்றி குறிப்பிடவில்லைதான். இந்த பிரசங்கத்தில் அவர்கள் ஏன் குறிப்பிடவில்லை என்றால் அறிவிற் சிறந்த அண்ணாதுரை, ராஜாஜி, பெரியார், அன்பழகன் போன்றவர்கள் கருப்புக்கொடி காண்பித்து தீண்டாமையையெல்லாம் போக்கியிருப்பார்கள் என்று நினைத்துதான் அவர்கள் குறிப்பிடவில்லை என்று தோன்றுகிறது. அவருடைய ஊரில் இந்த மாதிரி தீண்டாமை கொடுமை இருந்திருக்காது. அதனால் தென்னாட்டை பொறுத்தவரையில் அவர் தெரிந்தோ தெரியாமலோ இதை குறிப்பிடாமல் விட்டு விட்டார்கள். இந்த பெரியார்கள் தீண்டாமைக்காக தீவிரமாக வேலை செய்திருப்பார்கள் என்ற எண்ணம் அவருக்கு இருந்திருக்கும். இன்றைக்கு உண்மையில் இவர்கள் என்ன செய்கிறார்கள். சிந்தாதிரிப்பேட்டை போன்ற இடங்களிலுள்ள ஹரிஜன மக்களை சிங்கார வார்த்தைகளை பேசி மயக்கி வைத்திருக்கிறார்கள். மாட மாளிகைகள் இருக்கும் இடங்களிலும்கூட கோபுரங்கள் இருக்கும் இடங்களிலும் இவர்கள் போவது கிடையாது. பாமர மக்கள் இருக்கும் இடத்திலுள்ள ஹரிஜன மக்களிடம் கற்பனைக் கதைகளைக் கட்டி மக்களை தவறான வழியில் தூண்டி விட்டு அடி வாங்கி கொடுத்தார்கள். இவர்களுக்கு அதில் பொறுப்பு இருக்கிறது. பாமர மக்களைத் தூண்டிவிட்டு கல்லெறியச் செய்தார்கள். இவர்கள் என்னவெல்லாம் செய்கிறார்கள் என்று எங்களுக்கு நன்றாகத் தெரியும். எங்கள் தொகுதிக்கு பக்கத்திலுள்ள ஒரு கிராமத்தில் ஒரு முருங்கை மரத்தில் போய் கருப்புக் கொடியை இரவில் போய் கட்டியிருக்கிறார்கள். இது இரவில் யாரும் இல்லாத சமயம் போய் பார்த்து கட்டினார்கள் என்று அங்குள்ள சக்கிலியர்களும் பறையர்களும் என்னிடம் சொன்னார்கள். இன்னொரு விஷயம் என்னவென்றால் இவர்களுக்கு கருப்புக் கொடிக்குத் துணி கிடைக்காமல் அந்த பக்கத்தில் ஏதோ ஒரு அம்மையார் ஒரு கருப்பு சேலை கட்டி வெளியில் போட்டிருந்த சமயம் அதைப் போய் வெட்டி எடுத்துக் கொண்டுவந்து கட்டினார்கள் என்றும் சொல்லப்பட்டது. (சிரிப்பு) இன்றைக்கு எங்கு பார்த்தாலும் பள்ளிப் பையன்களை பார்த்தால் கூட எப்போதும் அண்ணா அண்ணா என்று சத்தம் போட்டுக்கொண்டு வருகிறார்கள். இவ்வளவு தூரம் மயக்கி வைத்திருக்கிறார்கள். இது எங்களுக்கு வெகு நாட்களாகவே தெரியும். இப்போது ஹிந்தியைப்பற்றி சொல்லுகிறார்கள். 1944-ல் எனது குருவாகிய ராஜாஜி அவர்களிடம் ஐந்து வருடம் எனக்கு பயிற்சி உண்டு. அப்பொழுது அவர் ஹிந்தியை கட்டாயமாக கொண்டுவந்தபொழுது இதை கட்டாயமாக வைக்கக்கூடாது என்று சொன்னேன். அப்பொழுது மூன்றாம் வகுப்பிலிருந்தே வைக்கப் போகிறேன் என்று சொன்னார்கள். நான் சொன்னதை வாபஸ் வாங்க வேண்டும் என்று சொன்னார்கள். இன்றைக்கு எனக்கு என்ன தோன்றுகிறது என்றால் ஹரிஜன சமூகத்தார் கண்டிப்பாக ஹிந்தி படித்தே ஆக வேண்டும். இன்றைக்கு ஹிந்தியை எதிர்க்கும் பெரியார் அவர்களின் சகோதரரின் மகன் சம்பத்தின் குமாரர் பிரைவேட்டாக ஹிந்தி படித்து வரும்பொழுது என் ஹரிஜனங்கள் படிக்கக்கூடாது என்று கேட்கிறேன். (கைதட்டல்) தங்களுக்கு மாத்திரம் ஹிந்தியை படித்துவிட்டு மற்றவர்களுக்கு மாத்திரம் ஹிந்தி படித்தால் வராது, அது கம்பிபோல் மாட்டிக் கொள்ளும் என்று சொல்லுவது என்ன பொருத்தம் என்று கேட்கிறேன்.

SRI K. ANBAZHAGAN : ஸார், பாய்ண்ட் ஆப் ஆர்டர், நான் சொன்னதை மாற்றி சொல்லுகிறார் கனம் அங்கத்தினர் அவர்கள். அவர் அவ்விதம் சொல்லுவார்கள் என்றால் அதை மறுத்து சொல்லுவதற்கு எனக்கும் சந்தர்ப்பம் அளிக்கப்படவேண்டும். நான் சொன்னதை மாற்றி . . .

DEPUTY SPEAKER : நீங்கள் பின்னால் இதைப்பற்றி பேசிக் கொள்ளலாம்.

SRI P. S. K. LAKSHMIPATHI RAJ : பாய்ண்ட் ஆப் இன்பர்மேஷன், கனம் அங்கத்தினர் அன்பழகன் அவர்கள் பேசும் பொழுதும் காங்கிரஸ்காரர்கள் பலவாறாக பேசியிருக்கிறார்கள் என்று திரித்து பேசியிருக்கிறார்கள் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

12th February 1958]

**Sri R. KANDASAMI** : ராஜாஜி அவர்களைப்பற்றி எனக்கு நன்றாகத் தெரியும். இவர்கள் சிறியவர்களாக இருக்கும்பொழுதே எனக்கு அவர்களைப்பற்றித் தெரியும். அவரிடம் எனக்கு ஐந்து வருட பயிற்சி உண்டு. இவர்களின் அறிவின் சிகரம் அண்ணா என்ற செங்கல்லையும் ராஜாஜி, என்ற உப்பையும் வைத்து கோட்டை கட்டுகிறார்கள். இது அதிக நாட்களுக்கு நிற்காது என்பதை தமிழன் என்ற உணர்ச்சியோடு இவர்களுக்கு சொல்லிக் கொள்கிறேன். இவைகளை எல்லாம் நம்பாதீர்கள் என்றும் கேட்டுக்கொள் கிறேன். தமிழை வளர்ப்பதற்காக நமது மதிப்பிற்குரிய நிதி அமைச்சர் அவர்கள் சமீபத்தில் நடைபெற்ற 63-வது காங்கிரஸ் மகாநாட்டில் எவ்வ ளவோ சூசகமாக எடுத்துச்சொல்லியிருப்பதை எல்லோரும் நன்கு புரிந் திருப்பார்கள் என்று நம்புகிறேன். இவர்கள் புரிந்திருந்தும் புரியாதது போல் பாவனை காட்டுகிறார்கள். தமிழில் பரீட்சை நடக்கவேண்டுமென்று சொல்லுகிறார்கள். அவையெல்லாம் வேண்டியது தான். ஆனால் தனியாக தமிழ்நாடு பிரியவேண்டும் என்று சொல்லுவது கூடாது. தமிழ் நாடு பிரியவே கூடாது என்று முன்பும் கூறியிருக்கிறோம். பிரிந்தால் என்ன கதியாக இருக்கும் என்பதை பக்கத்திலுள்ள பாகிஸ்தான் நமக்கு நன்றாக எடுத்துக் காட்டுகிறது. எவ்வளவோ மந்திரி சபை மாறிக்கொண்டே யிருக்கிறது. இங்கு இருக்கின்ற ஒரு முதுகுளத்தூரே நமக்கு போதும். ஆகவே தமிழ்நாடு பிரியவே கூடாது என்று நாங்கள் தான் சொல்லப் போகிறோம். தமிழ் நாடு பிரியவேண்டும் என்று சொல்லுவதை இனியும் நாங்கள் பொறுத்துக்கொண்டிருக்க முடியாது.

" எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்—உய்வில்லை
செய்நன்றி கொன்ற மகற்கு "

என்ற முறையில் நாட்டை காக்கவேண்டிய பொறுப்பு மக்களுக்கு இருக்கிறது. மகாத்மா காந்தி இந்நாட்டு மக்களுக்கு என்ன சொல்லி யிருக்கிறார்கள் என்பது காங்கிரஸ்காரர்களுக்கும், எதிர்க்கட்சிக்காரர் களுக்கும் தெரியும். நாட்டுப் பிரிவினையை இன்றைக்கு படித்தவர்கள், படிக்காதவர்கள் எல்லோரும் எதிர்க்க ஆரம்பித்துவிட்டார்கள். ஆகவே இந்த நாடு பிரியக்கூடாது என்று சொல்லிவிட்டு ஹரிஜனங்கள் அதிகமாக ஹிந்தி படிக்கவேண்டியிருப்பதால் அவர்களுக்கு பிரைவேட்டாக ஹிந்தி படிக்கவேண்டியிருப்பதால் இதற்காக கிராண்ட் ஒதுக்கித் தரவேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன்.

***Sri A. E. CHANDRASEKHARA NAYAGAR**: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, மேன்மை தங்கிய கவர்னர் அவர்கள் நிகழ்த்திய உரைக்கு நன்றி தெரிவிக்கும் கனம் ஆர். கிருஷ்ணசுவாமி நாயுடு அவர்களின் பிரேரணையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகளைச் சொல்ல முற்படுகிறேன். நம் நாட்டில் மக்கள் எதிர்பார்த்த பல முக்கியமான விஷயங்களை கவர்னர் அவர்கள் அலசிப்பார்த்து, அதற்குத் தக்க பரிகாரம் தேட வழி வகைகளையும் கூறி உரை நிகழ்த்தியிருக்கிறார். அந்த உரையில் ஆட்சி மொழி பற்றி மிக முக்கியமாக, மீண்டும் ஆலோசனை செய்ய வேண்டுமென்று ஒரு கருத்தை தெரிவித்திருக்கிறார். மீண்டும் அதை ஆராய்ந்து ஒரு தீர்வு காணவேண் டும் என்ற ஒரு முறை இருப்பதால்தான் அம்மாதிரி தெரிவித்திருக்கிறார். ஆட்சி மொழியாக ஹிந்தி மொழியை அரசியல் சட்டத்திலே ஏற்றுக்கொண்டு விட்டோம். இப்போது ஹிந்தி மொழியை ஆட்சி மொழியாக பயன்படுத்து வது எப்படி, அதைப் பரப்புவது எப்படி என்பதற்கான வழி வகைகளைக் காணவே ஆட்சி மொழிக் கமிஷன் 1955-ல் அமைக்கப்பட்டது. அந்தக் கமிஷனை முன்னாடியே அமைத்திருந்தால் இவ்வளவு சங்கடங்கள் வந்திருக்காது. 1956-ல் கமிஷன் ரிபோர்ட்டை சமர்ப்பித்து விட்டது. அந்தக் கமிஷன் விசாரித்தபோது சென்னை சர்க்காரும், சென்னை ராஜ்யத்தில் உள்ள பிரபலஸ்தர்களும், மற்ற ஸ்தாபனங்களும் தங்கள் அபிப்பிராயத் தைத் தெரிவித்திருக்கிறார்கள். அப்படித் தெரிவித்திருந்தும், மறுபடியும் ஹிந்தி மொழி பற்றிய ஒரு சர்ச்சையைக் கிளப்பி, அதற்காக ஒரு மாநாடு கூட்டி இப்போது ஒரு மெமோராண்டம் அனுப்ப வேண்டிய நிர்ப்பந்தம் என் ஏற்பட்டது என்பது எனக்குப் புரியவில்லை. சாதாரணமாக தமிழ் நாட்டில் மக்கள் அபிப்பிராயம், மக்கள் எல்லோரும் இப்படிச் சொல்லு 4-40 p.m.

[Sri A. E. Chandrasekhara Nayagar] [12th February 1958

கிறார்கள் என்று கூறப்படுகிறது. மக்கள் என்றால் யார்? மக்கள் அபிப்பிராயம் என்றால் என்ன என்று மறந்துவிட்டு, மக்கள் அபிப்பிராயம் என்று ஒரு சிலர் உபயோகித்துக் கொண்டு ஜனநாயகத்தைப் பாழ்படுத்திக் கொண்டு வருகிறார்கள் என்று சொல்ல விரும்புகிறேன். இன்று தமிழ் நாட்டில் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் 19·3 சத விகிதம் இருக்கிறார்கள். அதிலும் ஆங்கிலம் தெரிந்தவர்கள் 2 சத விகிதம் தான் இருக்கிறார்கள். அந்த 2 சத விகிதம் உள்ள சிலர் ஹிந்திக்கு விரோதமாக, மக்கள் அபிப்பிராயம் என்று விளம்பரப் படுத்தி மக்கள் பேரில் பழியைப் போட்டு தங்கள் எண்ணங்களையும், தங்கள் கட்சியின் எண்ணங்களையும் அடைய உபயோகித்து வருகிறார்கள். மக்கள் எண்ணம் என்பதற்கு விளக்கம் தேவை. குறிப்பாக, வகுப்புப் பிரிவினை சக்திகள், கட்சிகள் ஒன்று சேரும் தருவாயில் நாட்டுக்கு அபாயம் வரும். அதோடு சில முக்கியஸ்தர்கள் மானைக் காட்டி மானைப் பிடிப்பது போல தேசப் பிரிவினை நோக்கத்திலும், மொழிப் பிரச்னை நோக்கத்திலும் ஈடுபடுத்தி நோக்கத்தை திருப்பி வருகிறார்கள். ஆனால், இது நல்லதற்கோ கெட்டதற்கோ தெரியவில்லை, என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன். மேலும் மக்கள் காங்கிரஸை நம்பித்தான் அதிகாரத்தை மத்தியிலும், ராஜ்யத்திலும் கொடுத்திருக்கிறார்கள். அதை அனுசரித்து இதுவரை வேலை செய்து வந்திருக்கிறோம். அதைப் போலவே இன்னும் நடந்து கொள்வோம். தேசத்தின் அரசியல் சட்டத்தில் உள்ள இயற்கை வளர்ச்சிக்காக வேண்டிய திட்டங்களைக் காலா காலத்தில் கொண்டு வர முடியாமலும் ஐந்தாண்டுத் திட்டங்களை சரியாக வேலை செய்ய முடியாமலும், ரூபாய், அணா, பைசா கணக்கில் ஐந்தாண்டுத் திட்டங்களில் பணம் சேர்க்க ஈடுபட்டிருப்பதாலும் இந்த சூழ்நிலை ஏற்பட்டிருக்கிறது. எல்லாக் காரியங்களிலும் எதிர் கட்சிகளோடு கலந்து சேர்ந்து செய்யவேண்டும் என்ற பெருந்தன்மைக் கொள்கையைத் தங்கள் கட்சி நலனுக்குப் பயன்படுத்திக் கொள்ள முற்படுவதால் சர்க்கார் ஒரு திட்டவட்டமான கொள்கையைக் கையாள நேரிடாமல் போய்விடுகிறது. ஆளும் கட்சி ஆளும் கட்சியாகத் தான் இருக்க முடியும். எதிர் கட்சி எதிர் கட்சியாகத்தான் இக்க முடியும் மக்களின் வருங்காலம் நன்றாக இருக்க வேண்டுமானால் அகில ருஇந்திய சர்க்காரின் கொள்கையை விட்டுக் கொடுக்கக் கூடாது என்று கேட்டுக் கொள்கிறேன். நம் ராஜ்யத்தில் ஹிந்தியைப் பரப்புவதில் நாம் பின்னடைந்து விட்டோம். இப்போதாவது நல்ல முறையில் பரப்புவதற்கு நல்ல திட்டத்தை வகுத்து ஒரு குறிப்பிட்ட கால வரம்பிற்குள் ஹிந்தியை பாரதத்தின் ஆட்சி மொழியாக ஏற்படுத்த வேண்டும் என்றும், அப்படி நம் சர்க்காரிலும், பாடசாலைகளிலும் ஹிந்தியை கட்டாய பாடமாக ஏற்படுத்த வேண்டுமென்றும் கேட்டுக்கொள்கிறேன்.

மேலும் கவர்னர் உரையிலே, நீர்ப்பாசனம், மற்றும் மின்சாரம் முதலியவைகளை நன்கு பயன்படுத்திக் கொள்ளவேண்டுமென்று சொல்லியிருக்கிறார். மின்சார கட்டுப்பாடு நம் நாட்டில் ஏற்பட்டிருக்கிறது. நமக்கு வேண்டிய மின்சாரத்தை மைசூரிலிருந்து பெறுவதற்கு ஏற்பாடுகளைச் செய்து தட்டுப் பாட்டைப் போக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அது தவிர, மக்கள் ஆவலுடன் நெடு நாளாக எதிர் பார்த்திருந்த நில உடைமைக்கு வரம்பு கட்டும் சட்டம் இடைக்காலச் சட்டமாகக் கொண்டு வர ஏற்பாடு செய்யப்படுமென்று சொல்லப்பட்டிருக்கிறது மக்கள் வெகு ஆவலுடன் எதிர்பார்த்திருந்தது இந்தச் சட்டம். இந்தச் சட்டம் இடைக்காலச் சட்டமாக இருக்க வேண்டியதன் அவசியத்தை ஆராயவேண்டும். ஒரு பெரிய சட்டம் ஏற்படுவதற்கு முன்னால் ஒரு இடைக்கால சட்டம் இருந்தால் அந்தச் சட்டம் சுலபமாக அமுலுக்கு வருவதற்கு வழி உண்டாகும் என்று தெரிவித்துக் கொள்கிறேன். இப்போது வரக்கூடிய சட்டம் லூப் ஹோல்ஸ் இல்லாமல் செய்யவேண்டும். இதற்கு முன்னால் ஜமீந்தாரி ஒழிப்புச் சட்டம் வந்தது. அந்தச் சட்டத்தினால் எவ்வளவு நன்மைகள் வந்தன என்பதை இன்னும் ஆராயவில்லை. அழிந்துவந்த ஜமீன்தாரி முறையிலும் ஜமீந்தாரி ஒழிப்புச் சட்டத்தில் அவர்களுக்கு நஷ்டஈடு கொடுத்து பாதுகாப்பு அளித்த முறையிலும் சர்க்காருக்கும், சோஷலிஸ

12th February 1958] [Sri A. E. Chandrasekhara Nayagar]

சமுதாய அமைப்புக்கும் பாதகமான முறையில் இருந்தது என்று இங்கு குறிப்பிட விரும்புகிறேன். அம்மாதிரி முறை இந்தச் சட்டத்தில் ஏற்படாமல் நல்ல முறையில் ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

மேலும் சிறு நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்க பூமிக்கு அடியில் உள்ள நீர் வழிகளை நன்கு பயன்படுத்தப்படுமென்று கவர்னர் சொல்லியிருக்கிறார். அது சர்க்காரால் பிரத்தியேகமாக கவனிக்கப்படும் என்று சொல்லியிருக்கிறார். சர்க்கார் இந்தக் கொள்கையை அமுலுக்குக் கொண்டுவருவதில் சிக்கல்கள் உண்டு என்று இங்கே குறிப்பிட விரும்புகிறேன். அதை சர்க்கார் சிப்பந்திகள், அமுலுக்குக் கொண்டு வருபவர்கள், பல பழைய சட்டங்களைக் காட்டி சர்க்காருடைய கொள்கை நிறைவேறாமல் செய்து விடுகிறார்கள். ஆகையால் சர்க்கார் இந்த சிப்பந்திகளுக்கு, ஜில்லா அதிகாரிகளுக்கும் மற்றவர்களுக்கும் சர்க்கார் கொள்கையை ஞாபகப்படுத்தி மூன்று மாதங்களுக்கொருமுறை எவ்வளவு தூரம் நிறைவேறியிருக்கிறது என்பதைப் பார்த்து ஆராயவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

மேலும் இப்போது சாதாரணமாக கிராமாந்திரக் கடன் வசதிகள் மிகவும் குறைந்து வருகின்றன. கிராமாந்திரக் கடன் வசதிகள் நல்ல முறையில் அளிக்கவும் கடன் வசதிகளைப் பெருக்கவும் ஏற்படுத்தப்பட்ட சர்வே கமிட்டி ரிப்போர்ட்டை அமுலுக்குக் கொண்டுவரவேண்டும். வட ஆற்காடு ஜில்லாவில் கடன் வசதி மிகவும் குறைவு. அதைப் பெருக்குவதற்கு ஏற்பாடுகள் செய்ய வேண்டும். வட ஆற்காட்டில் உள்ள கைத்தறி நெசவாளர்கள் மிகவும் சங்கடமான நிலையில் இருக்கிறார்கள். இரண்டு லட்சம் தறிகள் கூட்டுறவு முறையில் சேர்ந்திருப்பதாக தெரிவிக்கப்பட்டது. ஆனால் வட ஆற்காடு ஜில்லாவில், 7,200 தான் சேர்ந்திருக்கின்றன. சர்க்கார் பல முறைகளைக் கையாண்டு எல்லாக் கைத்தறிகளையும் கூட்டுறவு முறையில் கொண்டு வந்து நன்மை செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். மேலும் கூட்டுறவு முறை வட ஆற்காடு ஜில்லாவில் பெருகுவதற்கு சர்க்கார் நல்ல ஏற்பாடுகள் செய்ய வேண்டும். கூட்டுறவு முறையில் சேருவதற்கு அங்குள்ள ஹரிஜன மக்களிடம் பங்கு கட்டுவதற்கே பணம் இல்லை. ஆகையால் அவர்களுடைய நன்மைக்காக, ஹரிஜனங்களுக்கும், பிற்பட்ட மக்களுக்கும் ஹரிஜனங்கள் பண்டிலிருந்தாவது பணம் கொடுத்து கூட்டுறவு முறையில் சேருவதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்றும், இதற்கு பிரத்தியேகமாக ஒரு சட்டம் செய்யவேண்டுமென்றும் கேட்டுக்கொள்கிறேன். இத்துடன், கவர்னர் அவர்கள் ஆற்றிய உரைக்கு நன்றி தெரிவிக்கும் பிரேரணையை ஆதரித்து என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

* SRI S. R. MUNUSAMI : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, 4-30 p.m.
கவர்னர் பெருமான் உரையின்மீது பலர் பலவிதமாகப் பேசினார்கள். நான் அவர்களுடைய உரையை ஆதரித்துப் பேசுகிறேன். வந்தவர்களுக்கெல்லாம் வரவேற்பு கொடுத்து வாழவைத்த நாடு இது. பண்டைத் தமிழன் பண்பாட்டை நாம் மறக்க முடியாது. 'மலை கண்டு, நதி கண்டு, நீர்வளம் கண்டு புகழ்வதெல்லாம் நாடாகா; மக்கள் உளம் கண்டு புகழ்வதே நாடாகும்' என்று ஆன்றோர் சொன்னார். அதுதான் தமிழன் பண்பாடு. அந்த பெருந்தன்மையான மனதை மற்றவர்களுக்கு காட்டுகிறோம். ராஜ நீகத்தின் நிலையை எடுத்துக் காட்டுகிறோம். அது நம் பண்டைத் தமிழன் பண்பாடு. அந்த நிலையிலே பெருமான் ஆற்றிய உரையிலே சில திருத்தங்களை நாம் புகுத்தலாம். புகுத்தலாம் என்றால், முதலிலேயே, அடிவைக்கும்பொழுதே அதில் திருத்தம் கொண்டுவருவது என்றால் அது சாத்யமாகாது. ஆட்சி மன்றத்தின் பரிபாலனத்திற்கு வருமுன் எந்த நிலையிலே ஆட்சி நிலை இருக்கிறது என்று அவர்கள் ஆரம்பத்தில் சோதிக்கும் வரையிலே அவர்களுக்கு அவகாசம் கொடுக்க வேண்டும். மற்றவர்களுக்கு தங்களுடைய கட்சியின் வேற்றுமையையும் பகைமையையும் காட்டிக்கொள்ளத் தங்கள் எதிர்கட்சி வாதமே எடுத்துச் சொல்லிக் கொண்டிருந்தால், அதில் திருத்துவதற்கு வசதி கொடுக்காது. நான் ஏற்கெனவே ஆரம்பத்திலே சொன்னேன். ஆளும் கட்சிக்கு மட்டுமல்ல, இங்கு அமர்ந்து இருக்கும் கட்சிகளுக்கும் எதிர்கட்சிகாரர்கள் நாங்கள். அதை இந்த சட்ட அவை உணரவேயில்லை. எங்களுடைய பிரதிநிதிகள் எத்தனை பேர் எப்படி சபையிலே அங்கம் வகிக்கிறார்கள் என்று பாருங்கள். அவர்கள் தான்

[Sri S. R. Munusami] [12th February 1958

எதிர்க்கட்சிக்காரர்கள். அவர்கள் தங்களை ஆதரித்துப் பேசும்பொழுதும், கேள்வியில் போதும் என்ன வருகிறது ? தாழ்த்தப்பட்ட சமூகம் வாழ்விலே, பிற்பட்ட வகுப்பினர் என்று தான் வரும். அதுதான் ஆளும் கட்சிக்கு எதிர்க்கட்சி வாதம் என்று அர்த்தம். இன்றைக்கு நாட்டு பிரிவினை, மொழிப் பிரச்னை இவைகளைப் பற்றி பேசுவதென்றால் நாடு பிரிவினை யாருக்கு ? வாழ்க்கையிலே கொஞ்சம் உயர்ந்தவர்கள், அந்தஸ்திலே கொஞ்சம் உயர்ந்தவர்கள், வகுப்பிலே கொஞ்சம் உயர்ந்தவர்கள், கட்சியிலே கொஞ்சம் உயர்ந்தவர்கள் தான் அதற்காக சண்டை போட்டுக் கொள்ளுகிறார்கள். ஆனால் நாட்டின் பண்பாட்டின்படி நாட்டு மக்கள் நல்ல முறையிலே வாழவேண்டும் என்று எதிர்ப்பார்க்கும் எதிர்க் கட்சியினர் நாங்கள்தான். நாங்கள் அவர்கள் பிரதிநிதிகளாக வந்து மக்கள் குறைகளை எடுத்துக் கூறி, அவைகளை திருத்தி அமைக்க வேண்டும், திருத்திக் கொடுக்க வேண்டும் என்று கேட்போம். நாங்கள் இங்கு மக்கள் பிரதிநிதிகளாக விஜயம் செய்திருக்கிறோம், அங்கம் வகிக்கிறோம். ஆனால் எதிர்க்கட்சிக்காரர்களாக எல்லாவற்றையும் எதிர்ப்பது, கண்டிப்பது என்பது எங்கள் கட்சிக் கொள்கை அல்ல. அதுதான் எங்கள் அரசியல் தந்தை டாக்டர் அம்பேத்கார் திட்டம். வருஷத்திற்கு ஒருமுறை அவர் உரைக்கு வாய்ப்பு கிடைக்கும். அதுபோல் எஸ். ஆர். முனுசுவாமி ஆகிய எனக்கும் அம்மாதிரி வாய்ப்புதான் கிடைக்கிறது. எங்களுடைய குறைகளையும், திட்டங்களையும் அப்பொழுது சொல்லுவோம். சர்க்கார் உணர்ந்தால் உணரட்டும். இல்லையென்றால், மக்கள் உணர்கிறார்கள். வாழ்க்கையில் பிற்பட்டோர் கோரிக்கைகளை. ஆனால், அவர்களையெல்லாம் கூட்டிக்கொண்டு போய் உங்களுடைய ராஜ்யப் போட்டியிலே ஈடுபடுத்தாதீர்கள். ராஜ்யத்தை நீ ஆளுவதா, நான் ஆளுவதா என்ற போட்டியிலே, இனிக்கப்பேசி இழுத்துப் போய் ஈடுபடுத்துவது எதைக்குறிக்கிறது ? உதாரணமாக ஒரு கதையை சொல்லுகிறேன். அவையிலும் அங்கத்தினர்களும் அதிகமாக இல்லை. என்னுடைய வட ஆற்காடு ஜில்லா ஒரு வரண்ட பிரதேசம். அங்கு வாழக்கூடிய நரிகள் இறை கிடைக்கவில்லை என்று ஏங்கி பேச்சுவன்மை வாய்ந்த ஒரு கிழ நரியிடம் போய் இதற்கு என்ன யோசனை என்று கேட்டதாம். அதற்கு அந்த நரி ' இங்கு வசிக்கக்கூடிய நரிகளுக்கு வேண்டிய ஆகாரத்தை நான் சேகரித்துக் கொண்டு வருகிறேன் ' என்று சொல்லி, அது நண்டுகள் வாழும் வளைகள் அருகே போய் ' ஏ வாயில்லா ஜீவன்களே, எங்களுடைய சமூகத்தைச் சேர்ந்த நரிகளெல்லாம் உங்களை கண்ணில் பட்டால் தின்றுவிடுகிறார்கள். வதைக்கிறார்கள். ஆகையால், நாம் எல்லோரும் ஒரு நாட்டிற்கு போய்விடுவோம், என்னுடன் வாருங்கள் ' என்று அழைத்ததாம். ஒரு பெரிய மனிதன், நம் சத்துருக்களின் வகுப்பில் பிறந்தவன் அனுதாபப்பட்டு அழைக்கிறான் என்று உலக அனுபவமறியாத அப்பாவிகள் அதன் பேரில் நம்பிக்கை வைத்து எல்லா நண்டுகளும் வெளியே வந்தன. அடுத்த சிறிது தூரமுள்ள மைதானத்திற்கு நண்டுகள் வந்து சேர்ந்தவுடன் கிழ நரி ஊளையிட்டது. உடனே எல்லா நரிகளும் வந்து நண்டுகளை சூரையாடி விட்டன. உங்களுடைய அரசியல் எதிர்க்கட்சி எப்படி இருக்கிறது ? முதுகுளத்தூரில் கட்சி சண்டை. ஏன்ன ஆயிற்று ?150 வீடுகள் தீயிக்கு இறையாகின. ஹரிஜனங்கள், தாழ்த்தப்பட்ட மக்கள் கொல்லப்பட்டார்கள். அதே போல இன்றைக்கு நேருஜி வந்தபொழுது என்ன ஆயிற்று ? தாழ்த்தப்பட்ட மக்கள் வீடுகள் சூறையாடப்பட்டன. நீ ஆண்டால் என்ன, அவன் ஆண்டால் என்ன, நாடு பிரிந்தால் என்ன, கூடி ஆண்டால் என்ன, எங்களுக்கு நிலைமை மாறப்போவதாகக் காணோம். நாங்கள் சொல்லுகிறோம். நாங்கள் நாடோடியாக வாழ்கிறோம். எங்களுக்கு மொழியைப் பற்றி கவலையில்லை. நாட்டு பிரிவினையைப்பற்றி கவலையில்லை. இன்றைக்கு இருக்கும் ராஜ்யத்திலே நாங்கள் எவ்வளவு செல்வந்தர்களாக வாழ்கிறோம் என்பது தான் எங்கள் கேள்வி. திராவிட நாட்டில் தாழ்த்தப்பட்டவர்கள் எந்த நிலையில் இருக்கப் போகிறோமோ, ' யார் அறிவார் பராபரமே ' என்ற நிலையில் தான் தாழ்த்தப்பட்ட மக்கள் நம்பிக்கை கொள்ளவில்லை. ஆகவே, நாங்கள் இங்கு பிரதிநிதியாக விஜயம் செய்திருக்கிறோம் என்றால், எல்லாவற்றையும் எதிர்ப்பதற்காக எதிர்கட்சியாக இருக்கவில்லை. தாழ்த்தப்பட்ட மக்களுடைய குறைகளைத் தான் எடுத்துச் சொல்லுவோம். எறியும் விளக்குக்கு தூண்டுகோல் ஒன்று வேண்டாமா ?

12th February 1958] [Sri S. R. Munusami]

அந்த வகையில் தான் எஸ். ஆர். முனுசுவாமியும் தாழ்த்தப்பட்ட மக்களின் குறைகளை கொஞ்சம் எடுத்துச் சொல்லுவதற்காக அமர்ந்திருப்பது என அறிமுகப்படுத்துகிறேன். பல கற்களை போட்டு அது மலையாகக் குவிக்கிறார்கள் வழிநடை மாரியாத்தாள் என்று. அம்மாதிரி மாற்றுக் கட்சிகளை எட்டிலே உருவாக்குகிறீர்கள்.

நில சீர்திருத்தம் கொண்டுவரப்போவதாக கவர்னர் பெருமான் கூறியிருக்கிறார். அதிலே தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் பிற்பட்ட மக்களுக்கும் ஏதாவது உரிமை இருக்கிறதா, சொந்தம் இருக்கிறதா என்று பார்த்தால், அதிலே காணோம். ஏனென்றால் அவர்களுக்கு நிலம் சொந்தம் கிடையாது. இருக்கக்கூடிய சர்க்கார நிலங்களையாவது கொடுக்குமா என்றால், அதுவும் இல்லை. இதை பத்து ஆண்டுகளாக சொல்லிக் கொண்டு வருகிறோம். பல முறை சொல்லி யிருக்கிறேன். அடுத்த இரண்டு ஆண்டுகளில் கொடுக்கத் தவறினால் நிலைமை வேறாகும். அடுத்தபடியாக, கையேர் வாரம், மாட்டு வாரம் ஆகிய இரண்டு வாரம்தார்களுக்கு அனு:கூலமாக சட்டம் கொண்டு வந்திருப்பதாக சொல்லப்பட்டிருக்கிறது. அதில் அடங்காத ஒரு புது வாரம் இருக்கிறது. அரக்கோணம் தாலூக்காவில் வேலி, வேமங்களத்தில் அதுதான் பயிலேறு வாரம் என்ற ஒரு புது வாரம் இருக்கிறது. அதாவது 10-க்கு மூன்று வாரம். அது விஷயமாக ஏகாதசி தினத்தன்று ஓரிரவு பூராவும் போய் சமாதானம் செய்தேன். ஆனால் முடிவாகவில்லை. அந்த விஷயமாக உதவி சபாநாயகர் அவர்களை நாடலாம் என்று பார்த்துக் கொண்டிருக்கிறேன். பத்து கலத்திற்கு மூன்று கலம் கொடுக்கவேண்டும். ஆனால் $2\frac{3}{4}$ கலம் தான் கொடுக்கிறார்கள். அந்தக் கால் கலம் கொடுக்க முடியாது என்று சொல்லுகிறார்கள் காஞ்சிபுரம் முதலியார் முதலாளிகள். அங்குள்ளவர்கள் உயில் சீட்டு ஒன்றும் கிடையாது. மந்திரி அவர்கள் கேள்வி நேரத்தின்பொழுது உயில் சீட்டுகள் எல்லா வாரந்தார்களுக்கும் இருப்பதாகச் சொன்னார்கள். அப்படி ஒன்றும் கிடையாது. இதற்காக கேஸ் போட்டுள்ளோம். காஞ்சிபுரத்தில் அண்ணா வரக்கூடிய . . .

DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again to-morrow morning at 8-30.

The House then adjourned.

### V.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

#### A. Statutory Rules, Orders and Notifications.

53. *Notification issued with G.O. Ms. No.* 23; *Home, dated 4th January* 1958, *amending rule* 319 *of the Madras Motor Vehicles Rules*, 1940. [*Laid on the table of the House under section* 133 (3) *of the Motor Vehicles Act*, 1939 (*Central Act IV of* 1939).]

#### B. Reports and other papers.

26. *Report of the Joint Select Committee on the Madras Bhoodan Yagna Bill*, 1957 (*L.A. Bill No.* 15 *of* 1957).